# திருஞானசம்பந்தரும் பிரம்மபுரமும்

ஆசிரியர்
முனைவர் எஸ். பி. சபாரத்தினம்

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்

154, டி.டி.கே.சாலை, சென்னை — 18.

நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| 1) நூலின் பெயர் | : | திருஞானசம்பந்தரும் பிரம்மபுரமும் |
| 2) பொருள் | : | சமய ஆய்வு |
| 3) ஆசிரியர் பெயர் | : | முனைவர். எஸ். பி. சபாரத்தினம். |
| 4) வெளியீட்டெண் | : | 2032 |
| 5) பதிப்பாண்டு | : | 1999 |
| 6) பதிப்பாளர் | : | சை. சி. கழகம். |
| 7) உரிமை | : | ஆசிரியர் |
| 8) மொழி | : | தமிழ் |
| 9) நூலின் அளவு | : | கிரௌன் |
| 10) தாள் | : | 11.6 kg |
| 11) கட்டமைப்பு | : | தாள்கட்டு |
| 12) அச்சு எழுத்து | : | 12pt |
| 13) மொத்தப் பக்கங்கள் | : | 8+168 |
| 14) விலை | : | ரூ.40.00 |
| 15) அச்சிட்டோர் | : | அப்பர் அச்சகம் சென்னை – 108. |
| 16) கணிப்பொறி அச்சு | : | அப்பர் அச்சகம். |

# பதிப்புரை

யோகநெறி என்பது புலன்களை அடக்கி ஒருமுகப்படுத்திக் கடுமையான தவநெறிகளை மேற்கொள்வது என்ற கருத்து பரவலாக மெய்யன்பர்களிடையே நிலவுகின்றது. அவ்வாறன்றி நால்வர் பெருமக்களுள் முதல்வராய சீகாழிச் செல்வரான திருஞானசம்பந்தப்பெருமான் இயற்றிய பதிகங்களைப் பாடினால் – ஓதினால் போதும், சிவவாழ்க்கை கிட்டும் என்ற கருத்தை நிலைநாட்டுவதற்கு எழுந்ததே இந்நூல்.

இதுவரை திருமுறைப் பதிகங்களைப் பக்தி உணர்வுடன் பாடி, ஓதி மகிழ்கின்ற மக்கள் அவை சிவயோக நெறி நின்று தம்முள்ளே சிவமணம் பூக்கச் செய்வதற்கும் உதவும் என்பதை உணர்ந்தாரில்லை. எனவே திருமுறைகளை ஓதி, அவற்றின் வழி சிவாகமப் பொருளை உணர்ந்து, சிவதீட்சை பெற்று ஆன்ம வழிபாட்டிலும் ஆலய வழிபாட்டிலும் மக்கள் இலயிக்க வேண்டுமென்று இந்நூலை சிவாகமச் செல்வர். பேராசிரியர் டாக்டர். சபாரத்தினம் அவர்கள் உருவாக்கியுள்ளார்.

தாம்பிறந்த சீர்காழி என்னும் பிரம்மபுரத்தைச் சம்பந்தப் பெருமான் மூலத்தானமாகவும், யோகத்தானமாகவும் ஆதாரத்தானமாகவும் கொண்டு தாம் சென்ற பிற சிவத்தலங்களைச் சுற்றுப் பிரகாரக் கோட்டங்களாகக் கொண்டு, அவற்றை மூலத்தானமான பிரம்மபுரத்துடன் இணைத்து எவ்வாறு வழிபட்டார் என்பதை நூலாசிரியர் இதில் நன்கு விளக்கியுள்ளார்.

# முன்னுரை

திருமுறைகளை மொழி அடிப்படையிலும் இலக்கிய அடிப்படையிலும் ஆராய்வது ஒரு முறை; தன்னிகரற்ற இறைவாழ்க்கையைச் சாதித்துக் கொடுக்கும் சிவாகமங்களை முறையாகப் பயின்று, சிவதீட்சை, ஆன்மார்த்த வழிபாடு. ஆலயவழிபாடு, தலங்களுக்கும் ஆலயங்களுக்கும் உள்ள தத்துவப் பின்னணி பற்றிய தெளிவான அனுபவம் பெறல் — என வாழ்நெறியைச் செம்மைப்படுத்திக் கொண்டு, மேலான சிவயோக நெறிநின்று, சீவனுக்குள்ளே சிவமணம் பூக்கச் செய்துகொண்டுள்ள பரிபக்குவ நிலையில் திருமுறைகளை அனுபவித்தல் மற்றொரு முறை. திருமுறைகளைப் பொறுத்த வரையில் முதல்வகை ஆய்வுமுறை வளர்ந்துள்ள அளவுக்கு, இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள சிவாகம சிவயோகானுபவ அணுகுமுறை வளர்ச்சிபெறவில்லை என்றே கூறலாம். சிவஞான முனிவருக்குப் பிறகு இந்த அணுகுமுறையில் மிகப்பெரிய தொய்வு ஏற்பட்டுடவிட்டது. இந்த அணுகுமுறையை மேற்கொள்ளும் நல்லுணர்வும் நசித்துப் போய்விட்டது.

சிவஞான முனிவர் தமது மாபாடியத்திலும் சிவஞானபோதச் சிற்றுரையிலும் சித்தியார் உரையிலும் ஆங்காங்கே திருமுறை வரிகளை எடுத்துக் காட்டி, சிவானுபவ பூர்வமான அரிய விளக்கங்களைக் கொடுத்துள்ளார். அந்த விளக்கங்களைத் தொகுத்து ஒருவர் ஆழ்ந்து பயில்வாரேயானால் அவர் மேற்கூறப்பட்ட உயர்ந்ததும் உரியதுமாகிய அணுகுமுறையை எப்படிப் பெறமுடியும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இந்த அணுகுமுறையை மேற்கொண்டு, சிவாகமங் களில் விரித்துக் கூறப்பட்டுள்ள யோக நுட்பங்களின் அடிப்படையிலும், சிற்ப சாத்திரங்கள் கூறும் பிரபஞ்ச விஞ்ஞான நுட்பங்களின் அடிப்படையிலும், திருஞானசம்பந்தப் பெருமான் அருளியுள்ள பிரம்மபுரத் திருப்பதிகங்களின் உட்கோளை ஓரளவுக்கு உணர்த்துவதே இந்நூல்.

ஒவ்வொரு தலமும் தன் அளவில், தன் நிலையில் ஒரு முழுமையான பிரபஞ்சமே. பாடல் பெற்ற தலங்கள் பெருமைக்கு உரியவைதாம். ஐயம் இல்லை. ஆனால் அருட்பேறாகிய இன்ப அனுபவ உணர்வு என்பதைப் பாடல் பெற்ற தலம் வாயிலாகத்தான் பெறமுடியும் என்ற கட்டாயம் இல்லை. தகுந்த மனப்பக்குவம் வாய்க்கப் பெற்றுள்ள ஒருவர் எந்த இடத்திலும் இறையனுபவ உணர்வைப் பெறலாம்; எந்த இடத்திலும் அருட்பேற்றுக்கு உரியவராகலாம்.

# முன்னுரை

திருமுறைகளை மொழி அடிப்படையிலும் இலக்கிய அடிப்படையிலும் ஆராய்வது ஒரு முறை; தன்னிகரற்ற இறைவாழ்க்கையைச் சாதித்துக் கொடுக்கும் சிவாகமங்களை முறையாகப் பயின்று, சிவதீட்சை, ஆன்மார்த்த வழிபாடு. ஆலயவழிபாடு, தலங்களுக்கும் ஆலயங்களுக்கும் உள்ள தத்துவப் பின்னணி பற்றிய தெளிவான அனுபவம் பெறல் – என வாழ்நெறியைச் செம்மைப்படுத்திக் கொண்டு, மேலான சிவயோக நெறிநின்று, சீவனுக்குள்ளே சிவமணம் பூக்கச் செய்துகொண்டுள்ள பரிபக்குவ நிலையில் திருமுறைகளை அனுபவித்தல் மற்றொரு முறை. திருமுறைகளைப் பொறுத்த வரையில் முதல்வகை ஆய்வுமுறை வளர்ந்துள்ள அளவுக்கு, இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள சிவாகம சிவயோகானுபவ அணுகுமுறை வளர்ச்சிபெறவில்லை என்றே கூறலாம். சிவஞான முனிவருக்குப் பிறகு இந்த அணுகுமுறையில் மிகப்பெரிய தொய்வு ஏற்பட்டுடவிட்டது. இந்த அணுகுமுறையை மேற்கொள்ளும் நல்லுணர்வும் நசித்துப் போய்விட்டது.

சிவஞான முனிவர் தமது மாபாடியத்திலும் சிவஞானபோதச் சிற்றுரையிலும் சித்தியார் உரையிலும் ஆங்காங்கே திருமுறை வரிகளை எடுத்துக் காட்டி, சிவானுபவ பூர்வமான அரிய விளக்கங்களைக் கொடுத்துள்ளார். அந்த விளக்கங்களைத் தொகுத்து ஒருவர் ஆழ்ந்து பயில்வாரேயானால் அவர் மேற்கூறப்பட்ட உயர்ந்ததும் உரியதுமாகிய அணுகுமுறையை எப்படிப் பெறமுடியும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இந்த அணுகுமுறையை மேற்கொண்டு, சிவாகமங்களில் விரித்துக் கூறப்பட்டுள்ள யோக நுட்பங்களின் அடிப்படையிலும், சிற்ப சாத்திரங்கள் கூறும் பிரபஞ்ச விஞ்ஞான நுட்பங்களின் அடிப்படையிலும், திருஞானசம்பந்தப் பெருமான் அருளியுள்ள பிரம்மபுரத் திருப்பதிகங்களின் உட்கோளை ஓரளவுக்கு உணர்த்துவதே இந்நூல்.

ஒவ்வொரு தலமும் தன் அளவில், தன் நிலையில் ஒரு முழுமையான பிரபஞ்சமே. பாடல் பெற்ற தலங்கள் பெருமைக்கு உரியவைதாம். ஐயம் இல்லை. ஆனால் அருட்பேறாகிய இன்ப அனுபவ உணர்வு என்பதைப் பாடல் பெற்ற தலம் வாயிலாகத்தான் பெறமுடியும் என்ற கட்டாயம் இல்லை. தகுந்த மனப்பக்குவம் வாய்க்கப் பெற்றுள்ள ஒருவர் எந்த இடத்திலும் இறையனுபவ உணர்வைப் பெறலாம்; எந்த இடத்திலும் அருட்பேற்றுக்கு உரியவராகலாம்.

சற்குரு பாம்பன் சுவாமிகளின் வாழ்க்கை இதற்கு எடுத்துக் காட்டு. அருளனுபவப் பேறு அவருக்குப் ''பிரப்பன் வலசை'' எனப்படும் சிற்றூரில் அன்றோ வாய்த்தது !

ஆலயத்தைத் தன்னுள் மணிபோல் அடக்கிக் கொண்டுள்ள ஒரு தலத்தை எவ்வாறு அணுகுவது? எவ்வாறு பாவிப்பது ? ஒரு தலமே எவ்வாறு முழுப்பிரபஞ்சமாகிறது? பிருதிவி தத்துவத் தொடர்புடையதாக இருந்தும் ஒரு தலம் சிவதத்துவத் தொடர்புடையதாகவும், தத்துவங்களுக்கு அப்பாற்பட்டதாகவும் எவ்வாறு விளங்குகிறது! தோற்றம், ஒடுக்கம் எனும் காலகதிகளுக்கு உட்படுவதாக இருந்தும் ஒருதலம். தோற்றமும் ஒடுக்கமும் நீத்த காலாதீதப் பெருநிலைக்கு உரியதாக எவ்வாறு விளங்குகிறது ! தூலநிலையில் இருந்தாலும் ஒருதலம் சூக்கும நிலைக்கும் உரியதாகி, சூக்கும உடல் தொடர்பான ஆதார நிலைகளை எவ்வாறு செம்மைப் படுத்திச் சிவமயமாக ஆக்குகிறது? – என இவ்வாறு பல்வேறுபட்ட கோணங்களில் ஒரு தலத்தை அனுபவிக்கக் கூடிய சிவ–ஆன்மயோக நெறியை நமக்குத் தமிழில் உணர்த்திய அருளிய முதல் குருமகான் திருஞானசம்பந்தரே. அவர் பிரம்மபுரம் எனப்படும் சீகாழித் தலத்தை மேற்கூறப்பட்ட பல்வேறு நிலைகளில் கண்டுணர்ந்து சிவானுபவத்தில் திளைத்து 'மாறிலா மலர்ச்சியில்' திகழ்ந்து இருந்த பான்மை இந்நூலில் சிவாகமக் கோட்பாடுகளின் அடிப்படையில் விளக்கிக் காட்டப்படுகின்றது.

அருளனுபவ நெறியில் தேவாரத் திருப்பதிகங்களைத் துய்ப்பதற்கு சிவாகமங்கள் எவ்வாறு பல்வேறு நுட்பங்களை உணர்த்தி உரிய வழி காட்டுகின்றன என்பதை இந்நூற்பயில்வார் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

சிவாகமங்கள் உலகம் முழுமைக்குமே உரியவை என்றாலும் அவை தமிழ்நாட்டு உடைமை என்பதை மறந்துவிடக் கூடாது. பல்லாயிரக் கணக்கில் இன்று கிடைக்கும் சித்தர்களின் தமிழ்ப் பாடல்கள் இந்த உண்மையை ஆணித்தரமாகவே நிறுவி விடுகின்றன. கால எல்லையைக் கடந்தும் தேச எல்லையைக் கடந்தும் நித்தச் சுத்தர்களாக விளங்கும் சித்தர்கள் அனைவரும், சிவாகம நெறிப்பட்டவர்கள் என்பதை அவர்களின் தமிழ்ப் பாடல்கள் மூலம் இன்று தெளிவாக விளங்கிக் கொள்ள முடிகிறது.

மொழியை முக்கியமாகக் கொள்ளாமல், மொழி கூறும் பொருளை முக்கியமாகக் கொண்டால், சிவாகமங்களைப் பற்றிய மொழிபேத உணர்வு முழுவதுமாக நீங்கிவிடும்.

சொல் பிரமாணம் அன்று; சொல் உணர்த்தும் பொருள்தான் பிரமாணம் எனும் உணர்வு இன்று முகிழ்க்க வேண்டும். "Language as such , - be it Tamil or Sanskrit or any other language - is not a valid proof. What is conveyed, what is imparted is the valid proof." மேலைநாட்டுத் தத்துவ உலகில் இன்று வலுப்பெற்று வரும் கோட்பாடு இது. எது உணர்த்துகிறது யார் உணர்த்துகிறார்? என்பது முக்கியமோ, பிரமாணமோ அல்ல. என்ன உணர்த்தப்படுகிறது என்பதே முக்கியம்; பிரமாணம். இதை மறந்து, மொழிபேதம் கொண்டு சிவாகமங்களைப் புறக்கணித்தல் என்பது, மற்றைய நாட்டினர்க்கு எப்படியோ, தமிழ்நாட்டு மக்களுக்கு மிகப் பெரிய ஆன்மிக இழப்பைத் தரும். இத்தகைய இழப்பு நேர்ந்துவிடக் கூடாது, திருமுறைகளும் சிவாகமங்களும் இணையாக ஒருமுகப்பட்ட நோக்கத்துடன் பயிலப்பட வேண்டும் என்பதை உணர்த்துவதற்காகவே இத்தகைய நூல் எழுதும் முயற்சி மேற்கொள்ளப் பட்டது.

பிரம்மபுரத்துக்கு ஏன் பன்னிரண்டு பெயர்கள் ஏற்பட வேண்டும்? "நுமது ஊர் எது" என்று கேட்ட பாண்டிய மன்னனுக்கு விடை கூறும் முகமாகத் திருஞானசம்பந்தர் ஏன் அந்தப் பன்னிரண்டு பெயர்களையும் மாற்றி மாற்றிக் கூறவேண்டும்? ஆலய மூல இறைவனை நோக்கியனவாக அல்லாமல் தலத்தைப் புகழ்வனவாகவே திருஞானசம்பந்தரின் திருப்பதிகங்களுள் பெரும்பாலானவை திகழ்வதற்குக் காரணம் என்ன? இவை போன்ற கேள்விகளுக்குரிய யோகானுபவ பூர்வமான விடைகளைச் சிவாகமங்களும் சிற்ப நூல்களும் தெளிவாக உணர்த்தின. அந்த விடைகளை விளக்கிக் கூறும் முறையில் இந்நூல் உருவாக்கப் பட்டுள்ளது.

அன்பர்கள் இந்நூலை ஆழ்ந்து பயின்று உண்மை உணர்ந்து இன்புறுமாறும், மேலும் பல விளக்கங்கள் தேவை இருப்பின் தெரிவித்து அருளுமாறும் வேண்டிக் கொள்கிறேன்.

அன்பன்

ஆகம, மயனியல் பேராசிரியர் சபாரத்தினம்.

இயக்குநர், இந்தியப் பண்பாடு ஆய்வுநிறுவனம்,
(இந்திய மரபுசார் விஞ்ஞான – தொழில்நுட்ப – பண்பாட்டு
உலகப்பல்கலைக்கழகம்)
சென்னை – 33.

# உள்ளுறை

# 1

## பெருமை பெற்ற பிரம்மபுரம்

திருநெறிய தமிழ்நெறி இது என முத்தமிழால் முன்னிறுத்திக் காட்டிய மூலகுரு எனும் தனிப்பெரும் நிலையில் காலாதீதமாகப் பேரொளி கொண்டு விளங்குபவர் திருஞானசம்பந்தப் பெருமான். இப் பெருமானின் திருஅவதாரம், சீலம் இணைந்த சீரான வளர்ச்சி, அருட்பேறு, அருள்நிகழ்ச்சிகள், சிவவாழ்க்கை யின் முழுமை நிலையைக் காட்டுகின்ற ஒளிக்கலப்பு (நல்லூர்ப் பெருமண நிகழ்ச்சி) - இவை அனைத்துமே, உலகியல் நோக்கில் காலகதிக்கு உட்பட்டவை எனினும் அருளியல் நோக்கில் காலத்தின் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டவை. அருளாளர் வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் காலாதீதம் எனப்படும் தனித்த நோக்கிலேயே உணரவேண்டும். காரணம், இந்நிகழ்ச்சிகள் அனைத்தும், மாசு கலவாததும் மாசினை நீக்க வல்லதுமாகிய சிவான்ம வாழ்க்கையின் சீர்மைக்குரிய கூறுகளாகும். இத்தகைய சிவான்ம

வாழ்க்கை, காலகதிக்கு உட்படாததன்றோ! நிகழும் ஒவ்வோர் அருள் நிகழ்ச்சியும் காலப்பிரிவுகளுக்கு உட்படாத தனிமங்கள நேரத்தையும், அந்நேரத்தோடு அந்நிகழ்ச்சி வாயிலாக நம்மை இணைத்துப் பார்க்கும் யோகானுபவப் பயிற்சியையும் சுட்டிக் காட்டுவ தாகவே கொள்ள வேண்டும். ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிகழ்வதாயினும் அக்காலத்தின் காலா தீதமான தன்மையை உணர்த்துவது எதுவோ அதுதான் அருள்நிகழ்ச்சி. இத்தகைய அருள்நிகழ்ச்சியை ஆழ்ந்து சிந்திப்பதே ஒரு சிறப்பான யோகப் பயிற்சிதான்.

இறைவன் தியானத்துக்குரிய பொருளாக விளங்குகிறான் எனில் அவ்வாறு அவன் விளங்குவது வடிவத்தால் மட்டுமன்று; அருளை அடிப்படையாகக் கொண்ட செயல்களாலும் தான். அவனது வடிவத்தைத் தியானிப்பது போன்று, அவனது செயல்களையும் தியானிக்க வேண்டும். தேவாரத் திருமுறைகளில் வடிவ வருணனை, அருட்செயல் வருணனை ஆகிய இரண்டும், பூஞ்சோலைப் பூக்கள் போன்று பல்கியும் மண்டியும் திகழ்கின்றமை இக்காரணத்தால்தான்.

அருள்நிகழ்ச்சிகளின் கோர்வையாகவும், அருட் பேறுகளின் திரட்சிமயமாகவும் திருஞானசம்பந்தப் பெருமானின் சிவவாழ்க்கை திகழ்கிறது. எனவே, இத்தகைய சிவவாழ்க்கைப் பொலிவுடைய திருஞான சம்பந்தப் பெருமானை இடையறாது சிந்திக்கும் செயல் ஒன்றே பல்வகைப்பட்ட கடுமையான தவநெறிகளை மேற்கொள்வதால் வரும் பெரும்பயனை அளிக்க

வல்லதாகிறது என நம்பியாண்டார் நம்பிகள் கூறுகின்றார்.

*"புண்ணிய நாடு புகுவதற் காகப் புலன் அடக்கி*
*எண்ணிய செய்தொழில் நிற்பதெல் லாரும்இன்று யான்எனக்கு*
*நண்ணிய செய்தொழில் ஞானசம் பந்தனை நந்தமர்நீர்க்*
*கண்ணியல் மாடக் கழுமலத் தானைக் கருதுவதே"*

—ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி: 50

இந்தப் பாடலில் புண்ணிய நாடு என்பது தேவலோகத்தைக் குறிப்பதன்று. புண்ணியம் என்பது வெண்மையைக் குறிக்கும். ஆதலால், வெண்மை, வெளிமை, வெளிப்பேறு, சிதாகாசத் தேசம் எனப் பொருள்தந்து அருள்வெளித் தலத்தைக் குறிக்கும். இந்நிலையை அடைவது மிகவும் அரிது. "புலன்களை அடக்கி ஒருமுகப்படுத்தியும் ஐக்கியப்படுத்தியும் செய்வதாகிய தாரணை முதலான யோகப் பயிற்சிகளில் தேர்ச்சி பெற்றால் அன்றி இப்பெருநிலையை அடைய இயலாது. ஆனால் எனக்கு ஓர் எளிய வழி கிடைத்துள்ளது. திருஞான சம்பந்தப் பெருமானை இடையறாது தியானித்து இருப்பதே எனக்குக் கிடைத்துள்ள எளிய வழி" என்று திட நம்பிக்கையுடன் கூறுகின்றார் நம்பியாண்டார் நம்பிகள். மற்றொரு பாடலிலும் இந்த நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றார் நம்பிகள்:

*"உறவும் பொருளும்ஒண் போகமும் கல்வியும் கல்வியுற்ற*
*துறவும் துறவுப்பயனும் எனக்குச் சுழிந்தபுனல்*

*புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்பும் ததும்பும் வண்டின்*
*நறவும் பொழில் எழில் காழியர்கோன் திரு நாமங்களே"*

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி: 58

எனவே, சிவப்பெருநிலையைத் திடனுறப் பொருந்த விழைவோர்க்கு எளிதாகக் கிடைத்துள்ள வழி, திருஞான சம்பந்தப் பெருமானை ஆழ்ந்து தியானித்து இருத்தலே என்பது புலனாகிறது.

இறைமை என்பதற்குரிய பல லட்சணங்களுள் முதன்மையானதான பிரபுத்துவம் என்பதை இந்நிலவுலகில் திருஞானசம்பந்தப் பெருமானிடத்திலே காண்கின்றார் அருணகிரிப் பெருமான்.

*"புமியதனிற் பிரபுவான புகலியில்வித்தகர் போல*
*அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக் கருள்வாயே"*

என வேண்டுகின்றார் அவர். பிரபு என்பது மிகவும் ஆழ்ந்த பொருளுடைய சொல். சைவாகம நூல் பிரபு என்பதை இவ்வாறு விளக்குகிறது: "கர்த்தும் அகர்த்தும் அன்யதா கர்த்தும் சக்த:" இதன் பொருள்: "முறைப்படி செய்வதற்கும், செய்யாமல் இருப்பதற்கும், முந்தைய முறையை மாற்றி வேறு முறையில் செய்வதற்கும் ஆற்றல் உடையவர் பிரபு."

பிரபு என்னும் சிறப்புப் பெயருக்கு உரியவரின் மூன்று வகைப்பட்ட ஆற்றல்களை ஆகமம் உணர்த்து கிறது.

1. முறைப்படி செய்வதற்குரிய ஆற்றல்
2. செய்யாமல், செயலற்று இருப்பதற்குரிய ஆற்றல்

3. முந்தைய நியதி முறையை மாற்றி வேறுவிதமாகச் செயல்படுதற்குரிய ஆற்றல்

இவற்றுள் முறைப்படி செய்வதற்குரிய ஆற்றல் என்பது 'இன்னது செய்தால், இன்னது பயன்' என்னும் நியதிக்கேற்ப அவரவர்க்குரிய வினைப்பயன்களை அனுசரித்து, அனுபவங்களைக் கொடுத்து பந்தங்களி லிருந்து விடுவித்தல். இரண்டாவதாகிய 'செய்யாமல் இருத்தல்' என்பதை நன்கு விளங்கிக் கொள்ள வேண்டும். செய்யாமல் இருத்தல் என்றால் ஒன்றையுமே செய்யாமல் இருத்தல் எனப் பொருள் கொள்ளக்கூடாது. இறைவன் வறிதே இருந்ததாக வரலாறே கிடையாது. பிரபஞ்சங்களெல்லாம் தத்தம் காரணத்தில் ஒடுங்கி இருக்கும் **சுவாப காலம்** எனப்படும் ஒடுக்க காலத்தில் கூட இறைவன் ஐந்தொழில்களிலும் ஈடுபட்டிருக்கிறான் என மிருகேந்திர ஆகமம் கூறுகிறது. எனவே, எதையுமே செய்யாமல் இருக்கும் நிலை இறைவனுக்கு இல்லை.

இன்னது செய்தால், இன்னது பயன் என்பது விதிமுறைதான். தொடர்ந்து மூன்றாண்டு காலம் சோமவாரம் அனுட்டித்தால் குபேரனுக்கு நிகரான செல்வ வளத்தோடு வாழலாம் என்பது உபாசனை நெறிமுறை. ஆனால் ஒருவர் இவ்வாறு மூன்றாண்டு காலம் அனுட்டித்து விட்டதாலேயே, குபேர சம்பத்துக்குரிய பேற்றை, இறைவனிடம் உரிமை கோரிப் பெற முடியாது. அருட்பேற்றை எப்பொழுதுமே உரிமை கொண்டாடிப் பெறமுடியாது. விதிமுறைகளை

அனுசரித்து ஒருவர் செயல்களைச் செய்தாலும், அவற்றுக்குரிய பயனை அருள்வதற்கும் அருளாமல் இருப்பதற்கும் வல்லவர் என்பது 'செய்யாமல் இருத்தல்' என்பதன் பொருள். அருள்வதற்கு இறைவனின் கருணைச் சக்தி முந்தி நின்றாலும் சில பல காரணங் களை உத்தேசித்து அருளாமல் இருப்பதற்காக அவன் தனது கருணை மயமான உள்ளத்தைக் கல்மயமாக ஆக்கிக் கொள்வதற்காக ஆற்றல் தேவைப்படுகிறது. அவன் ஏன் அவ்வாறு அருளாமல் இருக்கவேண்டும்? என்ற ஆய்வு, அறிவாராய்ச்சிக்கு உட்படாத ஒன்று. ஸர்வஸ்வாரம் எனப்படும் யாகத்தைச் செய்தால், இந்த உடலோடு சுவர்க்கம் செல்லலாம் என்பது விதி. ஆனால் அத்தகைய யாகத்தைப் பரிபூர்ணமாகச் செய்து முடித்த வேதசர்மன் என்பானுக்கு இறைவன் அந்தப் பயனை அருளவில்லையே! ஏன் அருளவில்லை என்பதற்கு நாம் காரணம் கற்பிக்க முடியாது. செய்யாமல் இருத்தல் என்பது இதுபோன்று நிகழ்ச்சி களைக் குறிப்பதாகும்.

அடுத்து, 'முந்தைய விதி முறையை மாற்றி வேறு விதமாகச் செய்வதற்குரிய ஆற்றல்' என்பது. சன்னிதியில் எச்சில் முதலான அனுசிதங்கள் செய்தால் தண்டனை என உள்ள முந்தைய விதியை மாற்றி, அனுசிதங்கள் செய்த திண்ணனார்க்கு ஆறே நாளில், பிறரால் பெறற்கரிய பேற்றை அருளவில்லையா? இறைவன் விசார சருமருக்கு அருள்புரிந்து சண்டேசப் பதவியை அளித்ததும் இந்த ஆற்றல் வகையில் அடங்கும். இயல்பான அமைப்பு முறையை -

விதிமுறையை - மாற்றி வேறு முறையில் அமைத்துக் கொடுத்தல், விதித்துக் கொடுத்தல் என்பதும் இவ்வகை ஆற்றலே.

அருணகிரிப் பெருமான் திருஞான சம்பந்தரிடத்திலே இந்த மூன்று வகை ஆற்றல்களையும் காண்கின்றார். மழவனின் மகளுக்கு உற்ற முயலகன் என்னும் நோயை நீக்கியது; 'திருமாகறலில் விடம் தீர்த்தது'; 'கொடிமாடச் செங்குன்றூரில் குளிர் நடுக்கம் தீர்த்தது — இவை முதலான அருட்செயல்களை முறைப்படிச் செய்தமை முதலாவது ஆற்றல்; அமணர்களின் கழுவேற்ற நிகழ்ச்சியைத் தடுத்தற்குரிய கருணை ஆற்றல் இருந்தும் அந்நிகழ்ச்சியைத் தடுக்காமல் இருந்ததும் மற்றும் இதனை ஒத்த செயல்களும் இரண்டாவது ஆற்றலாகிய 'செய்யாமல் இருத்தல்' என்பதைக் குறிக்கும். ஆண்பனை என்ற இயற்கையான அமைப்பை மாற்றிப் பெண்பனையாக ஆக்கியமை; நனிபள்ளியின் பாலைச்சூழலை நெய்தல் நிலமாக மாற்றியமை; அனல்வாதத்தில் நெருப்பின் தன்மையை மாற்றியமை என இவை போன்ற அருட் செயல்கள் எல்லாம் மூன்றாவது ஆற்றலைப் புலப் படுத்தும். (அன்யதா கர்த்ருத்வம்)

பூமியதனில் பிரபுவாக விளங்கிய திருஞான சம்பந்தப் பெருமான், சிவத்தினின்றும் வேறாகாதவர் என்பது அவரது திருவாக்காலேயே உணரப்படுகிறது.

"கானலில் விரைமலர் விம்மு காழியான்
வானவன் கருக்குடி மைந்தன் தன்னொளி

ஆனமெய்ஞ் ஞானசம் பந்தன் சொல்லிய
ஊனமில் மொழிவலார்க்கு உயரும் இன்பமே"

—மூன்றாம் திருமுறை

இத்திருப்பாடலில் கருக்குடி மைந்தன் என்பது சிவபெருமானைக் குறிக்கும். சிவபெருமானின் ஒளியே யாகிய ஞானசம்பந்தன் என்பதால் திருஞானசம்பந்தப் பெருமானின் சொரூபநிலையைத் தெளிவாக உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறு நிலப்பரப்பு முழுமைக்கும் பிரபு என இறையாற்றல் வாய்ந்து, தியானத்துக்குரிய மூல மூர்த்தியாகவும் சிவ ஒளியாகவும் திகழ்ந்த திருஞான சம்பந்தப்பெருமானின் அருள்மயமான வாழ்க்கை யோடு இரண்டறக் கலந்து விளங்கிய பெருமைக்கு உரிய தலம் சீகாழி எனப்படும் பிரம்மபுரம். இது திருஞானசம்பந்தப் பெருமானின் அவதாரத் தலம் மட்டுமன்று; ஆதியும் அந்தமும் அற்று, **அவர்க்கு உரியதாய் விளங்கும் மூலத் தலமும் ஆகும்; மூல இலக்கியங்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்த மூலத்தானமும் ஆகும்.**

திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய பதிகங்களுள் இன்று கிடைப்பனவற்றுள் பிரம்மபுரம் என்னும் தலத்துக்கு உரியனவாக அறுபத்தேழு பதிகங்கள் காணப்படுகின்றன. வேறு எந்தத் தலத்துக்கும் இந்த அளவுக்கு அதிகமான பதிகங்கள் கிடைக்கவில்லை. பிரம்மபுரத்தை மூலத் தலமாகக் கொண்டு திருஞானசம்பந்தப் பெருமான் அத்தலத்தில்

வாழ்ந்த காலம் அதிகம் என்பதால், பிரம்மபுரத்துக்கு உரியனவாக அவர் பாடியுள்ள பதிகங்கள் மேலும் பல இருந்திருக்கலாம்.

திருஞானசம்பந்தப் பெருமான் திருக்கோலக்கா எனும் தலத்துக்குச் சென்று, பிரம்மபுரம் மீண்டருளிய நிகழ்ச்சியை முதல் தலப்பயணம் எனக்கொண்டால், பெருமான் மேற்கொண்ட தலப்பயணங்கள் ஐந்து.

சேக்கிழார் பெருமானின் திருத்தொண்டர் புராணத்தில் இடம் பெற்றுள்ள திருஞானசம்பந்தர் புராணத்தில் தலப்பயணங்கள் ஐந்தையும் இவ்வாறு காணலாம்:

திருஞானசம்பந்தர் புராணப் பாடல்கள் 100-108 முதல் தலப் பயண விளக்கம்

" 112-127 இரண்டாவது தலப் பயண விளக்கம்

" 129-130 மூன்றாவது தலப் பயண விளக்கம்

" 142-260 நான்காவது தலப் பயண விளக்கம்

" 279-1152 ஐந்தாவது தலப் பயண விளக்கம்

இந்த ஐந்து தலப்பயணங்களும் பிரம்மபுரத்திலே தொடங்கி, பிரம்மபுரத்திலேயே நிறைவுறுபவை. தலப்பயணங்களின் இடைப்பட்ட காலத்திலே அவர் பிரம்மபுரத்திலே 'மழவிளங்கோலக்' காட்சி கொடுத்தும், நூற்றுக்கணக்கான பதிகங்கள் பாடியும் திகழ்ந்திருந்தார். "பரமர்தாள் பணிந்தேத்திப் பயிலும் நாள் (267) என இடைப்பட்ட காலத்தைக் குறிப்பார் சேக்கிழார்.

நான்காவது தலப்பயணத்துக்கும் ஐந்தாவது தலப் பயணத்துக்கும் இடைப்பட்ட காலத்தில், வாக்கின் தனிமன்னராகிய திருநாவுக்கரசர் திருஞான சம்பந்தரைக் கண்டு இறைஞ்சிப் பிரியாத நண்பொடு சென்ற பின்னர், திருஞான சம்பந்தப் பெருமான் எத்தகைய பதிகங்கள் பாடியருளினார் எனச் சேக்கிழார் பெருமான் தமக்கே உரிய தனித்திறத்தால் வெளிப்படுத்துகின்றார்:

*"வாக்கின் தனிமன்னர் ஏக மாறாத் திருவுளத் தோடும்*
*பூக்கமழ் பண்ணைகள் சூழ்ந்த புகலியின் மீண்டும் புகுந்து*
*தேக்கிய மாமறை வெள்ளத் திருத்தோணி வீற்றிருந் தாரைத்*
*தூக்கிய தமிழ்மாலை பாடித் தொழுதங் குறைகின்ற நாளில்*

*"செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்க ளால்மொழி மாற்றும்*
*வந்தசொற் சீர்மாலை மாற்றும் வழிமொழி எல்லா மடக்கும்*
*சந்த இயமகம் ஏகபாதம் தமிழ்இருக்குக் குறள்சாத்தி*
*எந்தைக்கு எழுகூற் றிருக்கை ஈரடி ஈரடி வைப்பு*

*"நாலடி மேல்வைப்பு மேன்மை நடையின் முடுகும் இராகம்*
*சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிக*
*மூல இலக்கிய மாக எல்லாப் பொருள்கோளும் முற்ற*
*ஞாலத் துயர்காழி யாரைப் பாடினார் ஞான சம்பந்தர்"*

–திருானசம்பந்தர் புராணம் 275–277

திருஞான சம்பந்தப் பெருமான் இந்தக் காலகட்டத்தில் பாடியருளிய பதிகங்களை இரண்டு வகையாகப் பிரிக்கின்றார் சேக்கிழார். பிரம்மபுரத்துக் குரிய பன்னிரண்டு பெயர்களையும் வெளிப்படுத்தும் தனித்தனியான பதிகங்கள் ஒருவகை. (இப்பதிகங்களுள் ஒருசிலவே நமக்கு இப்பொழுது கிடைக்கின்றன.)

மொழிமாற்று, மாலைமாற்று, மடக்கு, இயமகம், இராகம், திருவெழுகூற்றிருக்கை, ஏகபாதம் முதலான சித்திரக் கவித்திறங்களால் உருவாகிய பதிகங்கள் மற்றொரு வகை. சித்திரக் கவிப் பதிகங்களை சேக்கிழார் மூல இலக்கியம் எனச் சிறப்பித்துக் கூறுவதில் எவ்வளவு ஆழ்மை இருக்கிறது என்பதை அடியார்கள் அனுபவ பூர்வமாக உணரவேண்டும். கவி ஆய்வு என்ற இலக்கிய ஆராய்ச்சியை இங்கே வைத்துக் கொள்ளக் கூடாது. மூல இலக்கியப் பதிகங்களின் ஆற்றலை மொழிக்கும் அப்பால் நின்று சிவபூஜை நெறியில் உணர வேண்டும். அருள் அனுபவம் பெற வேண்டும்.

பிரம்மபுரம், திருஞானசம்பந்தப் பெருமானுக் குரிய மூலத்தலம் என முன்னர்க் கூறப்பட்டது. பெருமானின் தூல வடிவம். சூக்கும வடிவம் ஆகிய இரண்டிலும் பிரம்மபுரம் மூலத்தலமாகவே பொருந்தி விளங்குகிறது. திருஞான சம்பந்தப் பெருமானின் தனித்தன்மை ஒவ்வொரு பதிகத்திலும் இறுதியில் உள்ள திருக்கடைக்காப்பு என்பதில் சுடர்விட்டு விளங்குகிறது. பதிகப் பயனைக் கூறுவதற்காக மட்டும் அவர் திருக் கடைக்காப்பு என்பதைப் பாடவில்லை. அதில் மற்றோர் உண்மையையும் புலப்படுத்துகின்றார். ஒவ்வொரு தலத்தையும் பிரம்மபுரத்தோடு இணைத்து. ஐக்கியப்படுத்திக் காணும் யோக சீலத்தை அவர் திருக்கடைக்காப்பில் வெளிப்படுத்துகின்றார். சிவாலயத்தில் வெளிப்பிரகாரங்களில் உள்ள தெய்வ மூர்த்தங்கள் மூலத்தானத்திலுள்ள சிவலிங்க

வடிவத்துடன் தொடர்புடையவையாக விளங்குவதைப் போன்று ஏனைய தலங்கள் அனைத்தும் பிரம்மபுரத்தோடு தொடர்புடையவையாக விளங்குவதைத் தாம் உணர்ந்து அனுபவிக்கும் திறத்தை அவர் திருக்கடைக் காப்பில் வெளிப்படுத்துகின்றார்.

*"அரவார்புனல் அன்பிலாலந்துறைமேல்*
*கரவாதவர் காழியுள் ஞானசம் பந்தன்*
*பரவார் தமிழ் பத்து."* (முதல் திருமுறை)

இங்கு அன்பிலாலம்துறை என்னும் தலத்துடன், காழிப்பெயர் இணைக்கப்படுகிறது.

*"வரைவளம்கவர் காவிரி வடகரை மாந்துறை உறைவானைச்*
*சிரபுரம்பதி உடையவன் கவுணியன் செழுமறை நிறைநாவன்*
*அரவெனும் பணிவல்லவன் ஞானசம்பந்தன் அன்புறுமாலை"*
(இரண்டாம் திருமுறை)

இங்கு திருமாந்துறை என்னும் தலத்துடன், சிரபுரப் பெயர் (பிரம்மபுரம்) இணைக்கப்படுகிறது.

*'ஆழியானும் காண்கிலா ஆனைக்காவில் அண்ணலைக்*
*காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை"*
(மூன்றாம் திருமுறை)

இங்கு ஆனைக்கா எனும் தலப்பெயர் காழிப் பெயருடன் இணைக்கப்படுகிறது. (காழி - சீகாழி - பிரம்மபுரம்) இவ்வாறே ஏனைய தலங்கள் பலவும் பிரம்மபுரத்துடன் ஒன்றித்து உரைக்கப்படுகின்றன.

ஏனைய தலங்களில் இறைவனைத் தரிசிக்கும் பொழுதும் திருஞான சம்பந்தர், தோணிபுரத்து இறைவனின் சுடர்த் தோற்றத்தையும் சுந்தரத்

தோற்றத்தையும் காண்கின்றார். திருவீழிமிழலை நிகழ்ச்சியை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

திருஞான சம்பந்தப் பெருமான் திருநாவுக்கரசர் பெருந்தகையுடன் திருவீழிமிழலைத் தலத்தில் தங்கி இருந்தபொழுது, சீகாழி அந்தணர்கள் வந்தனர். திருஞான சம்பந்தரைத் தரிசனம் செய்து தங்கள் ஊருக்கு மீள எழுந்தருளுமாறு வேண்டினர். "நன்று. தோணி நாதரை வணங்க, மிழலை இறைவனின் அருள்பெற்றுப் போகலாம்" என்று வாய்மலர்ந்தார் ஞான சம்பந்தர். ஆனால் அன்றைய இரவு, மிழலை ஈசன் திருஞான சம்பந்தரின் கனவில் எழுந்தருளி, "அன்ப! தோணிபுரத்தில் நாம் எழுந்தருளும் காட்சியை, வீழிமிழலையின் விண்ணிழி விமானத்திலே காட்டக் காண்க" என்று கூறினார். அங்ஙனமே மறுநாள் அவர் மிழலைத் திருக்கோயிலிலே தோணி புரத்தீசனின் திருக்காட்சியைக் கண்டு அனுபவித்து, சிரபுரத்து அந்தணர்களிடம் தெரிவித்தார்: "பிரம்ம புரத்துப் பெரியான், பெருமாட்டியோடும் எழுந்தருளி யுள்ள எல்லாத் தலங்களுக்கும் சென்று, திருக்கோலம் கண்டு பணிந்து போற்றுவதையே இறைவன் விதிக்கின்றார். எனவேதான் பிரம்மபுரத்திலே அவர் கொண்ட கோலத்தை இங்கே மிழலையிலும் காட்டி அருளினர். நாம் பிறகு வருகிறோம்" இவ்வாறு கூறி, சிரபுரத்து அந்தணர்களுக்கு விடைகொடுத்து அனுப்பினார்.

*"தோணியில் நாம் அங்கிருந்த வண்ணம்*
*தூமறை வீழி மிழலை தன்னுள்*

சேணுயர் விண்ணின் றிழிந்த இந்தச்
சீர்கொள் விமானத்துக் காட்டுகின்றோம்
பேணும் படியால் அறிதி என்று
பெயர்ந்தருள் செய்யப் பெருந்தவங்கள்
வேணு புரத்தவர் செய்யவந்தார்
விரவும் புளகத் தொடும் உணர்ந்தார்.

"அறிவுற்ற சிந்தைய ராய்எழுந்தே
அதிசயித் துச்சிமேல் அங்கை கூப்பி
வெறியுற்ற கொன்றையி னார்மகிழ்ந்த
விண்ணிழி கோயிலிற் சென்று புக்கு
மறியுற்ற கையரைத் தோணிமேல்முன்
வணங்கும்படி அங்குக் கண்டுவாழ்ந்து
குறியிற் பெருகும் திருப்பதிகம்
குலவிய கொள்கையிற் பாடுகின்றார்.

"மைம்மரு பூங்குழல் என்றெடுத்து
மாறில் பெரும்திருத் தோணிதன்மேல்
கொம்மை முலையினாள் கூடநீடு
கோலம் குலாவு மிழலை தன்னில்
செம்மை தருவிண் ணிழிந்த கோயில்
திகழ்ந்த படியிது என்கொல் என்று
மெய்ம்மை விளங்கும் திருப்பதிகம்
பாடி மகிழ்ந்தனர் வேதவாயர்

"செஞ்சொல் மலர்ந்த திருப்பதிகம்
பாடித் திருக்கடைக் காப்புச்சாத்தி
அஞ்சலி கூப்பி விழுந்தெழுவார்
ஆனந்த வெள்ளம் அலைப்பப் போந்து
மஞ்சிவர் சோலைப் புகலிமேவும்
மாமறை யோர்தமை நோக்கிவாய்மை

நெஞ்சில் நிறைந்த குறிப்பில்வந்த
நீர்மைத் திறத்தை அருள்செய்கின்றார்.

"பிரம புரத்தில் அமர்ந்த முக்கட்
பெரியபிரான்பெரு மாட்டியோடும்
விரவிய தானங்கள் எங்கும் சென்று
விரும்பிய கோலம் பணிந்துபோற்றி
வருவது மேற்கொண்ட காதல்கண்டங்கு
அமர்ந்தவகை இங்கு அளித்ததென்று
தெரிய உரைத்தருள் செய்து நீங்கள்
சிரபுர மாநகர் செல்லும் என்றார்.

—திருஞானசம்பந்தர் புராணம்

மேல் விளக்கப்பட்ட திருவீழிமிழலை நிகழ்ச்சி, திருஞானசம்பந்தரைப் பொறுத்தவரையில் பிரம்மபுரம் ஒரு முக்கிய யோகத் தானமாக, ஆதாரத்தானமாக விளங்குகிறது என்பதைப் புலப்படுத்துகிறது. திருவீழி மிழலைப் பெருமான் எவ்வாறு பிரம்மபுரப் பெரிய பெருமானின்றும் வேறாகாதவரோ அவ்வாறே ஏனைத் தலங்களில் திருக்கோயில் கொண்டுள்ள பெருமானும், பிரம்மபுரீசுவரப் பெருமானின் வேறாகாதவராகவே திருஞானசம்பந்தர்க்குக் காட்சி அளித்திருக்கின்றார். "மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்" எனத் தொடங்கும் திருப்பதிகம் மதுரைத் தலத்தில் பாடப் பட்டது. எனினும் அது கழுமலம் எனப்படும் பிரம்ம புரத்து இறைவனை நோக்கியது என்பதையும் இங்கே எண்ணிப் பார்க்க வேண்டும்.

சிவயோக நெறிப்படி நோக்கும்போது பிரம்மபுரம் திருஞானசம்பந்தப் பெருமானின் உசுவாசமாகவும் (உட்செல்லும் மூச்சாகவும்) நிசுவாசமாகவும் (வெளி

வரும் மூச்சாகவும்) விளங்கிய பெருமையுடையது எனப் புலனாகின்றது. பிரம்மபுரம் காலாதீதமான பெரு நிலையை அடையச் செய்வதாகிய யோகமூலத் தானம்; **பன்னிரண்டு ஆரங்களைக் கொண்டு, பிரம்மாண்டத்தைத் தன்னுள் அடக்கிக்கொண்டுள்ள காலச்சக்கரத்தின் மாற்று வடிவம்;** மூலாதாரத் தானத்தையும், பிரம்மரந்திரத் தானத்தையும் தன் அமைப்பால் வெளிப்படுத்திக் காட்டும் காலாதீதத் தலம்; பக்குவப்பட்ட யோக சாதகரைப் பல உலகங்களுக்கும், பல பிரம்மாண்டங் களுக்கும் கொண்டு செல்வதாகிய நீலத் தோணி; பன்னிரண்டு கலை மூலப்பிராசாத மந்திரத்தைத் தனக்குரிய பன்னிரண்டு பெயர்களாலும் உணர்த்தும் ஒளிநிலைத் தானம்; ஆன்மார்த்த சிவபூஜைக்கு ஒருவரைத் தகுதி உடையதாக்கும் பூதசுத்தி, ஆன்மசுத்தி முதலான தூய்மை நிலைகளைத் தன் பன்னிரண்டு மந்திரப் பெயர்களாலும் யோக சாதகர்க்கு அளிக்கும் தலம். சிதம்பரத்தை ஒத்து இதயத் தானமாகவும் பொலிவுற்றிருக்கும் பூங்கமலத் தானம். ஏனைய தலங்களைப் பரிவாரத் தலங்களாகவும் தன்னை மூலத்தானமாகவும் கொண்டு தியான யோகத்தை மேற்கொள்வோர்க்கு நாதப்பேறு, காட்சிப்பேறு முதலான உயர்ந்த யோகானுபவங்களை அமுதூறல் களாக வழங்கும் தலம்.

இத்தகைய பெருஞ்சிறப்புக்களை உடையதாகப் பிரம்மபுரம் எவ்வாறு விளங்குகிறது என்பது இனிவரும் பகுதிகளில் சிவாகம அடிப்படையில் விரிவாக விளக்கப்படுகிறது.

2

# பேருழியை வெல்லும் பிரம்மபுரத் திருப்பெயர்கள்

தியான பாவனையின் அடிப்படையில் பிரம்மபுரம் மூலத்தலம் எனவும் ஏனைய தலங்கள் பரிவாரத் தலங்கள் எனவுமாக உணரவேண்டும் என முன்னர்க் கூறப்பட்டது. இவ்வாறு கொள்வதால் தலங்களுக்குள்ளே ஏற்றத்தாழ்வு கருதுவதாக எண்ணி விடக் கூடாது. சிவயோக நெறி என்பது மற்றைய எல்லா யோக நெறிகளையும் உள்ளடக்கிய மகா யோகநெறி. இந்நெறி நிற்போர் முதலில் கடைப்பிடிக்க வேண்டிய நியதி — யாரிடத்திலும் எதிலும் எங்கும் ஏற்றத்தாழ்வு காணாதிருத்தல் என்பதே. ஆரோக்கிய மான, வளமான ஆன்மிக நெறிக்கும் இது பொருந்தும்.

'இன்ன தலத்தைக் காட்டிலும் இன்ன தலம் உயர்ந்தது'

'இந்த அடியாரைக் காட்டிலும் அந்த அடியார் உயர்ந்தவர்'

'இந்தக் கோயிலுள்ள மூர்த்தியைக் காட்டிலும் அந்தக் கோயிலிலுள்ள மூர்த்தி உயர்ந்தது.'

'இந்தச் சித்தர் சாதாரணமானவர். அந்தச் சித்தரே உயர்ந்தவர்.'

என, இந்த ரீதியில் உயர்வு தாழ்வு கற்பித்துக் கொண்டிருப்போர் கல்பாந்த காலம் கழிந்தாலும் கடவுள் நிலையை உணரவும் முடியாது. கடவுள் நிலைக்கு உயரவும் முடியாது.

ஒரு தலத்துக்குச் செல்லும் முன் அந்தத் தலத்தின் மூலத்தன்மையை நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும். மூலத்தன்மை உணர்வோடு அந்த தலத்தை அடைந்து முறைப்படி வழிபட்டால், அந்தத் தல வழிபாட்டிற்குரிய விசேடப் பயன்கள் அனைத்தையும் பெறமுடியும். இந்த மூலத்தன்மையைப் பல கோணங் களிலிருந்து பற்பல அருள் நிகழ்ச்சிகள் வாயிலாக விளக்க எழுந்தவையே தலபுராணங்கள். தலபுராணங் களைப் புனைந்துரைகளாகவோ பொய்யுரை களாகவோ கருதிவிடக் கூடாது.

ஒரு தலத்துக்கே வெவ்வேறு பெயர்கள் உண்டு. அந்தப் பெயர்கள் எக்காரணத்தால் ஏற்பட்டன என்பதை ஆகமங்கள் வாயிலாகவோ வேதங்கள் வாயிலாகவோ தெரிந்துகொள்ள முடியாது. தல

புராணங்கள் வாயிலாகத்தான் உணர்ந்து கொள்ள முடியும்.

திருப்புகலூர் என்னும் தலம் உளது. இதற்குப் புன்னாகவனம், ரத்னாரண்யம், அக்னீசபுரம் என வேறு பெயர்களும் உண்டு.

திருவாரூர் என்னும் தலத்துக்குக் கமலாலயபுரம், க்ஷேத்ரவரபுரம், ஆடகேசுவரபுரம், மூலாதாரபுரம், சக்திபுரம், கந்தபுரம் என வழங்கும் வேறு பெயர்களும் உண்டு.

நான்மாடக்கூடல், ஆலவாய், கடம்பவனம், துவாதசாந்தபுரம், சிவராஜதானி, கன்னீசபுரம், ஜீவன் முக்திபுரம், சிவநகரம் எனப் பல்வேறு பெயர்களாலும் மதுரைத் தலம் வழங்கப்படுகிறது.

ஒவ்வொரு தலமும் பிராகிருதம், அப்பிராக்கிருதம் என்ற இரண்டு கோணங்களில் உணரப்படவேண்டும் என சர்வக்ஞானோத்தரம் எனும் ஆகமத்தின் யோகபாதம் கூறுகிறது. பிராகிருதம் என்பது பிரகிருதி சம்பந்தப்பட்ட நிலை. அதாவது, இந்த நிலத்தோடு தொடர்புடைய நிலை; இந்த நிலத்தின் ஒரு பிரிவாக உள்ள நிலை. எல்லைகளுக்கு உட்பட்ட இடத்தால் வரையறுக்கப்பட்ட நிலை. அப்பிராக்கிருதம் என்பது பிரகிருதி சம்பந்தப்படாத நிலை; இந்த நிலத்தொடர்பு இல்லாத நிலை; நில எல்லையினின்று வேறு பிரித்து உணரப்படும் நிலை; காலத்தாலும் இடத்தாலும் வரையறுக்கப்படாத நிலை.

புறக்கண்ணால் நாம் ஒவ்வொரு தலத்தின் பிராகிருத நிலையைக் காண்கிறோம். பக்குவப்பட்ட அக உணர்வால் அந்தத் தலத்தின் அப்பிராக்கிருத நிலையை உணர வேண்டும். இந்த அப்பிராக்கிருத நிலையை அக உணர்வால் உணர்ந்து தெளிவு பெறுவதற்காக ஏற்பட்டவையே தலத்தின் வெவ்வேறு பெயர்கள். ஒவ்வொரு மாற்றுப் பெயரும் யோகநெறியின் ஒவ்வொரு படிநிலையைக் குறிக்கும். இந்தக் கண்ணோட்டத்தில் நாம் தலபுராணங்களைப் பயின்றால் நமது தமிழ்மொழிக்கு எத்தகைய வளமான செல்வம் வாய்த்திருக்கிறது என்பதை எண்ணிப் பூரிப்பும் பெருமையும் கொள்ளலாம்.

திருஞானசம்பந்தப் பெருமானின் மூலத்தலமாக விளங்கும் பிரம்மபுரம் எனும் தலத்துக்குப் பன்னிரண்டு திருப்பெயர்கள் உண்டு. பன்னிரண்டு திருப்பெயர்களையும் எந்த வரிசையில் சொல்ல வேண்டும் என்னும் நியதி உண்டு.

1. பிரம்மபுரம்
2. வேணுபுரம்
3. புகலி
4. வெங்குரு
5. தோணிபுரம்
6. பூந்தராய்
7. சிரபுரம்

8. புறவம்

9. சண்பைநகர்

10. காழி

11. கொச்சைவயம்

12. கழுமலம்

பிரம்மபுரம் என்னும் தலத்துக்குரிய பன்னிரண்டு பெயர்களுள் பிரம்மபுரம் என்பதும் ஒரு பெயராகக் கணக்கிடப்படுவதை நாம் கவனிக்கவேண்டும். **பன்னிரண்டு பெயர்களுள் ஒன்றாக வரும் பிரம்மபுரம்** என்பது பிராகிருத நிலையையும் **பன்னிரண்டு பெயர்களையும் கொண்டுள்ள பிரம்மபுரம்** என்பது அப்பிராக்கிருத நிலையையும் குறித்து விளங்குவதாகக் கொள்ள வேண்டும்.

*"பார்மண்டலத்தினில் பன்னிரு பேரொடு மன்னிநின்ற*
*நீர்மண்டலப் படப்பைப் பிரமாபுரம்"*

(ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி – 1)

"பன்னிரண்டு பெயர்களுடன் நிலைபெற்று விளங்கும் பிரம்மபுரம்" என நம்பியாண்டார் நம்பிகள் கூறுவதைக் கவனிக்க வேண்டும். பிரம்மபுரம் முதலான பன்னிரண்டு பெயர்களை உடைய பிரம்மபுரம் என்னும் மூலத்தலம் **அங்கி** என்றும் பிரம்மபுரம் முதலான பன்னிரண்டு பெயர்களால் குறிக்கப்படும் நிலைகள் **அங்கங்கள்** என்றும் அங்க–அங்கி நியாயப்படி உணர்ந்து கொள்ளவேண்டும். (அங்கம் – உறுப்பு, பகுதி; அங்கத்தை உடையது அங்கி. சிதம்பரம் நடராசப்

பெருமானுக்கு அம்சி என்று பெயர். ஏனைய மூர்த்தங்கள் கோயில்கள் அனைத்தையும் தனக்குரிய அம்சங்களாகக் கொண்டிருப்பவர் என்பது அதன் பொருள்.) ஸ்ரீ சக்கிர பிந்துத் தானத்தில் வழிபடப்படும் நிலையில் உள்ள மகா திரிபுரசுந்தரி அன்னையே பதினாறு இதழ்க் கமலத்தில் பதினாறு நித்யா தேவிகளுள் ஒரு தேவியாக விளங்குவதைப் போன்று மூலத்தானமாக விளங்கும் பிரம்மபுரமே, பன்னிரண்டு நிலைகளுள் ஒன்றைக் குறிப்பிடும் வகையில் பிரம்ம புரம் என்ற அம்சப் பெயரை அல்லது அங்கப் பெயரைக் கொண்டு விளங்குகிறது.

பிரம்மபுரம் என்னும் மூலத்தலத்துக்கு இப்பன்னி ரண்டு பெயர்களும் எவ்வாறு ஏற்பட்டன என்பதை இனிக் காண்போம். இந்த வரலாற்றை உணர்ந்து கொள்வது, யோகநுட்பங்களை அறிந்து கொள்வதற்கு அவசியமாகின்றது.

**1. பிரம்மபுரம்**

நான்முகக் கடவுள், சிவபெருமானை வழிபட்டுப் பேறு பெற்றதால் இப்பெயர் ஏற்பட்டது என்பர். பிரம்மன் மறைக்காடு, புள்ளமங்கை, அன்பிலாலம் துறை முதலான வேறு பல தலங்களிலும் சிவவழிபாடு செய்துள்ளதாகத் தலவரலாறுகள் உள்ளன. தனக்கு விதிக்கப்பட்ட படைப்புத்தொழில் தொடர்பான ஆற்றல்களை அவ்வாறு வழிபட்டு அடைந்துள்ளான். ஆனால் மூலத்தலமான இந்தத் தலத்தில் பிரம்மன்

சிவவழிபாடு செய்தமை கீழ்க்கண்ட பேறுகளைப் பெறவிரும்பியே:

1. தனக்கு விதிக்கப்பட்ட கால எல்லை கழிந்ததும் அதிகார மலம் நீங்கி, சிவத்தோடு இரண்டறக் கலந்திருத்தல்..

2. யுகத்தின் இறுதியிலும் அழியாது நிலைத்திருப்பதாகிய இந்தத் தலம், தனக்கு மட்டுமன்றி வழிபடும் அடியார் அனைவர்க்கும் காலாதீதப் பெருநிலையை அருளவேண்டும். காலாதீதப் பெரும்பேற்றைத் தான் மட்டுமன்றி அடியார் அனைவரும் பெறல்.

3. இப்பேறுகளை அடையத் தகுதி உடையதாக்கும் தன்னிகரற்ற சிவஞானப் பேறு.

இவ்வாறு உயரிய நோக்கம் கொண்டு நான்முகன் வழிபட்ட காரணத்தால் இத்தலம், பிரம்மபுரம் என வழங்கப்படுவதாயிற்று. மற்ற இடங்களில் பிரம்மன் வழிபட்டிருந்தும்கூட அவை இப்பெயர் பெறவில்லையே!

## 2. வேணுபுரம்

வேணு எனப்படும் இந்திரன் வழிபட்டதால் ஏற்பட்ட பெயர் வேணுபுரம் என்பது. வேணு என்னும் இந்திரனுக்கும் கஜமுகன் என்னும் அசுரனுக்கும் இடையே ஏற்பட்ட போரில் இந்திரன் தோற்றான். மீண்டும் அமராவதி ஆட்சியைப் பெறவேண்டி பிரம்மபுரம் என்னும் தலத்திற்கு வந்து சிவபெருமானை

வழிபட்டான். சிவபெருமான் தன் மூத்த பிள்ளையாராகிய கணேசுவரப் பெருமானுக்கு "நீ உடனே உன் வலக்கொம்பால் கஜமுகாசுரனைக் கொன்று, வேணு எனும் இந்திரனை மீட்டும் தேவர்களின் தலைவனாக அமர்த்திவிட்டு வா" என்று கட்டளை இட்டார். விநாயகப் பெருமானும் அவ்வாறே செய்தார்.

வேணுவாகிய இந்திரன் சிவவழிபாடு செய்து, இழந்துவிட்ட தன் ஆட்சியை மீண்டும் பெற்றான் என்பதால் இத்தலம் வேணுபுரம் என அழைக்கப்படுவ தாயிற்று.

### 3. புகலி

சூரபதுமன் இந்திரனுடன் போரிட்டு வென்று தேவலோகத்தைத் தன் வசமாக்கிக் கொண்ட பிறகு, இந்திரனும் ஏனைய தேவர்களும் சூரபதுமனுக்கு அஞ்சி, மீண்டும் தங்களின் தேவலோக வாழ்க்கையை விரும்பி, பிரம்மபுரத்து இறைவனைப் புகலாக - தஞ்சமாக அடைந்தமையால், புகலி என்னும் திருப் பெயரால் இத்தலம் வழங்கப்படுவதாயிற்று. விநாயகப் பெருமானால் வேணுவுக்கு ஆட்சி கிடைத்தது போன்று, இப்பொழுது முருகப் பெருமானால் இந்திரன் முதலானோர்க்குத் தேவலோகம் உரிமையாக்கப்பட்டது.

### 4. வெங்குரு

அமரர்க்கு ஆசான், தேவகுரு என்னும் நிலையில் இருந்த பிருகஸ்பதி ஒரு காலகட்டத்தில், "என்னைத்

தவிர்த்து வேறு ஒருவருக்கு கர்த்துருத்துவம் எனப்படும் செயல் உரிமை உண்டோ? நான் ஒருவனே கர்த்தா" என்னும் தருக்குணர்வு கொண்டான். சிவபெருமான், "இதுபோன்று ஒரு பொறுப்பில் இருப்பவர்கள் கர்வமும் தருக்கும் கொண்டால் விபரீதங்கள் ஏற்பட்டுவிடும். விபரீதங்களைத் தவிர்க்க இப்பொழுதே இவனைத் தேவகுரு என்னும் பொறுப்பிலிருந்து விலக்கிவிட வேண்டும்" எனத் திருவுளம் கொண்டு அவ்வாறே செய்தார். தன் குருபதவி பறிபோய் விட்டதும் மிகவும் வருந்திய பிருகஸ்பதி தன் தவற்றை உணர்ந்து, புகலிப் பதியைப் புகலாக அடைந்து வழிபட்டுத் தருக்கொழிந்து மனத்தூய்மை பெற்றான். அவனது ஞான நிறைவையும் தூய்மை உள்ளத்தையும் கண்டு சிவபெருமான், முன்போலவே தேவர்களுக்குக் குருவாக இருக்கும் அதிகாரத்தை பிருகஸ்பதிக்கு வழங்கி அருளினார்.

வெம்மைக் குணம் கொண்டதால் பதவி இழந்த தேவகுரு தன் பதவியை விரும்பி வழிபட்டதால் இத்தலம் வெங்குரு என வழங்கப்படுவதாயிற்று. (வெம்குரு என்பதில் வெம் - வெம்மையையும் விழைவையும் குறிக்கும்.)

இவ்வாறு வழிபட்டவர், அசுரகுருவாகிய சுக்கிராசாரியார் என்று கூறப்படுவதும் உண்டு. ஆயினும் திருஞானசம்பந்தர் தரும் குறிப்பு தேவ குருவையே சுட்டுகிறது.

## 5. தோணிபுரம்

ஊழிக்காலத்தின் இறுதியில் கடல்கள் பொங்கி எழுந்து பிரளயம் ஏற்பட, அமரர்கள் அனைவரும் அஞ்சி, "எந்தையே, அருள்" என்று சரண்புக, இத்தலமானது பிரணவ வடிவம் ஏற்றுத் தோணியாக உருக்கொண்டது. அத்தோணியில் தாமும் அன்னையுமாக வீற்றிருந்தருளிச் சிவபெருமான் புனருற்பவம் செய்தமையால், இத்தலம் தோணிபுரம் என அழைக்கப் படுவதாயிற்று.

## 6. பூந்தராய்

சங்கநிதி, பதுமநிதி என்னும் இரண்டு நிதிகளின் அதிதேவதைகளும் பூவும் தாருமாக (மாலையுமாக) உருக்கொண்டு இத்தலத்திற்கு வந்து சிவபெருமானை வழிபட்டனர். "நீங்கள் வேண்டும் வரம் யாது?" என்று பெருமான் கேட்க, அவர்கள் "எல்லாக் காலத்திலும் வரையாது வழங்கக்கூடிய ஆற்றலை அருள்க" என்று விண்ணப்பம் செய்து கொண்டனர். அவ்வரத்தை அருளிய சிவபெருமான், "மகா சங்கார காலத்திலும் நீங்கள் அழியாமல் எம் திருக்கரங்களில் இடம் பெறுவீர்களாக" என்று மேலும் ஒரு பெரிய வரத்தை அருளினார்.

சங்கநிதியும் பதுமநிதியும் பூவும் தாருமாக உருக் கொண்டு பூசித்தமையால் இத்தலம் பூந்தராய் என வழங்கப்படுவதாயிற்று.

வேறொரு காரணமும் கூறப்படுகிறது.

இரணியாக்கதன் என்னும் அசுரனால் கவரப்பட்டுக் கடலின் ஆழ்தளத்தில் கிடந்த பூமியைத் திருமால் வெள்ளைப் பன்றி வடிவு கொண்டு கொம்பின் நுனியால் பூமியைத் தூக்கி மேலெடுத்துப் பழையபடி நிலைநிறுத்தினார். இரணியாக்கதன் என்னும் அசுரனைக் கொன்ற தீவினை நீங்க வேண்டித் திருமால் இத்தலத்தில் சிவபெருமானைப் பூசித்ததால், இது பூ தராய் (தரித்தவன்) - பூந்தராய் என வழங்கப் படுவதாயிற்று. இந்த இரண்டு காரணங்களையுமே திருஞானசம்பந்தப் பெருமான் கூறுகின்றார்.

## 7. சிரபுரம்

தேவர்களுக்குத் திருமால் அமிழ்தம் பரிமாறிக் கொண்டிருந்த பொழுது, அமிழ்தம் பெறவேண்டித் தேவர்களின் வரிசையில் சிலம்பன் எனும் அசுரனும் தேவ வடிவம் தாங்கி வீற்றிருந்தான். இதை அறிந்து கொண்ட திருமால், அமிழ்தத்தை விடுவதற்காக வைத்திருந்த சட்டுவத்தால் சிலம்பனின் தலையை வெட்டித் தள்ளினார். தன் உடலை மீட்டும் தரக் கூடியவன் சிவபெருமான் ஒருவனே என்பதை உணர்ந்த சிரமானது (வெட்டுண்ட தலையானது) இராகு வடிவத்தில் நின்று வழிபட்டுப் பேறு பெற்றதால் இத்தலம் சிரபுரம் எனக் கூறப்படுவதாயிற்று.

## 8. புறவம்

பிரஜாபதி எனும் பிரம்மரிஷி ஒருவர் கௌதம ரிஷியை நோக்கி "காம இச்சையை விட்டொழிக்காத

வன் அல்லவோ நீ" என இகழ்ந்துரைத்தார். கோபம் கொண்ட கௌதமர், பிரஜாபதி ரிஷியைப் பார்த்து, "நீ புறாவாக ஆகி மனித மாமிசத்தைப் புசித்திரு" என்று சபித்தார். சாபத்தின் வயப்பட்டுப் புறாவாகிய பிரஜாபதி நரமாமிசம் புசித்து வாழ்ந்து வந்தார். ஒரு நாள் பசி மேலிட, யதேச்சையாக அவ்விடம் வந்த சோழமன்னனிடம் நரமாமிசத்தை யாசித்தது. "உனக்கு எவ்வளவு மாமிசம் வேண்டும்?" எனச் சோழன் கேட்க, "உன் உடம்பில் பாதி அளவு வேண்டும்" எனப் புறா கூறியது. உடம்பின் பாதியளவு மாமிசம் உண்டும் பசி தீராத புறா, எஞ்சிய உடலையும் அரிந்து தருமாறு கேட்டது. தன் உடல் முழுவதையும் அரிந்து கொடுத்த சோழன் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்தான். தனக்காக உடல் முழுவதையும் இழந்த மன்னன் பழையபடி நல்லுடல் பெற்று நன்னிலை அடைய வேண்டிப் புறா வடிவில் இருந்த பிரஜாபதி ரிஷி இத்தலத்தில் சிவபெருமானை வழிபட்டார். தனக்கு நேர்ந்த சாபத்திலிருந்து விடுதலையும் வேண்டினார். மன்ன னுக்கு நல்லுடற் பேறும் பிரஜாபதிக்கு சாபநீக்கமும் அருளினார் சிவபெருமான்.

புறா வடிவத்தில் இருந்த பிரஜாபதி வழிபட்டுப் பேறு பெற்றதால் இத்தலம் புறவம் என அழைக்கப் படுவதாயிற்று.

சிபிச்சக்கரவர்த்தியைச் சோதிப்பதற்காகப் புறா வடிவு கொண்ட தீக்கடவுள், அவ்வாறு சோதித்த குற்றம் நீங்கும் பொருட்டு இத்தலத்தில் சிவ

பெருமானை வழிபட்டதால் புறவம் எனும் பெயர் ஏற்பட்டது என வேறொரு காரணம் கூறுவதும் உண்டு.

## 9. சண்பைநகர்

யாதவர்கள் தங்களுள் சாம்பன் என்பானுக்குக் கர்ப்பிணி வேஷம் போட்டு, “இவளுக்குப் பிறக்கப் போவது ஆணோ, பெண்ணோ?” எனத் துருவாச முனிவரிடம் கேட்டனர். துர்வாச முனிவர் உண்மையை உணர்ந்து கொண்டு, ‘பிறக்கப் போவது ஆணும் அல்ல; பெண்ணும் அல்ல. ஓர் இரும்பு உலக்கைதான் பிறக்கும். அந்த உலக்கைதான் உங்கள் குலம் முழுவதையும் அழிக்கப் போகிறது.” எனச் சாபமிட்டார். இதை அறிந்த கண்ணபிரான் உலக்கையை நன்றாகத் தூள்தூளாகப் பொடி செய்து நடுக்கடலில் போட்டுவிடும்படிக் கூறினார். யாதவர்களும் அவ்வாறே செய்தனர். கடலில் போடப்பட்ட பொடிகள் சம்பங் கோரைகளாகக் கடற்கரையில் முளைத்தன. பின்னர் ஒரு சமயம் யாதவர்களிடையே கலகம் ஏற்பட, சம்பங்கோரைகளைப் பிடுங்கி ஒருவரை ஒருவர் குத்தியும் அடித்தும் கொள்ள அனைவரும் மாண்டனர். போடப்பட்ட துகள்களுள் வேப்பம் விதை அளவுள்ள இரும்புத் துண்டை ஒரு மீன் விழுங்கியது. அந்த மீன் வேடன் ஒருவனிடம் அகப்பட, அவன் அந்த மீன் வயிற்றில் இருந்த இரும்புத் துண்டைத் தனது அம்பின் முனையில் இணைத்துக் கொண்டான். கானக நடுவண் கிருஷ்ணபிரான் யோகாசனமாக ஒரு பாதத்தைத் தூக்கி அமர்ந்திருக்கும்போது, அந்தப்

பாதத்தைச் செம்பருந்தாகக் கருதிக்கொண்ட அந்த வேடன் இரும்புத்துண்டு இணைக்கப்பட்டிருந்த அம்பைப் பாதம் நோக்கி எய்தான். அந்த அம்புபட்டுக் கிருஷ்ணபிரானும், அதையே ஒரு வியாஜமாகக் கொண்டு தன் அவதார நிகழ்ச்சியை நிறைவு செய்து கொண்டார். இவ்வளவுக்கும் காரணம் தமது சாபமே என உணர்ந்த துருவாச முனிவர், தமது உரையால் வந்த தீவினைப் பயனைப் போக்கிக் கொள்ளும் பொருட்டு, பிரம்மபுரத் தலத்துக்கு வந்து சிவபெருமானை வழிபட்டார். சிவபெருமான் அவருக்குற்ற பாவ தோஷத்தைப் போக்கியருளி சண்பைமுனி என்னும் புதுப் பெயரும் சூட்டியருளினார்.

சண்பை முனியாகிய துருவாச முனிவர் வழிபட்ட காரணத்தால் இத்தலம் சண்பைநகர் என வழங்கப் படுவதாயிற்று.

## 10. சீகாழி

காளிதன் எனப் பெரிய ஐந்தலை நாகமும், நடனத்தில் தோல்வியுற்ற காளிப்பிராட்டியும் இத்தலத்தில் வழிபாடு செய்து நற்பேறுகள் பெற்றமை யால் இது சீகாழி என்னும் திருப்பெயர் பெற்றது.

## 11. கொச்சைவயம்

ஒரு சமயம் பராசர ரிஷி, மற்றைய ரிஷிகளின் அபக்குவ நிலையை எடுத்துக்காட்டி ஏளனம் செய்ய, அவர்கள் “நீ மச்சகந்தி என்பாளுடன் கூடி, அதனால் மீன் நாற்றம் உன்னை விடாமல் பற்றிக்கொள்ள,

மேலும் பல துன்பங்களை அனுபவிப்பாயாக" எனச் சாபமிட்டனர். சாபத்தின்படியே அவர் மச்சகந்தியுடன் சேர நேர்ந்தது. மீன் நாற்றமாகிய துர்க்கந்தமும் அவரைப் பற்றிக் கொண்டு ஒரு யோசனை தூரத்துக்கு வீசியது. துர்க்கந்தமாகிய பிணிப்பிலிருந்தும் சாபத்திலிருந்தும் தம்மை விடுவித்துக்கொள்ளப் பராசர ரிஷி பிரம்மபுரத்துக்கு வந்து சிவபெருமானை வழி பட்டார். 'இவன் கொச்சை முனியோ?' எனத் திருவுளம் கொண்ட சிவபெருமான் அவருக்காகக் கருணை பாலித்து, விடாமல் வீசிக்கொண்டிருந்த துர்க்கந்தத் தைப் போக்கி "இன்று முதல் கொச்சை முனி என வழங்கப்படுவாயாக" என்று கூறிச் சந்தானப் பெயரும் சூட்டியருளினார்.

கொச்சை முனியாகிய பராசர ரிஷி வழிபட்டுப் பேறு பெற்றதால் இத்தலம் கொச்சை வயம் என வழங்கப்படுவதாயிற்று.

## 12. கழுமலம்

பல்வகைப்பட்ட அருட்பேறுகளுக்கும் உறைவிட மாகிய பிரம்மபுரம் என்னும் தலத்தில் உரோமசர் எனப் பெயரிய முனிவர் முறைப்படி சிவவழிபாடு செய்து உயிர்களின் சகஜமலம் எனப்படும் ஆணவமலத்தை நீக்கியருளக்கூடிய தீக்ஷா சக்தியைப் பெற்றமையால், இத்தலம் கழுமலம் என்னும் சிறப்புப் பெயரை எய்தியது.

பன்னிரண்டு திருப்பெயர்களும் இத்தலத்துக்கு ஏற்பட்ட அருளியல் வரலாறு சாரமாகவும்

சுருக்கமாகவும் இங்கே கூறப்பட்டது. திருப்பெயர் வந்த அருள் வரலாற்றைப் புலப்படுத்தும் வகையில், திருஞானசம்பந்தரின் தமிழ்மாலைப் பதிகங்களில் ஆங்காங்கே விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்வரலாற்றைத் தெற்றெனப் புலப்படுத்தும் "வழி மொழித் திருவிராகம்" என்னும் அருமைத் திருப்பதிக மும் பன்முறை பயின்று உணரத்தக்கது.

இந்த அருள் வரலாறுகளின் ஊடே, மணிகளைக் கோத்திருக்கின்ற பொற்சரடு போன்று, இழை பாய்ந்திருக்கும் தனித்தன்மை வாய்ந்த நிகழ்ச்சி எது எனில், பிரம்மபுரம் ஊழிகளைக் கடந்து ஓங்கி உலகின் முதலாக நிற்கும் நிகழ்ச்சிதான்; கால எல்லையைக் கடந்து, காசினிக்கு வித்தாக நிற்கும் நிலைதான். ஆகையால் பிரளயகாலத்தில் அழியாது மேன்மேல் ஓங்கி நிற்கும் நிகழ்ச்சியைத் தோணிபுரப் பெயரோடு மட்டும் தொடர்புபடுத்திப் பாடாமல் பிரம்மபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, சிரபுரம், சண்பை, சீகாழி, கொச்சைவயம், கழுமலம் எனப்படும் பெயர்களோடும் கூடத் தொடர்புறுத்திப் பாடுகின்றார் திருஞான சம்பந்தர்

**1) பிரம்மபுரப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"ஊர்பரந்த உலகின் முதலாகிய ஓரூர் இதுவென்னப்*
*பேர்பரந்த பிரமாபுரம்"*

*"கருமை பெற்ற கடல்கொள்ள மிதந்ததொர் காலம் இதுவென்னப்*
*பெருமை பெற்ற பிரமாபுரம்"*

*"துயரிலங்கும் உலகில் பல ஊழிகள் தோன்றும்
பொழுதெல்லாம்
பெயரிலங்கு பிரமாபுரம்."*

**2) வேணுபுரப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"மண்ணோர்களும் விண்ணோர்களும் வெருவிம்மிக அஞ்சக்
கண்ணார் சலம் மூடிக்கடல் ஓங்கவ்வுயர்ந்த"*

**3) புகலிப்பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"பொங்கொலி நீர்சுமந்தோங்கு செம்மைப் புகலி"*

**4) வெங்குருப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"மண்ணினைமுடி வான்முகடேறி மறிதிரைகடல்முகந்
தெடுப்பமற் றுயர்ந்து
விண்ணளவோங்கி வந்திழிகோயில்
வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே"*

**5) சிரபுரப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"ஊழி அந்தத்தில் ஒலிகடல் ஓட்டந்திவ்
வுலகங்கள் அவைமூட
ஆழி எந்தையென் றமரர்கள் சரண்புக
அந்தரத் துயர்ந்தார்"*

**6) சண்பைப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"உண்பகர வாருலகின் ஊழிபலதோறும்நிலை
யானபதிதான்"*

**7) சீகாழிப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"ஊழியாய பாரில் ஓங்கும் உயர்செல்வக் காழி"*

**8) கொச்சைவயப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"இறைவனை ஒப்பிலாத ஒளிமேனியானை உலகங்கள்*
*ஏழும் உடனே*
*மறைதரு வெள்ளமேறி வளர்கோயில்"*

**9) கழுமலப் பெயர்க்குரிய திருப்பதிகத்தில்:**

*"கலிகெழு பாரிடை, ஊரென உளதாம் கழுமலம்"*

*"ஊருறு பதிகள் உலகுடன் பொங்கி ஒலிபுனல்*
*கொளவுடன் மிதந்த*
*காருறு செம்மை நன்மையால் மிக்க கழுமலம்"*

*"ஒருவரிவ் வுலகில் வாழ்கிலாவண்ணம் ஒலிபுனல்*
*வெள்ளமுன் பரப்ப*
*கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்கும் கழுமல நகர்"*

இவ்வாறு அனைத்துப் பெயர்களுடனும் இழைந்தும் இணைந்தும் இலங்கிடும் பொற்புடைத் தன்மை, ஊழிகளைக் கடந்து காலப் பேரெல்லைகளைக் கடந்து உலவாதிருக்கும் தனி முதல் தன்மையேயாம். பற்பல பெருங்கிளைகளையும் நூற்றுக்கணக்கான சிறுகிளை களையும் கொண்டுள்ள விருக்ஷம் தோன்றுவதற்குரிய மூல விதையைப் போன்று, பற்பல உலக அடுக்குகளையும் ஆயிரக்கணக்கான நகரங்கள் ஊர்கள் முதலானவைகளையும் உள்ளடக்கியுள்ள பிரபஞ்சம் தோன்றுவதற்குப் பிரம்மபுரம் ஒரு தனி முதல் வித்தாகப் பொலிகின்றது என்பதைத் திருஞானக் கண்ணால் கண்டு காட்டுகின்றார் திருஞான சம்பந்தர். "ஊர்பந்த உலகின் முதலாகிய ஓர் ஊர் இது" எனப் பெருமான் ஓதுவதை உணர்க.

# 3

# மூலத்தலமும் பரிவாரத் தலங்களும்

## (பிரம்மபுரமும் ஏனைய தலங்களும்)

நகரங்களும் சிற்றூர்களும் பேரூர்களும் பண்டைக் காலத்தில் பிரபஞ்ச நிர்மாண விஞ்ஞான்ம் எனப்படும் வாஸ்து விஞ்ஞான அடிப்படையிலேயே உருவாக்கப் பட்டன. இவ்வாறு அமைக்கப்பட்டவை குடியிருப் போர், வீதிகளின் எண்ணிக்கையும் அமைப்பு முறையும், சிவாலயம், விஷ்ணு ஆலயம் முதலான ஆலயங்களுக்கு ஒதுக்கப்பட்ட தானம் -இவை முதலானவற்றின் அடிப்படையில் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப் பட்டன. கிராமம், புரம், கேடம், கர்வடம், குப்ஜகம், மங்களம், கோஷ்டம், பட்டணம், நகரம் -இவை பல்வேறு முறைகளில் உருவாக்கப்பட்ட சிற்றூர் களுக்கும் பேரூர்களுக்கும் உரிய பொதுப் பெயர் களாகும். ஓர் ஊரில் சிவாலயம் அல்லது திருமால் ஆலயம் இருக்கின்ற தானத்தைக் கொண்டே, ஆகம-சிற்ப நூல் வல்லார் அது புரமா, கேடமா,

கர்வடமா, பட்டணமா என்னும் அமைப்பு முறையைக் கூறிவிடலாம். ஆலயத் தானத்திற்கும் ஊரின் அமைப்பு முறைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

ஆற்றங்கரைச் சூழலில் அமைக்கப்படும் ஊருக்குப் புரம் என்று பெயர். கோட்டாறு எனப்படும் ஆற்றின் சூழலில் சீகாழித் தலம் விளங்குவதாகத் திருஞானசம்பந்தரே பாடி இருக்கின்றார்.

*"திருந்துமா களிற்றிள மருப்பொடு திரள்மணிச் சந்தம்உந்திக்*
*குருந்துமா குரவமும் குடசமும் பீலியும் சுமந்துகொண்டு*
*நிரந்துமா வயல்புகு நீடுகோட் டாறுசூழ் கொச்சை மேவி"*

(மூன்றாம் திருமுறை)

ஆற்றுச் சூழலில் இருந்ததால் பிரம்ம புரம் என்னும் பெயர் பொருந்தியது. பிரம்மம் - பெரும்பெயர் இறைவன்; சிவன். சிவனுக்குரிய புரம்.

சிற்சில தலங்களில் தலத்தின் நடுவண் சிவாலயம் இருப்பதைக் காண்கிறோம். வேறு சில தலங்களில் தலத்தின் கிழக்கிலோ, மேற்கிலோ, வடக்கிலோ, எல்லைப் புறத்திலோ இருப்பதைக் காண்கிறோம். எப்படி இருப்பினும் ஆலய இடத்தேர்வு வாஸ்து விஞ்ஞானப்படியே பண்டைக் காலத்தில் இருந்திருக்கின்றது. ஆலயம் தலத்தின் நடுவில் இருந்தாலும் வேறு எந்த இடத்தில் இருந்தாலும், தலத்தின் மையத் தானத்துக்குப் பிரம்மத்தானம் என்றுதான் பெயர். தலத்தின் ஜீவஆற்றலே அதுதான். (பிரபஞ்சமாகிய பேரிடப் பரப்புக்கு பிரம்மத் தானமாக விளங்குவது பிரம்மபுரம்)

ஓர் ஆலயம் என எடுத்துக்கொண்டால் ஆலயத்தின் கருவறை எனப்படும் கருப்பக் கிரகம் இருக்கும் இடத்துக்குப் பிரம்மத்தானம் என்று பெயர். **பிரம்மபதம்** என்றும் கூறுவதுண்டு. கருவறையை அடுத்துள்ள அங்கணம் அல்லது பிராகாரம் **தைவிக பதம்** எனப்படும். தைவிகபதத்தைச் சூழ்ந்துள்ள திருச் சுற்று அல்லது பிராகாரம் **மானுஷபதம்** எனப்படும். மானுஷபதத்தைச் சூழ்ந்துள்ள சுற்றமைப்புக்கு **பைசாச பதம்** என்று பெயர். இங்கே பைசாசம் எனில் பிசாசு சம்பந்தப்பட்டது எனப் பொருள் கொள்ளக்கூடாது. பைசாசம் என்பது ஓர் அருமையான வாஸ்து வழக்கு. அழகு செய்வது, அழகுறுத்துவது, அலங்கரிப்புக்கு ஏற்றதாக இருப்பது என்னும் பொருளைத் தரும் **பிஸ்** (पिश्-Pis) என்னும் வேர்ச்சொல்லால் அமைவது பைசாசம் என்னும் சொல். ஆலயத்துக்குப் பேரழகும் பொலிவும் தருவதாகிய அங்கணம், பலவகைக் கோஷ்டங்களையும் மண்டபங்களையும் கொண்டுள்ள அங்கணம் - பைசாச பதத்தில் அமைந்திருப்பதை உணர்க. இத்தகைய பைசாச பதத்தைச் சூழ்ந்துள்ள சுற்றுக்கு **ராக்ஷஸ பதம்** என்று பெயர். இங்கும் ராக்ஷஸ என்பதற்கு 'அசுரத்தன்மையான' எனப் பொருள் கொள்ளக் கூடாது. எல்லையாக அமைதல், பாதுகாப்பாக அமைதல் என்னும் பொருளைத் தரும். **'ரக்ஷ்'** என்னும் வேர்ச்சொல்லால் அமைவது ராக்ஷஸம் என்னும் சொல். இவ்வாறு பிரமபதம், தைவிகபதம், மானுஷபதம், பைசாசபதம், ராக்ஷஸ பதம் எனப்படும்

ஐந்து சுற்றுகளை உடையதாக அமைவது முழுமையான பெருங்கோயில்.

இவற்றையே திருக்கோயிலுக்குரிய பிராகாரப் பெயர்களால் வேறு வகையில் வழங்குவதும் உண்டு.

*பிரம்மபதம் – அந்தர் மண்டலம் (கருவறை) முதல் பிராகாரம்*

*தைவிகபதம் – அந்தர்ஹாரம் (இரண்டாவது பிராகாரம்)*

*மானுஷபதம் – மத்யஹாரம் (மூன்றாவது பிராகாரம்)*

*பைசாசபதம் – மர்யாதா (நான்காவது பிராகாரம்)*

*ராக்ஷஸபதம் – மஹாமர்யாதா (ஐந்தாவது பிராகாரம்)*

ஒவ்வொரு பிராகார அமைப்பும், பிரபஞ்ச விஞ்ஞான நுட்பத்தின் அடிப்படையிலேயே உருவாகி இருக்கிறது.

ஒரு தலத்தின் நடுவில் ஆலயம் இருந்தால், ஆலயத்தின் பிரம்மத்தானமும் தலத்தின் பிரம்மத் தானமும் ஒன்றாகவே இருக்கும். ஆலயம் திசை களிலோ, எல்லைப்புறமாகவோ தள்ளி இருந்தால் ஆலய பிரம்மத்தானம் வேறு; தலத்தின் பிரம்மத்தானம் வேறு. ஆலய பிரம்மத்தானமும் தல பிரம்மத்தானமும் ஒன்றாக விளங்குமாறு அமையும் அமைப்பே உத்தமத்தில் உத்தமமான கிராம அல்லது நகர அமைப்பு.

இதுவரை கூறப்பட்ட கருத்துக்களின் அடிப்படை யில் இனி நமது பாவனையை விரிவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

ஆலயத்தைத் தனது நடுவண் கொண்டுள்ள ஒரு தலத்தில், ஆலயத்தையே பிரம்மத்தானமாகக் கொள்க. அதாவது ஆலயக் கருவறையின் மையப்புள்ளியை (தலத்தின் மையப்புள்ளியும் இதுவே) எண்ணாமல் ஆலயத்தையே, ஐந்தாவது பிராகார எல்லைக்குட்பட்ட இடம் முழுவதையுமே பிரம்மத்தானமாக அல்லது பிரம்ம பதமாகக் கருதுக.

இவ்வாறு கொண்டால், ஆலயத்தைச் சூழ்ந்துள்ள தலப்பகுதி தைவிகபதம் என ஆகிறது. ஆலய தைவிக பதத்தில் என்னென்ன கோஷ்டங்கள் உண்டோ, அவை அனைத்தையும், தலத்தின் தைவிக பதத்தில் உள்ளனவாகப் பாவித்துக் கொள்ள வேண்டும். தலத்தின் தைவிக பதத்தில் வீடுகளோ, ஏனைய கட்டிட அமைப்புகளோ இருக்கலாம். ஆனால் அவற்றை வீடுகளாகவும் கட்டிடங்களாகவும் கொள்ளாமல் ஆலய தைவிக பதத்துக்குரிய தெய்வக் கோஷ்டங் களாகக் கருதிக்கொள்க. அதாவது விநாயகர், தக்ஷிணா மூர்த்தி, லிங்கோத்பவர், பிரம்மா, துர்க்கை, சண்டேசர் முதலானோர்க்குரிய கோஷ்டங்களாகப் பாவித்துக் கொள்ளவேண்டும்.

அடுத்து, தைவிக பதத்தைச் சூழ்ந்துள்ள தலத்தின் சுற்று மானுஷ பதம் என ஆகிறது. ஆலய மானுஷ பதத்தில் உள்ள கோஷ்டங்களை, தலத்துக்குரிய மானுஷ பதத்திலும் முறை மாறாமல் பாவித்துக் கொள்க. இவ்வாறே தல - மானுஷ பதத்தைச் சூழ்ந்து வெளிப்புறம் அமைந்திருப்பது, தல - பைசாச பதம் எனவும், அடுத்த சுற்று, தல - ராக்ஷஸ பதம் எனவும்

கொண்டு, ஆலய பைசாச பதத்திலும் ஆலய ராக்ஷஸ பதத்திலும் இடம் பெற்றுள்ள மண்டபங்களையும் கோஷ்டங்களையும் முறை மாறாமல் பாவித்துக் கொள்க.

இவ்வாறு கொள்ளும்போது என்ன ஆகிறது? ஆலயத்தையே மூலத்தானமாகக் கொண்டு அந்தத் தலம் முழுவதுமே ஐந்து பிராகாரங்களைக் கொண்டுள்ள ஒரு பேராலயமாக அமைந்து விடுகிறது. இவ்வாறு அமைவது **ஸ்தலாலயம்** எனப்படும். ஆகமங்களிலும் சிற்ப நூல்களிலும் வரும் **ஸ்தலாலயம்** என்னும் சொல்லுக்கு இரண்டு விதமாகப் பொருள் கொள்ள வேண்டும்.

ஸ்தலாலயம் — 1) ஸ்தலத்தில் உள்ள ஆலயம்; 2) ஸ்தலமாகிய ஆலயம்.

இனி, அடுத்த கட்ட விரிவான பாவனை, உலகெங்கணும் தெய்வக் காட்சியாகக் காணவல்ல வளமான மனோபாவத்தை தரும் யோகபாவனை.

ஆலயத்தையே மூலத்தானமாகக் கொண்டு தலத்தையே ஆலயமாகப் பாவிக்கும் பாவனை கைவந்தபிறகு, தலப்பரப்பு முழுவதையுமே கருப்பக் கிரகமாக, பிரம்மத்தானமாகக் கொண்டு, அத் தலத்தைச் சூழ்ந்துள்ள ஏனைய தலங்களை தைவிக பதம், மானுஷபதம், பைசாசபதம், ராக்ஷஸபதம் எனப்படும் சுற்றுக்களில் உள்ள கோஷ்டங்களாகவும் மண்டபங்களாகவும் பாவித்துக்கொள்ளும் மிக விரிவான பாவனை இது!

மகுடோத்தரம் என்னும் சிவாகமம், இத்தகைய பாவனையை **'ஸ்தல கர்ப பாவனை'** என்று கூறி, விளக்காகவும், விரிவாகவும் இந்த யோக பாவனையைப் பற்றி பேசுகிறது. பேசுவது மட்டுமன்று. சிதம்பரம் என்னும் க்ஷேத்திரத்தை இந்த ஸ்தல கர்ப்ப பாவனையின் அடிப்படையில் எப்படித் தியானிக்க வேண்டும் என்றும் வரையறை செய்து வழிகாட்டுகிறது. மகுடோத்தரம் எனும் ஆகமத்தில் 'சிதம்பர ஸ்தல தத்வ நிர்ணயம்' என்னும் படலத்தில் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

*"ஈசானஸ்து கோகர்ணம்ஸ்யாத் ஸ்ரீசைல: புருஷானனம் |*
*மத்யார்ஜுனம்த்வகோரம் ஸ்யாத் வாரணஸ்யம்து வாமனம் ||*
*த்வாதசாந்தாக்ய நகரீ ஸத்யோஜாதம் இதிஸ்ம்ருதம் |*
*பஞ்சப்ரஹ்ம ஸ்தலான்யேவம் அகண்டிதார்த்தம் பாவயேத் ||*
*சித்ஸம்ஸத் ஹ்ருதயம் க்ஞேயம் கேதாரம் சிரஸம்க்ஞகம் |*
*அருணாத்ரிஸது சிகாம்வித்தி வர்மம்ஸ்ரீ காளஹஸ்திஸ்யாத் ||*
*ஏகாம்ரேச ஸ்தலம்நேத்ரம் ராமேசம் அஸ்த்ரஸம்க்ஞகம் |*
*அங்கமூர்த்தி ஸ்தலான்யேவம் வ்யாபகத்யானமாசரேத் ||*
*த்ரிசிரோ ஸ்ரீகணேசஸ்யாத் ஸ்கந்தம் வை வேங்கடாத்ரிகம் |*
*ஸ்ரீரங்கேசஸ்தலம் விஷ்ணு: அஜாமர புரம் விதி: ||*
*ஸ்ரீகண்டனாதி ஸ்தலாஷ்டம் வடுகஸ்தான மங்களம் |*
*ஸோமாஸ்கந்தஸ்ய ஸூஸ்தானம் ஸப்தஸ்தல விடங்ககம் ||*
*சிவபுரம் குரு கோஷ்டம் கோணாத்ரி ரிஷபம் ஸம்ருதம் |*
*விந்த்யாத்ரிஸ்து மஹாதுர்கா சண்டோ க்ருத்ர கிரீரித: ||*
*ஜம்புஜோர்கபுரம் க்ஞேயம் ஸர்வதா சுபவர்தினா |*
*இத்தம்ஸ்ரீ சித்ஸேபேசஸ்ய ப்ராகார க்ஷேத்ரவர்த்மனா ||*

சிதம்பரம் என்பதையே கர்ப்பக் கிருகமாக, பிரம்மத் தானமாகக் கொண்டால் தைவிகம், மானுஷம் முதலான பதங்களில் (சுற்றுக்களில்) எந்த எந்தத் தலம் எந்த எந்தப் பரிவார மூர்த்தமாக விளங்குகிறது என்பது இந்த ஆகம மந்திரங்களால் விளக்கப்படுகிறது.

கருவறையில் உள்ள சிவலிங்க வடிவத்தில் ஈசான முகத்தை வடகிழக்கு - கிழக்கிற்கு மத்தியிலும், தத்புருஷ முகத்தைக் கிழக்கிலும் அகோர முகத்தைத் தெற்கிலும் வாமதேவ முகத்தை வடக்கிலும் சத்யோஜாத முகத்தை மேற்கிலும் பாவனை செய்து பூஜிக்கவேண்டும். ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோ ஜாதம் ஆகிய ஐந்தையும் ஒரே ரூபத்தைச் சார்ந்துள்ள தாகப் பாவித்து வழிபடும் முறை இது. ஈசானம் முதலான ஐந்து மந்திரங்களும் தனித்தனியே வடிவு கொண்டு (சகளீகரித்து என்பது ஆகம வழக்கு) வெளிப்பட்டு விளங்கும்போது, ஒவ்வொரு வடிவத்தை யும் தனித்தனியே தியானித்து அந்த அந்த திக்கில், (அதாவது, வடகிழக்கு-கிழக்கின் மத்தியிலும், கிழக்கி லும், தெற்கிலும், வடக்கிலும், மேற்கிலும் லிங்கா காரத்தைச் சுற்றிலும், வழிபடவேண்டும்.

சிதம்பரம் என்னும் தலமே நடராஜ-லிங்கா காரமாக விளங்கினால், ஈசானம் முதலான மந்திர ரூபங்களாக எந்த எந்தத் தலம் விளங்குகிறது என்பதை முதல் இரண்டு சுலோகங்கள் கூறுகின்றன.

ஈசான மந்திரமாக – திருக்கோகர்ணம்

தத்புருஷ மந்திரமாக – ஸ்ரீ சைலம்

| | |
|---|---|
| *அகோர மந்திரமாக* | *– திருவிடைமருதூர்* |
| *வாமதேவ மந்திரமாக* | *– வாரணாசி (காசி)* |
| *சத்யோஜாதமந்திரமாக* | *– மதுரை* |

மூலமூர்த்திக்கு ஹிருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் என ஆறு அங்கமந்திரங்கள் உள்ளன. ஈசானம் முதலான பஞ்சபிரம்ம மந்திரங்கள் தனித்தனியே வடிகொண்டு ஆவரண பூஜைக்கு உரியனவையாக விளங்குவதைப் போன்று, ஆறு அங்க மந்திரங்களும் தனித்தனியே வடிவு கொண்டு தத்தம் தானத்தில் விளங்கி ஆவரண வழிபாட்டை ஏற்று அருள்புரிகின்றன. இவ்வகையில் ஆறு அங்கமந்திரங் களாக எந்த எந்தத் தலம் விளங்குகிறது என்பதை அடுத்துவரும் இரண்டு சுலோகங்கள் கூறுகின்றன.

| | |
|---|---|
| *ஹிருதய மந்திரமாக* | *– சித்ஸபை (சிற்றம்பலம்)* |
| *சிரோ மந்திரமாக* | *– திருக்கேதாரம்* |
| *சிகா மந்திரமாக* | *– திருவண்ணாமலை* |
| *கவச மந்திரமாக* | *– திருக்காளத்தி* |
| *நேத்திர மந்திரமாக* | *– திருக்காஞ்சி* |
| *அஸ்திர மந்திரமாக* | *– திரு இராமேசுவரம்* |

கருவறைக்கு அடுத்துள்ள சுற்றுக்களில் விநாயகர், முருகன், தக்ஷிணாமூர்த்தி, விஷ்ணு, பிரம்மா, துர்க்கை, சண்டேசர், ரிஷபம், சூரியன், பைரவர், ஸோமாஸ்கந்தர் முதலானோர் பரிவார தேவர்களாக விளங்குவர். பரிவார தெய்வமூர்த்தங்கள் என்ற நிலையில் சிதம்பர மூலத்தானத்திற்கு எந்த எந்தத் தலம்

விளங்குகிறது என்பதை அடுத்துவரம் சுலோகங்கள் கூறுகின்றன.

விநாயகராக – திரிசிரபுரம் எனப்படும் திருச்சி

கந்தப்பெருமானாக – திருவேங்கடம்

விஷ்ணுவாக – ஸ்ரீரங்கம்

பிரம்மாவாக – ஆஜ்மீர்

பைரவராக – திருக்கண்டியூர் முதலான அட்ட வீரட்டத் தலங்கள்

தக்ஷிணாமூர்த்தியாக– சிவபுரம்

ரிஷபமாக – திருக்கோணமலை

துர்க்கையாக – விந்தியமலை

சண்டேசராக – திருக்கழுக்குன்றம்

சூரியனாக – திருவானைக்கா

வர்த்மம் என்றால் ரீதி அல்லது வழி எனப் பொருள். பிராகார க்ஷேத்ர வர்த்மனா அதாவது பரிவார க்ஷேத்திரங்கள் என்ற ரீதியில், நியதியில், சிதம்பரத் தலத்துக்கு திருக்கோகர்ணம் முதலான க்ஷேத்திரங்கள் விளங்குகின்றன என்பதை மகுடோத்த ராகமம் உறுதிப்படுத்துகிறது. பாரதப் பெருநிலப்பரப்பு முழுவதையும் ஏன், இலங்கையையும் கூட சிதம்பர வழிபாட்டு முறை, ஸ்தலகர்ப பாவனை என்ற யோகநெறியில் இணைத்து ஒன்றாக்கி விடுகிறதல்லவா? இதுவன்றோ அகண்டாகாரமான பாவனை! நமது சிந்தனை எவ்வளவு தூரத்துக்கு விரிந்து விரிந்து

படர்ந்து படர்ந்து பெருகிக் கொண்டே போகிறது! ஆகம விஞ்ஞானமும் வாஸ்து விஞ்ஞானமும், சிறுமை களின் ஊடே சிக்குண்டு சிதறிக் கிடக்கும் மனித உள்ளத்தைப் படிப்படியாகப் பண்படுத்திப் பெரிதாக்கி எந்த அளவுக்கு உயர்த்தி, அகண்டாகார மயமாக்கி விடுகின்றன என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும். மிக உயர்ந்த ஆன்மவிஞ்ஞான நுட்பங்களைப் புலப் படுத்துபவை ஆகமநூல்களும் சிற்பநூல்களுமே.

சிதம்பரத்துக்கும் சீகாழி எனப்படும் பிரம்ம புரத்துக்கும் இடைப்பட்ட தூரம் அதிகம் இல்லை. சிதம்பரத்தின் எல்லைக்கு உட்பட்டதாகவே சீகாழியைக் கொண்டால், ஸ்தலகர்ப பாவனை என்ற முறையில் சிதம்பரத் தலத்துக்குரிய பரிவாரத் தலங்கள் அனைத்தும் பிரம்மபுரத்துக்கும் உரியனவாகத் திகழ்கின்றன எனக் கருதுவதில் தவறில்லை.

'ஊர்பரந்த உலகின் முதலாகிய ஓர் ஊர்' என்றும், 'பின்றியும் பீடும் பெருகும் பிரம்மபுரம்' என்றும் திருஞான சம்பந்தரால் புகழப்பெறும் பிரம்மபுரம் அங்கி என்னும் நிலையில் (அங்கத்தை உடையது எனும் நிலையில்) திகழ்வது. இது வேணுபுரம், புகலி, சண்பை முதலான தல நிலைகளைத் தன்னுள் அங்கங்களாகக் கொண்டிருக்கின்ற நிலை. இதனை நிஷ்கள பிரம்மபுரம் என்றும் கொள்ளலாம். நிஷ்கள பிரம்மபுரம் என்ற பாவனையில் தம்மை நிறுத்திக்கொண்டுதான் திருஞானசம்பந்தர் 'கறையணி வேல் இலர் போலும்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடுகின்றார்.

கறையணி வேல்இலர் போலும் கபாலம் தரித்திலர் போலும்
மறையும் நவின்றிலர் போலும் மாசுணம் ஆர்த்திலர் போலும்
பறையும் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையும் சடைக்கிலர் போலும் பிரமபுரம் அமர்ந்தாரே. 1

கூரம் பதுவிலர் போலும் கொக்கின் இறகிலர் போலும்
ஆரமும் பூண்டிலர் போலும் ஆமை அணிந்திலர் போலும்
தாரும் சடைக்கிலர் போலும் சண்டிக்கு அருளிலர் போலும்
பேரும் பல இலர் போலும் பிரம புரம் அமர்ந்தாரே. 2

சித்த வடிவிலர் போலும் தேசம் திரிந்திலர் போலும்
கத்தி வரும்கடும் காளி கதங்கள் தவிர்த்திலர் போலும்
மெய்த்த நயனம் இடந்தார்க்கு ஆழி அளித்திலர் போலும்
பித்த வடிவிலர் போலும் பிரம புரம் அமர்ந்தாரே. 3

நச்சர வாட்டிலர் போலும் நஞ்சம் மிடற்றிலர் போலும்
கச்சுத் தரித்திலர் போலும் கங்கை தரித்திலர் போலும்
மொய்ச்சவன் பேயிலர் போலும் முப்புரம் எய்திலர் போலும்
பிச்சை இரந்திலர் போலும் பிரம புரம் அமர்ந்தாரே. 4

தோடு செவிக்கிலர் போலும் சூலம் பிடித்திலர் போலும்
ஆடு தடக்கை வலிய ஆனை உரித்திலர் போலும்
ஓடு கரத்திலர் போலும் ஒள்ளழல் கையிலர் போலும்
பீடு மிகுகத்தெழு செல்வப் பிரம புரம் அமர்ந்தாரே. 5

விண்ணவர் கண்டிலர் போலும் வேள்வி அழித்திலர் போலும்
அண்ணல் அயன்தலை வீழ அன்றும் அறுத்திலர் போலும்
வண்ண எலும்பினொ டக்கு வடங்கள் தரித்திலர் போலும்
பெண்ணினம் மொய்த்தெழு செல்வப் பிரம புரம் அமர்ந்தாரே.
6

பன்றியின் கொம்பிலர் போலும் பார்த்தற் கருளிலர் போலும்
கன்றிய காலனைவீழக் கால்கொடு பாய்ந்திலர் போலும்

*துன்று பிணஞ்சுடு காட்டில் ஆடித் துதைந்திலர் போலும்*
*பின்றியும் பீடும் பெருகும் பிரம புரம் அமர்ந்தாரே.* 7

*பரசு தரித்திலர் போலும் படுதலை பூண்டிலர் போலும்*
*அரசன் இலங்கையர் கோனை அன்றும் அடர்த்திலர் போலும்*
*புரைசெய் புனத்திள மானும் புலியின் அதளிலர் போலும்*
*பிரச மலர்ப்பொழில் சூழ்ந்த பிரம புரம் அமர்ந்தாரே.* 8

*அடிமுடி மாலயன் தேட அன்றும் அளப்பிலர் போலும்*
*கடிமலர் ஐங்கணை வேளைக் கனல விழித்திலர் போலும்*
*படிமலர்ப் பாலனுக்காகப் பாற்கடல் ஈந்திலர் போலும்*
*பிடிநடை மாதர் பெருகும் பிரம புரம் அமர்ந்தாரே.* 9

*வெற்றரைச் சீவரத் தார்க்கு வெளிப்பட நின்றிலர் போலும்*
*அற்றவர் ஆல்நிழல் நால்வர்க்கு அறங்கள் உரைத்திலர்*
*போலும்*
*உற்றலர் ஒன்றிலர் போலும் ஓடு முடிக்கிலர் போலும்*
*பெற்றமும் ஊர்ந்திலர் போலும் பிரம புரம் அமர்ந்தாரே.* 10

*பெண்ணுரு ஆணுரு அல்லாப் பிரம புரநகர் மேய*
*அண்ணல் செய்யாதன வெல்லாம் அறிந்துவகைவகை யாலே*
*நண்ணிய ஞானசம் பந்தன் நவின்றன பத்தும் வல்லார்கள்*
*விண்ணவ ரோடினி தாக விற்றிருப் பாரவர் தாமே.* 11

"நிஷ்கள பிரம்மபுரத்தில் விளங்கும் சிவபெருமானும் நிஷ்களப் பேரொளி மயமானவரே. ஏகாகாரமான பேரொளிப் பிழம்பே என் கண் முன் வெளிப்பட்டுள்ளது. இந்தப் பேரொளி வடிவம் சூலம் தாங்கவில்லை; கபால மாலை அணியவில்லை; பாம்பு அணியவில்லை; பறையும் இல்லை; பரசும் இல்லை. கொக்கிறகு, ஆமை ஓடு, அக்குவடம், எலும்பாபரணம்

முதலானவற்றுள் எதுவும் அவ்வடிவத்தில் காணப்படவில்லை. அந்த வடிவு ஆணுமன்று; பெண்ணுமன்று...”

என உபாதி ரகிதமான, அதாவது எந்தவித அடையாளமும் இல்லாத பேரொளித் தூணின் திருத்தோற்றம் இப்படிப்பட்டது என நமக்குத் தெரிவிக்கின்ற அருமைத் திருப்பதிகம் இது. நிஷ்களமான பரம்பொருள் பற்றிய நுட்பமான அரிய பெரிய தோத்திரத் திரட்சி இது. அடையாளங்களையும் காட்டி, அடையாளம் ஏதும் இல்லாத அருவப் பேரொளி நிலையின் அருமை பெருமையையும் காட்டும் இது, தோத்திரங்களுள் சுடர்மிக விட்டுத் துலங்குகின்றது..

இத்திருப்பதிகம், தனிமுதல் தன்மையில் மூலத் தலமாக விளங்கும் பிரம்மபுரத்து உரியது.

இத்தகைய பிரம்மபுரத்தை ஆலயமாகக் கொள்ளும்போது ஐந்தாவது வெளிப் பிராகாரமாகிய மஹாமர்யாதா என்ற சுற்றில் பிரம்மபுரம், வேணுபுரம், புகலி என்னும் மூன்று தலநிலைகள் பொருந்துகின்றன. அடுத்த உட்பிராகாரமாகிய மர்யாதா என்ற சுற்றில் வெங்குரு, தோணிபுரம், பூந்தராய் எனும் மூன்று தலநிலைகள் பொருந்துகின்றன; அதற்கு அடுத்த உட்பிராகாரமாகிய மத்தியஹாரம் என்ற சுற்றில் சிரபுரம், புறவம், சண்பை எனும் மூன்று தலநிலைகள் ஒன்றித்து விடுகின்றன; அடுத்த உட்பிராகாரமாகிய அந்தர் ஹாரம் எனும் சுற்றில் சீகாழி, கொச்சைவயம், கழுமலம்

எனும் மூன்று தலநிலைகளும் பொருந்துகின்றன. மையப் பதமான அந்தர்மண்டலம் (கருவறைச் சுற்று) மேற்கூறப்பட்ட பிரம்மபுரம் முதல் கழுமலம் ஈறாக உள்ள பன்னிரண்டு நிலைகளையும் தன்னுள் ஒடுக்கிக் கொண்டதாய் மூலத்தலமான பிரம்மபுரம் என விளங்குகிறது. **"பின்றியும் பீடும் பெருகும் பிரமபுரம் என்று திருஞானசம்பந்தர் கூறுவதில் பின்றி என்பது வெளி எல்லை எனப் பொருள் தந்து தலநிலையாக அதாவது அங்கமாக இருக்கும் பிரமபுரத்தையும் பீடு என்பது கருவறைச் சுற்றாக அதாவது அங்கியாக இருக்கும் பிரம்மபுரத்தையும் குறிக்கும்.** வெளி எல்லையாகவும் சக்திக் கூறுகள் அனைத்தும் திரண்டு விளங்கும் பிரம்மத்தானமாகவும் பொருந்திப் பெருகி விளங்கும் பிரம்மாபுரம் எனப் பிரபஞ்சப் பிரம்ம நிலையை விளக்கி அருளுகின்றார் திருஞான சம்பந்தர்.

பிரம்மபுரம் என்கின்ற பேராலயத்தின் பிராகார கோஷ்டங்களாக விளங்குகின்ற பன்னிரண்டு தலநிலை களையும் சிவமயமாகவே கண்டு அருளானந்த அனுபவம் முதிரப்பெற்று விளங்குவதால், திருஞான சம்பந்தர், "தலநிலைகளையே ஆழ்ந்த பாவனைத் திறத்தால் போற்றி செய்யுங்கள்" என மூலகுருவாக விளங்கி நமக்கு வழிகாட்டுகின்றார். தலநிலைகளாக விளங்குபவை, சிவமூர்த்தங்களே.

"பிறையணி செஞ்சடையான் பிரமாபுரம் பேணுமினே"

"பேரிடமாகக் கொண்ட பிரமாபுரம் பேணுமினே"

"பெற்றிமையால் இருந்தான் பிரமாபுரம் பேணுமினே"

*"உமையொடிருந்த பிரான் பிரமாபுரம் பேணுமினே"*
(இறையவன் ஈசன் எனத் தொடங்கும் திருப்பதிகம்)

ஊரின் பெருமையையும் வளத்தையும் பாடி இறைவனின் பெருமைகூறி அவனை வழிபடுவது ஒருவகை.

ஆனால் இறைவனின் பெருமையைக் கூறி, அத்தகைய இறைவன் கோயில் கொண்டுள்ள தலத்தின் பெருமையைக் காட்டி அத்தலத்தை வழிபடுமாறு வழிகாட்டும் திருஞானசம்பந்தர், தலம் என்பதையே ஆதார - ஆதேய இணக்கநிலையில் சிவமாகக் கருதி துதிக்கும் தனித்ததொரு சிறப்பான வழிபாட்டு வழிமுறைக்கு வித்திடுகின்றார். ஆதாரம் – இடம்; ஆஸனம். ஆதேயம் – இடத்தில் வெளிப்பட்டு விளங்குவது; இடத்தில் இருப்பது.

*"நிலவும் புனலும் நிறைவாள் அரவும்*
*இலகும் சடையார்க்கு இடமாம் எழிலார்*
*உலவும் வயலுக்கு ஒளியார் முத்தம்*
*விலகும் கடலார் வேணு புரமே"* (இரண்டாம் திருமுறை)

இவ்வாறு தொடங்கும் பதிகம் முழுவதுமே தலத்தை முன்னிறுத்தியே இறைவனைக் காட்டுகிறது. அதாவது திருஞானசம்பந்தர் தலத்தைக் காட்டி இறைவனைக் காட்டாமல் இறைவனைக் காட்டித் தலத்தைக் காட்டுகின்றார். "இந்த இடத்தைக் காண்க. இது சடை முடி இறைவனுக்குரிய இடம்" இவ்வாறு உணர்த்தும் போது இடமே பிராதான்யம்; முக்கியத்துவம் பெறுகிறது. "இந்த இடத்தில் உள்ள இறைவனைக்

காண்க" என உணர்த்தும்போதுதான் இறைவனுக்கு முக்கியத்துவம் வருகிறது. பெரும்பாலான பதிகங்களில் திருஞானசம்பந்தர் இடப் பிராதான்யத்தையே புலப்படுத்துகின்றார். இடமே - தலம் முழுவதுமே கருவறையாகவும் இறைவனாகவும் அவர்க்குக் காட்சியளிப்பதே இதற்குக் காரணம்.

*"விதியாய் விளைவாய் விளைவின் பயனாகிக்*
*கொதியா வருகூற்றை உதைத்தவர் சேரும்*
*பதியாவது பங்கயம்நின்று அலரத்தேன்*
*பொதியார் பொழில்சூழ் புகலிந் நகர்தானே"*

"பதியாவது புகலி" என்று உணர்த்துகின்றாரே தவிர, "பதியில் உள்ள இறைவனை நான் துதிக்கிறேன்" எனக் கூறவில்லை. காரணம் என்ன? துதிப்பதைக் காட்டிலும், **உணர்வது** முக்கியம். பதியின் - தலத்தின் அகண்டாகாரத் தன்மையை உணர்ந்தாலே போதும். இறைவனின் வியாபகத்தைத் தெளிவாக அனுபவித்து விடலாம். திருஞானசம்பந்தர் நமக்கு அருளும் யோகக் குறிப்பு இது.

இவ்வாறே "எங்கள் பெருமான் இடம்... தோணி புரமாமே", "பூந்தராய் போற்றுதுமே", "சிலையவன் வளநகர் சிரபுரமே", "புண்ணிய மறையவர் நிறைபுகழ் ஒலிமலி புறவமே", "அடிகள், சந்தமலி குந்தளநன் மாதினொடு மேவுபதி சண்பைநகரே", "தார்கொள் வண்டினம் சூழ்ந்த தண்வயற் காழிநன்னகரே", "கொடையுடை வண்கையாளர் மறையோர்கள் என்றும் வளர்கின்ற கொச்சை வயமே", "கடலொலி

யோதம் மோதவந்தலைக்கும் கழுமல நகர் எனலாமே" எனப் பல திருப்பதிகங்களிலும் இறைவனைக் காட்டுவதன் மூலம் தலத்தையே காட்டித் தலத்தின் சீலத்தையும் இறைமையையும் **அகண்ட விருத்தி** எனப்படும் யோகப் பேருணர்வால் உணர்வதே பெரும் பயன் அளிக்கவல்லது என நிறுவுகிறார் திருஞான சம்பந்தர்.

பிரம்மபுரத் தலப்பரப்பு முழுவதையுமே கோயிற் கருவறை, பிரம்ம பதம் என வைத்துக் காணும்போது பிரம்மபுரத்தைச் சூழ்ந்து அண்மையில் உள்ள தலங்கள், சற்றுத் தொலைவில் உள்ள தலங்கள், நெடுந்தூரத்தில் உள்ள தலங்கள் என உள்ளவை அனைத்துமே பிரம்மபுரக் கருவறைக்குரிய தைவிகபதம், மானுட பதம், பைசாச பதம், ராக்ஷஸ பதம் என்னும் திருச் சுற்றுகளாகவும், அவற்றுக்குரிய தெய்வ வடிவங்களாக வும், பாவனை அளவில் உருமாற்றம் பெற்று விடுகின்றன. மகுடோத்தர ஆகமம் கூறும் 'ஸ்தல கர்ப்ப பாவனை', சிதம்பரத்துக்குப் பொருந்துவதுபோல் பிரம்மபுரத்துக்கும் பொருந்திவிடுகிறது. பிரம்மபுரத் தைக் கோயிற்கருவறையாக - பிரம்மபதமாக - பாவித்து, 'ஸ்தல கர்ப்ப பாவனை' நோக்கில் திருஞானசம்பந்தர் பாடுகின்றார்.

*"நீலம்சேர் மிடற்றினீர் நீண்டசெஞ் சடையினீர்*
*கோலம்சேர் விடையினீர் கொடுங்காலன் தனைச்செற்றீர்*
*ஆலம்சேர் கழனி அழகார் வேணுபுரம் அமரும்*
*கோலம்சேர் கோயிலே கோயிலாகக் கொண்டீரே"*

மூன்றாம் திருமுறை

இங்கே "வேணுபுரம் அமரும் கோலம் சேர் கோயில்" என்பதற்கு வேணுபுரத் தலநிலை பிராகார மாகக் கோலம் கொண்டிருக்கும் பிரம்மபுரக் கோயில் எனப் பொருள். கோயிலாகக் கொண்டீரே என்பதற்கு, "பிரம்மபுரம் முழுவதையுமே கருவறைக் கோயிலாகக் கொண்டு விளங்குகின்றீர்" என்று பொருள்.

**பிரம்மபுரப் பரப்பு முழுவதையும் ஆலயமாகக் கொள்வது முதற்படிநிலை; பிரம்மபுரப் பரப்பு முழுவதையும் ஆலயத்தின் கருவறையாகக் கொள்வது முதிர்ந்த படிநிலை.** ஸ்தல கர்ப்ப பாவனை என்பது இந்த முதிர்ந்த படிநிலையே.

எந்தத் தலத்தையும், முதிர்ந்த படிநிலையாகிய ஸ்தல கர்ப பாவனையில் தியானித்துக் கொள்ளலாம். தடையேதும் இல்லை. அந்தப் பாவனையால் அடையக் கூடிய யோகப் பேறுகள் மிகப் பல. திருஞானசம்பந்தப் பெருமான் வேறு பல தலங்களிலும் இந்த ஸ்தல கர்ப பாவனையைப் பின்பற்றியுள்ளார்.

*"பெண்ணமரும் திருமேனி உடையீர்; பிறங்கு சடை தாழப்*
*பண்ணமரும் நான்மறையே பாடியாடல் பயில்கின்றீர்*
*திண்ணமரும் பைம்பொழிலும் வயலும் சூழ்ந்த திருநல்லூர்*
*மண்ணமரும் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே"*

திருநல்லூர்த் தலம், ஆலயக் கருவறையாக இங்கே பாவிக்கப்படுகிறது.

*"பொங்கும்நூல் மார்பினீர் பூதப்படையீர் பூங்கங்கை*
*தங்குசெஞ் சடையினீர் சாமவேதம் ஓதினீர்*

*எங்கும் எழிலார் மறையோர்கள் முறையால் ஏத்த*
*இடைமருதில்*
*மங்குல்தோய் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே”*

இங்கே திருவிடைமருதூர் ஆலயக் கருவறையாகப் பாவிக்கப்படுகிறது. மற்றும் திருத்தலைச்சங்காடு முதலான பல தலங்களும் இவ்வாறு பாவிக்கப்படு வதைக் காண்க.

தலத்திற்குத் தலம் வேறுபாடோ பேதமோ காணாமல் ஒவ்வொரு தலமும் ஏனைய தலங்களோடு கோயில் அமைப்பு முறையில் அதாவது ஸ்தல கர்ப பாவனையில் தொடர்புடையதாகவும் ஒன்றித்து விளங்குவதாகவும் உணர்ந்து கொள்ள வேண்டும். இவ்வாறு உணர்ந்து கொள்ளப் பதிகப் பெருவழி காட்டும் மூலகுரவரே திருஞானசம்பந்தர்.

# 4

## பிரம்மபுரமும் காலச்சக்கிரமும்

ஆகம-சிற்ப விஞ்ஞானக் கோட்பாடுகளுள் மிக முக்கியமான ஒன்று இடமும் காலமும் ஒன்றே என்பது. இடம் எப்பொழுது தோன்றுகிறதோ அப்பொழுது காலமும் தோன்றிவிடுகிறது. இடம் எந்த அளவுக்கு விரிவடைகிறதோ அந்த அளவுக்குக் காலமும் விரிவடைகிறது. இடத்துக்கும் காலத்துக்கும் அமைந்துள்ள உருவியல் தொடர்பான கணக்கு ஒன்றே. காலம் பரம்பொருளோடு ஒன்றித்து விளங்குவது.

அசுத்த மாயையில் முதலில் தோன்றும் தத்துவம் காலதத்துவம் என்பது சைவ சித்தாந்தக் கோட்பாடு. அங்ஙனமாயின் சுத்தமாயையில் காலம் இல்லை என்பது பொருளன்று. விந்துப் பரப்பு எனப்படும் சுத்த மாயைப் பரப்பில் காலத்தின் செயற்பாடு நிச்சயமாக உள்ளது. சுத்தமாயைப் பரப்பில் முப்பத்து மூன்று புவனங்கள் உள்ளன. புவனங்கள் உண்டு என்றால் என்ன பொருள்? அந்த அந்தப் புவனத்தில் வாழும்

தூய ஆன்ம வர்க்கம் உண்டு; ஆன்ம வர்க்கமும் போகங்களும் இல்லை எனில் புவனங்களின் இருப்பால் என்ன பயன்? சுத்தமாயைக்கு அதிபதியான சிவத்துக்கும் இந்தப் புவனங்களால் எவ்விதப் பயனும் இல்லை. எனவே புவனங்கள் உண்டு என்று சொல்வதாலேயே, ஆன்மாக்கள் உண்டு; அந்த ஆன்மாக்களுக்குரிய போகங்கள் உண்டு; **போகங்களை வரையறை செய்யும் காலமும் உண்டு** என விளங்கிக் கொள்ள வேண்டும்.

அங்ஙனமாயின், அசுத்த மாயையில் கால தத்துவம் தோன்றுகிறது என எதற்காகக் கூறவேண்டும் எனில் அடுத்துத் தோன்றும் நியதி தத்துவத்துக்கு ஏற்ப வினைப்பயனை வரையறுப்பதும், இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனவும் 'உடன்' 'பிற்பாடு' எனவும் பிரிவுகளுக்கு உட்படுவதுமாகிய அசுத்தகாலம் ஒன்று அவசியமாகிறது என்பதை உணர்த்தவே அவ்வாறு கூறப்படுகிறது.

சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை (விந்து, மோகினி, மான்) என மாயை மூன்று நிலைகளில் உணரப்படுவது போன்று காலமும் சுத்த காலம், அசுத்த காலம், பிரகிருதி காலம் என மூன்று நிலைகளிலும் உணரப்படுகிறது. ஆகம-சிற்ப விஞ்ஞான அடிப்படையில் கூறவேண்டுமாயின் இடமானது நுண்மை, நுண்மையும் பருமையும் கலந்தது, பருமை என மூன்று நிலைகளில் விளங்குவது போன்று காலமும் நுண்மைக் காலம். நுண்மையும் பருமையும் விரவிய மிசிர காலம், பருமைக் காலம் (தூலகாலம்) என மூன்று நிலைகளில் செயற்படுகிறது.

தோன்றிய அனைத்தும் தத்தம் காரணத்துள் ஒடுங்கி நிற்பதாகிய பேரொடுக்க நிலையில் இடமும் காலமும் ஒரு நுண்ணிய புள்ளியாக ஒன்றித்து ஒடுங்கி விடுகின்றன. அப்பொழுதும் அதனைப் பேரொடுக்க **காலம்** எனக் கூறுகிறோமே தவிரப் பேரொடுக்க இடம் எனக் கூறுவதில்லை. பேரொடுக்கம் (மஹாப் பிரளயம்) நிகழ்ந்தாலும் பேரொடுக்கம் நிகழ்கின்ற காலம் என ஒன்று உண்டு அல்லவா? 'மீளத் தோற்றுவித்தல்' எனப்படும் புனர் உற்பவ நிலைக்கும் பேரொடுக்க நிலைக்கும் இடையே காலம் தானே உள்ளது?

'காலமே இல்லாதிருக்கும் நிலை ஒன்று உண்டு' என தத்துவவாதிகள் சிலர் கூறுவர். வாதத்திற்காக ஒத்துக்கொண்டாலும், "காலமே இல்லாதிருக்கும் நிலை **எப்பொழுது** ஏற்படுகிறது? அந்த நிலை **எவ்வளவு காலம்** நீட்டிக்கும்?" எனும் கேள்விகள் எழத்தான் செய்யும். எனவே முடிபொருள்தான் என்ன எனில் இறைவனே கால வடிவாகத்தானே விளங்குகிறான்; காலத்தைச் செலுத்தும் காலகாலனாக உள்ளான் என்பதுதான். "கால சக்ரப் பிரவர்த்தகன்" அதாவது காலச் சக்கிரத்தை முறைப்படி சுழற்றிக் கொண்டிருப்பவன் என, நடராஜப் பெருமானுக்குரிய மந்திரங்களுள் ஒன்று விளங்குகிறது. சிற்பவிஞ்ஞானி மயன் 'காலமாக் கடவுள்' என்று கூறித் தேர்க்கலையையும் சிற்பக் கலையையும் கட்டிடக் கலையையும் காலத்தின் பின்னணியிலேயே விளக்குவான். மணிவாசகப் பெருமானும் இறைவனைக் காலமயமாகவே காண்கின்றார்.

*"மேலை வானவ ரும்மறி யாததோர்*
*கோல மேயெனை ஆட்கொண்ட கூத்தனே*
*ஞால மேவிசும் பேஇவை வந்துபோம்*
*காலமே உனை என்று கொல் காண்பதே"* திருச்சதகம்: 43

**"கருமை பெற்ற கடல் கொள்ள மிதந்ததோர் காலம் இது"** — *"அனைத்தும் ஒடுக்கப்படும் பேரூழிக் காலத்தில் ஒடுங்காமல் தோணியாக மிதந்த காலம் இன்னது என்னச் சுட்டிக்காட்டுமாறு பெருமை கொண்டு விளங்குவது பிரம்மபுரம்" எனத் திருஞான சம்பந்தர் பொன்றாக் காலமாகிய புனித காலத்தை, தூய காலத்தை, அகண்டிதமான காலத்தை, தோணி யப்பரைத் தம் தந்தைக்குக் காட்டியது போன்று* **'இது'** *எனத் தெளிவுபடக் காட்டிவிடுகின்றார்.*

*அசுத்த மாயையில் தோன்றும் காலம் பிரிவுகளுக்கு உட்படுவது. சுத்த மாயைக்கு உரிய காலம் பிரிவுகளுக்கு உட்படாதது. அசுத்த மாயைக் காலத்துக்கு எல்லை உண்டு; சுத்தமாயைக் காலத்துக்கு எல்லை இல்லை. (சதாசிவ காலம் என்பது வரையில் பேரெல்லைக் காலம் உண்டு. மேற்பட்ட சக்தி, சிவ தத்துவ நிலைகளில் எல்லைக்கு உட்படாக் காலமே) அசுத்தமாயைக் காலம் கன்ம மலத்தை அனுசரித்துச் செயற்படுவது. சுத்தமாயைக் காலம் கன்ம மலம் கலவாதது.*

*பெருமைக்குரிய குருவிடம் உரிய முறைப்படி தீக்ஷை பெற்றுச் சிவபூஜை செய்வோர்க்கு விதிக்கப் பட்டிருக்கும் விதிகளுள் ஒன்று "வழிபடும் இடத்தையும்*

சூழலையும் சுத்த வித்யா மயமாகப் பாவித்துக் கொள்க" என்பது. இது மிகமிக முக்கியமாக அனுட்டிக்கப்பட வேண்டிய நியதி. ஏன் அவ்வாறு பாவித்துக் கொள்ள வேண்டும் என்பதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று காலம் என்பதை அடிப்படையாகக் கொண்டது. அசுத்த காலத்திற்கு உட்பட்டிருக்கும் பூஜகன் தன்னை சுத்த காலத்துக்கு, காலம் கடந்த காலத்துக்கு உட்பட்டவனாகவும் உரியவனாகவும் மாற்றிக்கொள்ள வேண்டும். இதைத்தான் அவ்விதி உணர்த்துகிறது.

நாம் அனைவரும் பிரகிருதி மாயையில் இருப்பவர்கள். பிரகிருதி மாயையில் இருக்கும் நம்மை, (நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், நமக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும்) சுத்தமாயையோடு தொடர்புபடுத்துபவை இரண்டு. ஒன்று வாக்கு; மற்றொன்று சுத்தகாலம்.

மிகவும் தூலமான வைகரி வாக்குகளை நாம் பேசுகிறோம். தூல வைகரிக்குத் தோற்றுவாய்த் தானம் சுத்த மாயைக்குரிய சுத்தவித்யா தத்துவம். **அங்கே தோன்றிய வாக்கினைப் பராசக்தி என்னும் காற்று பதினாறு நிலைகளில் செயற்பட்டு உந்தித் தள்ளிப் பூமி நிலைக்குக் கொண்டு வந்து சேர்க்கிறது.** இதைப்பற்றி மதங்க பாரமேசுவர ஆகமம் விரிவாகப் பேசுகிறது.

அசுத்தமாயைப் பரப்பில் வாக்கு தோன்றுவதில்லை. வாக்கின் உற்பத்தி சுத்தமாயையில்தான். நாம் பேசும் பேச்சுகளுக்கு சுத்த மாயையில் தோன்றும்

வாக்கே காரணம். எனவேதான் பிரகிருதி மாயையில் இருக்கும் நம்மை சுத்தமாயையோடு தொடர்பு படுத்துவது வாக்கு எனக் கூறப்பட்டது. இவ்வாறு தான் சுத்தகாலமும் தொடர்புபடுத்துகிறது..

சிவவழிபாடு செய்வோன் தன்னைச் சுத்த காலத்தின் செயற்பாட்டுக்கு ஆட்படுத்திக் கொள்ள வேண்டித் தான் வழிபடும் இடத்தை சுத்த மாயைக்குரியதாகப் பாவித்துக்கொள்ள வேண்டும். அப்படியானால் சிவபூஜை செய்வோர் தவிர மற்றையோர்க்கு சுத்த காலத் தொடர்பு வேண்டாமா? அவர்களும் சுத்தகாலத் தொடர்புடையவர்களாக வாழ வேண்டாமா?

வேண்டும். அனைவர்க்கும் அந்தப் பேறு வேண்டும். பிரகிருதி மாயையில் வாழும் அனைத்து உயிர்க் கூட்டங்களுக்கும் அந்தப் பேறு வேண்டும். அனைத்துயிர்க்கும் சுத்தகாலத் தொடர்பு கிடைக்க வேண்டும் என்பதற்காகத்தான் காலமயமாக விளங்கும் கண்ணுதற்பெருமான் விசேட காலங்களை, புண்ணிய காலங்களை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறான். "அசுத்த மாயையிலும் பிரகிருதி மாயையிலும் இருப்போர்க்குச் சுத்தமாயையின் நேரிடைத் தொடர்பு கிடைக்க வேண்டி நிர்மாணம் செய்யப்பட்ட காலம், நிர்ணயம் செய்யப்பட்ட காலம் எதுவோ, அதுதான் புண்ணிய காலம்; விசேஷ காலம்" என, தீப்தம் என்னும் ஆகமம் புண்ணிய காலம் பற்றி விளக்கம் தருகிறது.

ஊழிதோறும் உயர்ந்தோங்கி, ஒருபோதும் அழியாமல் காலாதீதமாக விளங்கும் பிரம்மபுரம் தனக்குரிய பன்னிரண்டு திருப்பெயர்களுக்குரிய நிலைகளாலும், வாக்கையும் சுத்தகாலத்தையும் போன்று அனைத்துயிர்க்கும் சுத்தமாயைத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டே இருக்கிறது என்பது இனி விளக்கப்படுகிறது.

அபரிச்சின்னம் என்ற நிலையில் காலத்தாலும் இடத்தாலும் பகுத்துக் காட்டப்பட முடியாத, அதீதமான ஸ்தானத்தில் இருந்துகொண்டு கால சக்கிரங்களை இயக்குபவர், மூல சிற்பம் அல்லது மூலப்படிமம், மூலரூபம் என விளங்கும் நடராஜப் பெருமான். இவரால் இயக்கப்படும் காலசக்கிரங்கள் ஐந்து.

1. சாந்தியதீத காலசக்கிரம்
2. சாந்தி காலசக்கிரம்
3. வித்யா காலசக்கிரம்
4. பிரதிஷ்டா காலசக்கிரம்
5. நிவ்ருத்தி காலசக்கிரம்

இவற்றுள் சாந்தியதீத காலசக்கிரம், சாந்திகால சக்கிரம் ஆகிய இரண்டு சக்கிரங்களும் ஆரங்களால் பகுக்கப்படாத ஒரே வட்டாக இருப்பவை. சாந்தியதீத காலசக்கிரம் தனித்ததொரு முழுமையான வட்டு; ஆரங்களின் அமைப்பு கிடையாது. இவ்வாறே சாந்தி காலசக்கிரமும் முழுமையான வட்டாக இருக்கும். இந்த

இரண்டு சக்கரங்களின் சுழற்சியால் அயனம், வருஷம் முதலான பேதங்கள் ஏற்படாது.

அடுத்துள்ள வித்யா முதலான மூன்று சக்கரங் களின் சுழற்சியால் காலபேதங்கள் ஏற்படும். ஒவ்வொரு சக்கரமும் பன்னிரண்டு ஆரங்களால் பகுக்கப்பட்டி ருக்கும். ஓர் ஆரத்திற்கும் மற்றோர் ஆரத்திற்கும் இடைப் பட்ட பகுதி நாள், பக்ஷம், மாஸம் முதலான அந்த அந்தக் கால இடைவெளியை அல்லது எல்லையைக் குறிக்கும்.

நிவ்ருத்தி காலசக்கரம் என்பது பிருதிவி அல்லது பூமி என்னும் மண்டலத்தோடு மட்டும் தொடர்பு டையது. பிரதிஷ்டா காலசக்கிரம் என்பது நீர் என்னும் தத்துவம் முதல் பிரகிருதி தத்துவம் வரையிலான இருபத்து மூன்று தத்துவங்களுக்கு உட்பட்ட ஐம்பத் தாறு புவனங்களோடு தொடர்புடையது. வித்யா காலசக்கிரம் என்பது புருடதத்துவம் முதல் மோகினி என்னும் தத்தும் வரையிலான ஏழு தத்துவங்களுக்கு உட்பட்ட இருபத்தேழு புவனங்களோடு தொடர் புடையது; சாந்தி காலசக்கிரம் என்பது சுத்த வித்தை, ஈசுவரம், சாதாக்கியம் எனப்படும் மூன்று தத்துவங் களுக்கு உட்பட்ட பதினெட்டு புவனங்களோடு தொடர்புடையது. சாந்தியதீத காலசக்கிரம் என்பது சக்தி, சிவம் என்னும் இரண்டு தத்துவங்களுக்கு உட் பட்ட பதினைந்து புவனங்களோடு தொடர்புடையது.

வித்யா சக்கிரம், பிரதிஷ்டா சக்கிரம், நிவிருத்தி சக்கிரம் எனப்படும் கால சக்கரங்கள் ஒவ்வொன்றும் பன்னிரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும்.

1. துடி

2. லவம்

3. நிமேஷம்

4. காஷ்டா

5. கலா

6. கடிகா

7. தினம்

8. பக்ஷம்

9. மாதம்

10. ஸம்வத்ஸரம்

11. யுகம்

12. கல்பம்

இவ்வாறு, காலக்கணக்குப்படி பன்னிரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும் நிவிருத்தி கால சக்கிரம். இறைவன் இயக்க இயங்கி, பிருதிவி தத்துவத் தொடர்புடைய நிகழ்வுகளை ஒழுங்குபடுத்தும். பிருதிவிதத்துவத்தில் ஆயிரம் கோடி அண்டங்கள் உண்டு. ஒவ்வோர் அண்டத்திலும் நூற்றெட்டுப் புவனங்கள் உள்ளன.

இந்த நிவிருத்தி காலசக்கிரம் ஒருமுறை சுழல்வ தற்கு எத்தனை ஆண்டுகள் ஆகும்?

*43,20,000 × 71 × 14 × 2 × 360*

இவ்வளவு ஆண்டுகள் ஆகும். நிவிருத்தி காலசக்கிரம் 100 முறை சுழலும்போது பிரம்மனின் ஆயுட்காலம் முடிகிறது.

நிவிருத்தி காலசக்கிரம் நூறு முறை சுழலும்போது, அதன் மேலுள்ள பிரதிட்டா காலசக்கிரம் ஒரே ஒரு பாகை நகரும். (ஒரு டிகிரி) பிரதிட்டா காலசக்கிரம் ஒரு முழுச்சுற்று வருவதற்கு, நிவிருத்தி காலசக்கிரம்

*100 × 360 = 36,000*

முறை சுழல வேண்டும். இவ்வாறு பிரதிட்டா காலசக்கிரம் நூறுமுறை சுழலும்போது விஷ்ணுவின் ஆயுட்காலம் நிறைவுறுகிறது. அப்பொழுது மேலுள்ள வித்யா காலசக்கிரம் ஒரு பாகை அளவு நகர்கிறது. பிரதிட்டா காலசக்கிரம்

*100 × 360 = 36,0000*

முறை சுழலும்போது வித்யா காலசக்கிரம் ஒருமுறை சுழல்கிறது. வித்யா காலசக்கிரம் நூறு முறை சுழன்றால் உருத்திரரின் ஆயுட்காலம் நிறைவுறுகிறது. இவ்வாறே வித்யா காலசக்கிரம்

*100 × 360 = 36,000*

முறை சுழலும்போது சாந்தி காலசக்கிரம் ஒருமுறை சுழல்கிறது. இது நூறு முறை சுழன்றால் ஈசுவரனின் ஆயுட்காலம் நிறைவுறுகிறது. அப்பொழுது அனைத்துக்கும் மேலுள்ள சாந்தியதீத காலசக்கிரம் ஒரே ஒரு பாகை நகர்கிறது. இது நூறு முறை சுழலும்

போதுதான் பேரொடுக்க காலம் எனப்படும் மஹாப்பிரளயம் நிகழும். பிரம்மனின் ஆயுட்காலத்தில் நூற்றுக்கணக்கான இந்திரர்கள் மறைகின்றனர்; தோன்றுகின்றனர். விஷ்ணுவின் ஆயுட்காலத்தில் நூற்றுக்கணக்கான பிரம்மாக்கள் மறைகின்றனர்; தோன்றுகின்றனர்; மறைகின்றனர். ருத்திர சிவனின் ஆயுட்காலத்தில் நூற்றுக்கணக்கான விஷ்ணுக்கள் மறைகின்றனர்; தோன்றுவதும் மறைவதுமாக உள்ளனர். ஈசுவரனின் ஆயுட்காலத்தில் நூற்றுக்கணக்கான ருத்திரர்கள் தோன்றுவதும் மறைவதுமாக உள்ளனர். சதாசிவனின் ஆயுட்காலத்தில் நூற்றுக்கணக்கான ஈசுவரர்கள் தோன்றுவதும் மறைவதுமாக உள்ளனர். இந்தக் கருத்துக்களை மனத்தில் இருத்திக் கொண்டு, கீழ்வரும் தேவாரப் பாடலைக் காணுங்கள்.

*"நூறு கோடி பிரம்மர்கள் நொந்தினார்*
*ஆறு கோடி நாராயணர் அங்ஙனே*
*ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்*
*ஈறிலாதவன் ஈசன் ஒருவனே"*

–ஆதிபுராணத் திருக்குறுந்தொகை : 3

இத்திருப்பாடலில் ஈசன் எனும் சொல், காலாதீத நிலையில் இருந்து இயக்கும் நிஷ்கள சிவமான நடராஜப் பெருமானையே குறிக்கும். சதாசிவனின் ஆயுட்காலத்துக்குள் தோன்றி மறையும் இந்திரர்களின் எண்ணிக்கை கங்கையாற்று மணலைப்போல் கணிப்புக்கு அப்பாற்பட்டதாக இருப்பதில் ஆச்சரியம் இல்லை.

பிருதிவி மண்டல நாயகனான பிரம்மாவின் ஆயுள் முடியும்போது பிருதிவி தத்துவமும் ஒடுங்கி விடுவதாகக் கருதக்கூடாது. புவனங்கள் தத்துவங்களுள் ஒடுங்க, தத்துவங்கள் கலையில் ஒடுங்குவதாகிய ஒடுக்க காலம் வேறு; பிரம்ம ஒடுக்க காலம் வேறு. இங்கு புவன ஒடுக்க முறையைப் பற்றி விரிவாகக் கூறவில்லை.

நிவிருத்தி காலசக்கிரத்தைக் காட்டிலும் பிரதிஷ்டா காலசக்கிரம் 230 மடங்கு உயரம் உடையது; பிரதிஷ்டா காலசக்கிரத்தைக் காட்டிலும் வித்யா காலசக்கிரம் 700 மடங்கு உயரம் உடையது; வித்யா காலசக்கிரத்தைக் காட்டிலும் சாந்தி கால சக்கிரம் 3000 மடங்கு உயரமுடையது; சாந்தி கால சக்கிரத்தைக் காட்டிலும் சாந்தியதீத காலசக்கிரம் இரண்டு லட்சம் மடங்கு உயரம் உடையது.

இந்தக் காலசக்கிரங்கள் ஐந்தும், கண்ணுக்குப் புலப்படும் வகையில் ஒரு தூலப் பொருளால் ஆக்கப்பட்டவை அல்ல. இவை, குன்றுதல் இல்லாப் பேரொளி மண்டலங்களாகத் திகழ்பவை. பரம வியோமம் எனப்படும் பரமாகாசப் பெருவெளியில் ஒன்றித் திகழ்பவை இவை.

"மஹாதேஜோ மயான் ஏதான் அக்ஷீணான் காலசக்ரகான் |
அப்ருதக்த்வாத் பரம்வ்யோம்னி ப்ராம்யந்தே கல்பகோடிவை||

"ஒடுங்காத பேரொளி மயமாக விளங்கும் இந்தக் கால சக்கிரங்கள், பரமாகாசத்திற்கு வேறாகாமல் இருந்துகொண்டே கோடிக்கணக்கான கல்ப காலங்

களாகச் சுழன்று கொண்டிருக்கின்றன" என்று கூறுகிறது மகுடோத்தரம் எனும் சிவாகமம்.

ஒவ்வொரு சக்கிரமும், ஒரு குறிப்பிட்ட லயக் கணக்கில் இயங்கும்போது சாந்தி, வித்யா, பிரதிஷ்டா, நிவிருத்தி என்னும் நான்கு சக்கிரங்களிலுமுள்ள துடி, லவம் முதலான பன்னிரண்டு பகுதிகளுள் சிலவற்றில் சில காலப்பிரிவுளில் சீரான இணக்கம், ஒன்றிப்பு (Synchronisation) ஏற்படுகிறது. இந்த இணக்கம் ஏற்படும் பொழுது அனைத்துக்கும் மேலுள்ள சாந்தியதீதா காலசக்கிரத்தின் ஒளிவெள்ளம் கீழுள்ள புவனப் பகுதிகளை அடைகிறது; விசேடமான பயன்களைத் தருகின்ற புண்ணிய காலங்களை உருவாக்குகிறது. நமது நிலவுலகில் வியதீபாதம், அர்தோதயம், மஹோதயம் முதலான மகாபுண்ணிய காலங்கள் தோன்றும் முறை இதுதான்.

உலகின் முதலாகிய ஓர் ஊர் எனப் பிரபஞ்ச வித்தாக விளங்கும் பிரம்மபுரம், துடி முதல் கல்பம் ஈறாக உள்ள பன்னிரண்டு காலப்பிரிவுகளையும் பன்னிரண்டு பெயர்களாகக் கொண்டு விளங்குகிறது. காலச்சக்கிரச் சுழற்சி, சுத்த காலத்தின் சிவத்தன்மையை – சாந்தியதீதா காலசக்கிரத்தின் சக்திஒளி வெள்ளத்தை நிலவுலகிற்குப் புண்ணிய காலங்களின் வடிவாகத் தருதல்போன்று, பிரம்மபுரம் முதலான பன்னிரண்டு பெயர்களையும் சுழற்றிச் சுழற்றி ஓதும் செயலானது மிகவும் விசேடமான புண்ணியகாலப் பேறுகளைத் தோற்றுவிக்கும்.

திருஞானசம்பந்தப் பெருமான் "திருச்சக்கர மாற்று" எனப் பெயரிய திருப்பதிகம் ஓதியருளியதன் நோக்கம் இதுதான். காலமயமாக விளங்கும் பிரம்மபுரம், வேணுபுரம், புகலி முதலான தலநிலைப் பெயர்களைக் காலசக்கரத்தைச் சுழற்றுவது போன்று சுழற்றிச் சுழற்றி ஓதிச் சிவமயமான புண்ணியப் பேறுகளைப் பெறுவீர்களாக எனத் திருஞானசம்பந்தப் பெருமான் அருளாணை தருகின்றார்.

"விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம் புகலிவெங் குருமேற்
சோலை
வளங்கவரும் தோணிபுரம் பூந்தராய் சிரபுரம்வண் புறவம்
மண்மேல்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயம் கொச்சைகழு
மலமென்றின்ன
இளங்குமரன் தன்னைப்பெற் றிமையவர்தம் பகையெறிவித்
திறைவனூரே 1

"திருவளரும் கழுமலமே கொச்சைதே வேந்திரனூர் அயனூர்
தெய்வத்
தருவளரும் பொழிற்புறவம் சிலம்பனூர் காழிதகு சண்பை
ஒண்பா
உருவளர்வெங் குருப்புகலி ஓங்குதராய் தோணிபுரம்
உயர்ந்த தேவர்
வெருவவளர் கடல்விடம துண்டணிகொள் கண்டத்தோன்
விரும்புமூரே 2

"வாய்ந்தபுகழ் மறைவளரும் தோணிபுரம் பூந்தராய் சிலம்பன்
வாழூர்
ஓய்ந்தபுற வம்திகழும் சண்பையெழிற் காழியிறை
கொச்சையம்பொன்

*வேய்ந்தமதிற் கழுமலம்விண் ணோர்பணிய மிக்கயனூர்*
*அமரர்கோனூர்*
*ஆய்ந்தகலை யார்புகலி வெங்குருவ தரன்நாளும்*
*அமரும்ஊரே.* 3

— திருச்சக்கரமாற்று

முதற்பாடலில், பன்னிரண்டு பெயர்களும் முன்காட்டப்பட்ட வரிசையிலேயே அமைந்துள்ளன. இரண்டாவது பாடலில் கழுமலம், கொச்சைவயம், வேணுபுரம், பிரம்மபுரம், புறவம், சிரபுரம், காழி, சண்பை, வெங்குரு, புகலி, பூந்தராய், தோணிபுரம் - இந்த வரிசையில் பன்னிரண்டு பெயர்கள் ஓதப் படுகின்றன. மூன்றாவது பாடலில் தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை வயம், கழுமலம், பிரம்மபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு - இந்த வரிசையில் பன்னிரண்டு பெயர்களும் ஓதப்படுகின்றன. இவ்வாறே தொடர்ந்து வரும் பாடல்களிலும் பெயர் வரிசை இறையருட் குறிப்புடன் மாற்றப்படுகிறது.

உலகியல் வழக்கில் சாதாரண நிலையில் வழங்கப்படும் தலப்பெயர்களாகத் திருஞான சம்பந்தப் பெருமான் இந்தப் பன்னிரண்டு பெயர்களையும் கருதவில்லை. இந்தத் திருப்பெயர்களில், நமது கருவி கரணங்களுக்குப் புலப்படாது மிக நுட்பமாகப் பொதிந் திருந்து செயற்படும் யோக மந்திர ஆற்றல்களைக் காண்கிறார் திருஞான சம்பந்தர். அதனால்தான், இப்பெயர்களை மட்டுமே மாற்றி மாற்றிக் கூறித்

திருப்பதிகங்கள் பலவற்றை அவர் பாடி அருள்கிறார். சிவயோக நெறிப்பட்ட செல்வத்தை விழைவோர் இத்தகைய திருப்பதிகங்களின் உட்பொருளையும் உட்கிடக்கையையும் ஆழ்ந்து சிந்தித்துப் பயன்பெற வேண்டும்.

# 5

## சிவதீக்ஷைப் பின்னணியில் பிரம்மபுரம்

ஆகம நூல்களிலும் ஆகம உரைகளிலும் சிவம் எனும் சொல் பல்வேறு அர்த்தங்களை உடையதாக விளக்கப்பட்டுள்ளது. முப்பத்திரண்டு பொருள்கள் சிவம் என்னும் சொல்லுக்குக் கூறப்பட்டுள்ளன. இப் பொருள்களுள் முடிமணியாகத் திகழ்வது இதுதான்: "எப்பொழுதும் தூய்மையாக இருப்பதும், எப்பொழுதும் நிலைத்திருக்கும் தூய்மை நிலையை அளிப்பதும் எதுவோ அது சிவம்." "தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார்" என்று சேக்கிழார் பெருமான் திருஞானசம்பந்தரைப் பற்றிக் கூறுகின்றார். அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய அனைத்திலும் தூய்மை நிலை ஒளிரச் செய்தவர் திருஞானசம்பந்தர். அனைத்தையும் தூய்மைப்படுத்தியவர். (குறிப்பு: சரம், அசரம் என்பன அசைநிலை, அசையாநிலை எனும் **நிலைகளையே** குறிக்கும். தனித்த சரவஸ்து என்றோ தனித்த

அசரவஸ்து என்றோ பிரபஞ்சத்தில் எங்கும் கிடையாது என்று சருவக்ஞானோத்தர ஆகமம் அழுத்தமாக உரைக்கிறது. கேட்பதற்கு வியப்பாக உள்ளதன்றோ! இது வேறொரு நூலில் விரிவாக விளக்கப்படும்.)

சிவம் பெருக்கும் பிள்ளையார் திரு அவதாரம் செய்தருளிய தலம் பிரம்மபுரம். ஒளிமயமான பன்னிரண்டு காலக் கூறுகளின் வடிவாக உள்ள பன்னிரண்டு திருப்பெயர்களைக் கொண்டிருக்கின்ற பிரம்மபுரமும் சிவத்தைப் பெருக்கும் ஆற்றல் உடையதே. தூய்மைப் பெருநிலையை அளிக்கவல்லதே. பிரம்மபுரத்தின் இந்த ஆற்றலை சிவதீக்ஷைப் பின்னணியல் உணர்வது மிகவும் பொருத்தமாக இருக்கும். ஏனெனில் முறைப்படி நிகழ்த்தப் பெறும் சிவதீக்ஷை, தூய்மையை அடையச் செய்வதையே, தூய்மையை நிலை நிறுத்துவதையே குறிக்கோளாக உடையது. தூலதேகநிலை, ஆன்மநிலை ஆகிய இரண்டிலும் மாசு நீங்கிய தூய்மை நிலையை, தீக்ஷை பெறும் சீடன் அடைந்து விடுகிறான். இந்தத் தூய்மை நிலையை எப்படி அளிக்க முடிகிறது? எப்படிப் பெறமுடிகிறது?

"நாம் சிற்சில கட்டுகளால் கட்டப்பட்டிருக்கிறோம். தூய்மை இழந்திருக்கிறோம். இந்தக் கட்டுக்களிலிருந்து விடுபட்டுத் தூய்மைநிலையை எப்பொழுது அடைவது? எப்படி அடைவது?" இவ்வாறான எண்ண ஓட்டம் எப்பொழுது ஒருவனுடைய உள்ளத்தில் எழுகிறதோ, அப்பொழுதே அவன் தீக்ஷை பெறத் தகுதி உடையவனாகி விடுகிறான். இவ்வாறான எண்ண

எழுச்சி பெற்றவர் யாராக இருந்தாலும், ஆண்-பெண் வேறுபாடின்றி அவர் தீக்ஷை பெற்றுக்கொள்ளலாம். "இன்னார் இன்ன .காரணத்துக்காக விலக்கப்பட வேண்டும்" எனும் புறக்கணிப்பு நிலை ஆகமங்களில் கிடையவே கிடையாது.

மற்றொன்றையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்: தீக்ஷை பெறுதல் என்பது மனப்பக்குவத்தை ஒட்டியதே தவிர, கட்டாயநிலையையோ, சூழ்நிலை யையோ ஒட்டியதல்ல. "தீக்ஷை பெற்றுக்கொண்டால் அடுத்து இந்த மடத்திற்கு இளவரசாகவோ அதிபதியாகவோ வரலாம்"; "தீக்ஷை பெற்றுக் கொண்டால் இந்த ஆலயத்தில் பூஜகராக ஆகலாம்" என இவ்வாறு ஓர் எதிர்பார்ப்புடன், ஒரு தேவை அல்லது கட்டாயம் காரணமாகப் பெற்றுக்கொள்வது தீக்ஷை ஆகாது. தீக்ஷை பெறுவது என்பது சாதாரண விஷயம் அல்ல. அது ஒரு சடங்கும் அல்ல. தீக்ஷை கொடுப்பது என்பதும் வியாபார ரீதியாக நடைபெறுவ தன்று; நடைபெறவும் கூடாது.

பயிற்சியும் பக்குவமும் முதிர்ந்த குருவுக்கும் பக்குவம் வாய்ந்த சீடனுக்கும் இடையே ஞான மயமாகவும் யோகமயமாகவும் நடைபெறும் **சிவநிகழ்ச்சியே தீக்ஷை** என்பது. அதனால்தான் கிரணம் எனும் ஆகமம் தீக்ஷை ஒரு ஞானச் செயல், **சித்கர்மம்** என்று கூறுகிறது. ஜாதகர்மம், உபநயனம் முதலானவை ஸம்ஸ்காரங்கள் எனப்படும். ஆனால் தீக்ஷை ஸம்ஸ் காரமாக ஆவதில்லை. ஸம்ஸ்காரங்கள் புறவளர்ச்

சியைப் பற்றியவை. தீக்ஷை என்பதோ அகவளர்ச்சி யைப் பற்றியது.

தூய்மையை இழந்திருக்கும் நிலை, அதாவது பந்தங்களுக்கு ஆட்பட்டிருக்கும் நிலை, எந்தக் காரணங்களால் ஏற்பட்டதோ அந்தக் காரணங்களை நீக்குவதாலும், திடமான நிலையான சிவநிலையை - தூய்மைப் பெருநிலையை அளிப்பதாலும் சித்கர்மமான ஞானச்செயல் தீக்ஷை என அழைக்கப்பெறுகிறது.

*"தீயதே சிவத்வம் ஹி க்ஷீயதே பாபபஞ்ஜரம்*
*தான க்ஷபண யோகாத் தீக்ஷாசேத்யபிதீயதே"*

என்று மகுடாகம - தீக்ஷாவிதி படலம் கூறுகிறது. அனைத்தையும் அறிதல், அனைத்தையும் செய்தல் எனும் ஆற்றல்களை உணர்த்தும் சிவத்துவம் என்னும் பெருநிலையை அளிப்பதாலும், ஆன்மாவை மாசு படுத்தும் பாவக்குவியலை அழிப்பதாலும் - இவ்வாறு அளிப்பது (தீ), அழிப்பது (க்ஷ) எனும் இரண்டு கூறுகளால் - தீக்ஷை எனக் கூறப்படுகிறது.

திருஞானசம்பந்தப் பெருமான் தமது நோக்கா லும், தமது வாக்காலும், தமது நீற்றாலும், தமது திருத்தோற்றத்தாலும் அனைத்துயிர்க்கும் தீக்ஷை வழங்கியவர்; **தீக்ஷை வழங்கிக் கொண்டிருப்பவர்.** அவரது அவதாரத் தலமான பிரம்மபுரமும் தனது திருப்பெயர் களாகிய மந்திரங்களால் தீக்ஷையின் பயனை அளிக்க வல்லது.

*சிவதீக்ஷையின்போது நடைபெறும் நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்:*

*1. தன்னிடமும் மாணாக்கனிடமும் நிகழும் ரேசக, பூரகங்களின் மூலம் சிவகுரு, மாணாக்கனின் ஆன்மாவைப் பிரித்து, குண்ட சிவாக்னியில் சேர்த்து, சிவாக்னியில் கருக்கொண்டு தோன்றும் ஆன்மாவாகச் செய்து, மீண்டும் குண்ட அங்கியிலிருந்து பிரித்து எடுத்து மாணாக்கனின் இதயத்தானத்தில் நிலைநிறுத்தல். இவ்வாறு செய்யப்பெறும் சீடன் 'சிவபுத்திரன்' எனப்படுகிறான். இது விசேடதீக்ஷை நிகழ்வு.*

*2. மாணவனுக்குரியதும் அவனது கன்மங்களுக்கு இடமாக இருப்பதுமான அறுநெறி எனப்படும் ஷடத்துவா என்பதைத் தூய்மைப் படுத்துதல். மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலை எனும் ஆறும் ஷடத்துவா எனப்படும். இவற்றுள் கலை என்பதில் ஏனைய ஐந்தும் அடங்கும். ஆதலால், நிவிருத்தி, பிரதிட்டை, வித்யை, சாந்தி, சாந்தியதீதை எனப்படும் ஐங்கலைகளையும் தூய்மைப்படுத்தினாலே ஏனைய ஐந்தும் தூய்மை அடைந்துவிடுகின்றன. சிவகுரு சிற்சில செயல்களின் மூலமாக, சிவாக்னி பூர்வமாக்* **கலாசுத்தி** *எனப்படும் ஐங்கலத் தூய்மையை நிகழ்த்துகிறார்.*

*3. ஐங்கலைத் தூய்மையைச் செய்தபிறகு, கலைகளினின்று சீடனின் ஆன்மாவைப் பிரித்து*

வாங்கி **பிராசாதம்** எனப்படும் மந்திர நெறியால் பரம சிவத்திடம் ஒடுக்கி, அறுவகைச் சிவகுணங்களும் ஆன்மாவில் தோன்றுமாறு செய்து, மீண்டும் அந்த ஆன்மாவைச் சீடனிடத்திலே நிலைநிறுத்துதல்.

இவ்வாறு செய்வதற்கு, தீக்ஷா குருவானவர், தேர்ந்த சிவயோக அனுபவமும், சிவஞானப் பேறும் பெற்றிருக்க வேண்டும். ஆணவம், கன்மம், மாயை ஆகியவை ஆன்மாவை பந்திக்கும் முறை, தத்துவங்களின் செயற்பாடு ஆகியவை பற்றிய பூரண ஞானம், ஷடத்துவா எனப்படும் அறுநெறி பற்றிய முழுமையான ஞான உணர்வு, மந்திரம் முதலான அறுநெறிகளில் வியாப்பிய - வியாபகம் எவ்வாறு பொருந்தி இருக்கிறது என்பதைப் பற்றிய முழுமையான ஞானம், தனக்கும் சீடனுக்கும் இடையே ரேசக-பூரக இணக்கத்தை உருவாக்கிக்கொள்ளும் யோக முறை, சிவபாவனை, சிவாக்னி பாவனை - இவை அனைத்தும் கைவரப் பெற்றவரே தீக்ஷா குருவாக விளங்கும் தகுதி பெற்றவராவார்.

மந்திரம் முதலான அறுநெறிகளில் மந்திரம் வியாப்பியம் பதம் வியாபகம்; பதம் வியாப்பியம் வர்ணம் வியாபகம்; வர்ணம் வியாப்பியம் புவனம் வியாபகம்; புவனம் வியாப்பியம் தத்துவம் வியாபகம்; தத்துவம் வியாப்பியம் கலை வியாபகம்; இதுதான் அறு நெறிச் செயற்பாட்டிலுள்ள வியாப்பிய-வியாபக பாவகம் என்பது. **வியாப்பியம் என்பது சூழ்ந்து பரவி**

**வியாபித்திருக்கும் ஒன்றனுள் அடங்கி இருத்தல்; வியாபகம் என்பது சூழ்ந்து பரவி ஒன்றைத் தன்னுள் அடக்கி இருத்தல்.** நிவிருத்தி முதலான ஐந்து கலைகளும் வியாபக நிலையில் இருந்துகொண்டு, ஏனைய ஐந்து அத்துவாக் களையும் தங்களுக்குள் அடக்கிக் கொண்டிருக்கின்றன. எனவே வியாபகமாகிய கலைகள் தூய்மை அடையும் பொழுது வியாப்பியமாகிய தத்துவம், புவனம் முதலியவையும் தூய்மை அடைகின்றன. இதைப்பற்றிக் காமிகம் எனும் ஆகமம் நல்ல விளக்கம் தருகிறது:

"வ்யாப்ய வ்யாபக பாவம்ச குர்யாத் தத்ர விசக்ஷண: |
மந்த்ரா: பதானி வர்ணாஸ்ச தத்வானி புவனானிச ||
வ்யாப்யானி; வ்யாபகா: க்ர்ம மலமாயேய பந்தனா |
வ்யாப்யா மலாதயஸ்சாபி வ்யாபகாஸ்து கலாஸ்ம்ருத: ||
தாஸாம் ச ஸங்க்ரஹே தஸ்மாத் ஸர்வேஸ்ய ஸ்வீக்ருதா இவா |
ஸ்தாபிதாபிஸ்ச சுத்தாபி: இஹோபஸ்தாபிதா அபி |
சுத்தாபவந்தி ஸர்வேஸ்யு: தஸ்மாத் தத்ஸூத்திரிஷ்யதே ||

–காமிக ஆகமம்

"ஞானக் கிரியைகளில் தேர்ச்சி பெற்றுள்ள சிவகுரு வியாப்ய - வியாபக பாவனையைக் கருதுவா ராக. மந்திரம், பதம், வர்ணம், தத்துவம் புவனம் இவை வியாப்பியங்களாகும். ஆணவம், கன்மம், மாயை - இவை வியாபகங்களாகும். ஆணவம், கன்மம், மாயை இம்மூன்றும் வியாப்பியங்களாக விளங்க, நிவிருத்தி முதலான ஐந்து கலைகளும் வியாபகங்களாகும். எனவே ஐந்துகலைகளையும் பாவனையால் கொள்ளும் பொழுது, வியாப்பியமாகிய அனைத்தும் கொள்ளப்

பட்டவையாக ஆகின்றன. முக்கியமான கலைகள் தூய்மையாக ஆக்கி நிறுத்தப்படும்போது, அவற்றுள் அடங்கிய அனைத்தும் தூய்மை அடைந்து விடுகின்றன. எனவே ஐங்கலைகளைத் தூய்மை செய்தல் என்பது அவசியமாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது."

சிவவழிபாட்டை ஓர் உன்னதமான சிவயோக அனுபவத்தைத் தரவல்லதாக அனுட்டிக்க விரும்பும் ஒவ்வொருவரும் இத்தகைய தூய்மை நிலையைத் தருவதான சிவதீக்ஷையைப் பெற்றுக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

1. "ஸர்வக்ஞோ பவ" (முற்றறிவு உடையவனாக ஆகுக)

2. "பரித்ருப்தோ பவ"

3. "அநாதிபோதோ பவ"

4. "ஸ்வதந்த்ரோ பவ"

5. "அலுப்த சக்திர் பவ"

6. "அனந்த சக்திர் பவ"

என, தீக்ஷயின் நிறைவுக் கட்டத்தில் சிவகுரு அருளாணை தந்து சிவனுக்குரிய ஆறு குணங்களும் சீடனின் ஆன்மாவில் பொருந்தி விளங்குமாறு செய்கிறார். "சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது" என்று இந்த நிகழ்ச்சியைத்தான் திருமூலர் பேசுகிறார். தீக்ஷ பெற்ற உடனேயே சீடனுக்கு இந்த ஆறு குணங்களும் வெளிப்படையாக விளங்கித் தோன்றாவிட்டாலும், காலக்கிரமத்தில் அவனது தீவிர பயிற்சியையும்

பக்குவத்தையும் அனுசரித்து இவை விளங்கித் தோன்றும் என்பதில் ஐயமில்லை.

பூத சம்பந்தமான தூலதேக நிலையை மாற்ற வேண்டியது தீக்ஷையின் முதற்படி. திருஞானசம்பந்தர் பாண்டிய மன்னனுக்கு முதலில் அதைத்தான் செய்கிறார்.

மாறுபட்ட நெறிச் செல்வோர் திருஞானசம்பந்தர் தங்கி இருந்த மடாலயத்திற்குத் தீ இட்டனர். திருஞான சம்பந்தர் உண்மை இன்னதென உணர்ந்து 'இப்பிழை மன்னன் மேலது' என உறுதி செய்து, தீயின் வெம்மை **மெல்லச் சென்று** பாண்டியனைப் பற்றுமாறு உரை செய்தார். ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் இது சிவ தீக்ஷையின் முதற்படிக்கான செயலாகவே தோன்றுகிறது.

மாறுபட்டோர் இட்ட தீ பௌதிகத் தீ.

பௌதிகத் தீ, தீக்ஷையின்போது, சிவாக்னியாக மாற்றப்படுவது போன்று, மடாலயத்தைப் பற்றிய பௌதிகத் தீ, சிவஞானாக்னி மயமாக விளங்கும் திரு ஞான சம்பந்தரின் திருவாக்குத் திறத்தால் சிவாக்னி யாக மாற்றப்படுகிறது. இவ்வாறு சிவாக்னியாக மாறிவிட்ட காரணத்தால்தான், யார் தீவைத்தார்களோ அவர்களே தீயின் வெம்மையைப் போக்க முயன்ற போது ஓரளவேனும் தணிக்க இயலாமற் போயிற்று. தணியாதது மட்டுமல்ல; வெம்மை அதிகரித்தது. மாறு பட்ட மனமுடையோரின் செயல்திறத்துக்கு அப்பாற் பட்டது சிவாக்னி. இசைவும் (harmonious thought)

அபேத உணர்வும் சிவநோக்கும் உடை யோர்க்கு அது அடங்கிப் போகும். அவர்கள் வளர்க்க வளரும்; தணிக்கத் தணியும்.

பௌதிகத் தீயை சிவாக்னியாக மாற்றிப் பாண்டியனின் உடலில் பற்றச் செய்து அவனது தூல தேகத்தின் பௌதிகத் தன்மைகளை மாற்றிப் புனிதப் படுத்துகின்றார் திருஞானசம்பந்தர். பௌதிக தேகத் தூய்மை சிவதீக்ஷையிலும் செய்யப்படுகிறது.

*"செய்யனேதிரு ஆலவாய் மேவிய*
*ஐயனே அஞ்சலென்று அருள்செய்யெனைப்*
*பொய்யராம் அமணர் கொளுவும் சுடர்*
*பையவே சென்று பாண்டியற்கு ஆகவே"*

எனத் தொடங்கும் **திருப்பதிகம் முழுவதிலும் முதல் இரண்டு அடிகளில் சிவசிந்தனை செய்யப்படுகிறது. மூன்றாவது அடியில் பௌதிகத் தீ நினைக்கப்படுகிறது. நான்காவது அடியில் அது சிவாக்னியாக மாற்றப்பட்டுப் பாண்டியனை நோக்கிச் செலுத்தப்படுகிறது.** இத்திருப்பதி கத்தின் திருக்கடைக்காப்பு அமைந்துள்ள முறையும் ஆய்ந்து கருதற்பாலது.

*"அப்பன் ஆலவாய் ஆதி அருளினால்*
*வெப்பம் தென்னவன் மேலுற மேதினிக்கு*
*ஒப்ப ஞானசம்பந்தன் உரைபத்தும்*
*செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே"*

"ஆலவாய்ப் பெருமானின் இன்னருளால் தோன்றிய சிவத்தீயின் கனல்" என இங்கே குறிக்கப் படுகிறது. முதல் பத்துப் பாடல்களில் 'இன்னார்

கொளுவும் சுடர்' (மாறுபட்டோர் இட்ட தீ) என வெளிப்படையாகவே கூறப்பட்டது. ஆனால் திருக் கடைக்காப்பில், "யார் இட்ட தீ" என்பது நினைக்கப் படவில்லை. "அருளால் தோன்றிய சிவவெப்பம்" தென்னவன் மேல் பொருந்த" என்றுதான் கூறப் படுகிறது. இத்திருப்பாட்டில் வரும் 'மேதினிக்கு ஒப்ப' எனும் சொற்களும் "சிவ பூமிக்கு ஏற்ற வகையில், சிவநிலைக்கு ஏற்ற வகையில்" என்றுதான் பொருள் தரும். (சிவயோக வழக்கில், மேதினி, பூமி என வரும் சொற்கள் எல்லாம் யோகப்படிநிலைகளையே குறிக்கும்.) சிவ வெப்பத்தை உருவாக்கிக் கூறிய இப் பாடல்களை ஓதுவார் தீதிலாச் செல்வர்களாக ஆகிவிடுகின்றனர். தீதிலாச் செல்வர் — தூல தேகத்தின் பௌதிகத் தன்மைகளிலிருந்து நீங்கிச் சிவப்பொலிவு ஆகிய சிவச்செல்வம் உடையவர்கள். ஆனால் இப் பாடல்களை ஓதும்போது, "கொளுவும் சுடர்" என்பது போன்று வரும் இடங்களில் பௌதிகத் தீயைப்பற்றிய சிந்தனையும், "பாண்டியற்காகவே என்று வரும்போது தனது தூலதேகத்தில் சிவாக்னி பற்றுவது போன்ற பாவனையும் கொள்ள வேண்டியது மிகமிக அவசியம்.

தூய, பக்குவப்பட்ட, தத்துவப் பின்னணியான அல்லது ஆகமக்கிரியைப் பின்னணியான தகுந்த மனோபாவனை இல்லாமல் எந்தப் பதிகத்தை ஓதினாலும் உரிய பயன் பெற முடியாது. ஆன்மிகத் துறையில் உள்ளோர் இதனை அவசியம் புரிந்து கொள்ள வேண்டும்.

மங்கையர்க்கரசியாராலும் குலச்சிறையாராலும் முறைப்படி அழைத்துவரப்பட்ட திருஞானசம்பந்தப் பெருமான், பாண்டியனால் இடப்பட்ட தமனியப் பீடத்தில் அமர்ந்ததும், பாண்டியனின் மனம் நேர்நின்றது எனக் கூறுகிறார் சேக்கிழார் பெருமான். மனம் நேர்நிற்றல் என்பது தீக்ஷை பெறுதற்குரிய பக்குவத்தில் அவன் விளங்குகிறான் எனும் நிலையைக் குறிக்கிறது. அடுத்து, பாண்டியன் "தங்களின் ஊர் எது?" என்று பெருமானைப் பார்த்துக் கேட்டான். "எனது ஊர் காழி", "எனது ஊர் கழுமலம்" என, இவ்வாறு பன்னிரண்டு பெயர்களுள் ஏதாவது ஒன்றைத் தெரிவித்து ஒரே வரியில் விடையளித்திருக்கலாம், திரு ஞானசம்பநத்ர். ஆனால் அவர் அப்படிச் செய்யாமல் பன்னிரண்டு பெயர்களையும் மாற்றி மாற்றிக் கூறிப் பன்னிரண்டு பாடல்களைப் பாடுகின்றார். இது ஓர் அற்புதப் பெருநிகழ்ச்சி. காந்தாரம் எனும் பண்ணில் அவர் "பிரமனார் வேணுபுரம்" எனத் தொடங்கும் திருப்பதிகம் முழுவதையும் பாடி முடிப்பதற்குள் பாண்டியனின் தூல தேகம், சூக்கும தேகம், உயிர் ஆகிய மூன்றிலும் நேர்ந்த சிவத்தன்மையான மாற்றங்களை யாரால் கணிக்க முடியும்?

இத்திருப்பதிகத்தில் திருஞானசம்பந்தப் பெருமான் பன்னிரண்டு பெயர்களையும் மீண்டும் மீண்டும் மாற்றி மாற்றிக் கூறுவதற்கு அடிப்படைக் காரணம் ஒன்றுண்டு.

நிவிருத்தி, பிரதிட்டை, வித்யா, சாந்தி, சாந்திய தீதை என்னும் ஐங்கலைகளைப் பற்றி முன்னர்க் கூறப்

பட்டது. நிவிருத்தி கலையின் வடிவாகத் தூல தேகத்தில் பாதம் முதல் சிரசு வரை வியாபித்திருப்பது பிருதிவிமண்டலம். பிரதிட்டா கலையின் வடிவாகத் தூலதேகத்தில் முழங்கால் தொடங்கி அவ்வாறே வியாபித்திருப்பது அப்புமண்டலம்; வித்யா கலை வடிவாக, நாபியிலிருந்து சிரசு வரை வியாபித்திருப்பது அக்னி மண்டலம்; சாந்தி கலை வடிவாக, கழுத்தி லிருந்து சிரசு வரை வியாபித்திருப்பது வாயு மண்டலம்; சாந்த்யதீத கலை வடிவாக முகத்திலிருந்து சிரசு வரை வியாபித்திருப்பது ஆகாச மண்டலம். (பிருதிவி மண்டலம் எனப்படுவது வேறு; பிருதிவி தத்துவம் எனப்படுவது வேறு. சைவ சித்தாந்தம் பயில்வோர் முதலில் இதனைப் புரிந்துகொள்ள வேண்டும். இவ்வாறே அப்பு மண்டலம் வேறு; அப்பு தத்துவம் வேறு என மற்றுமுள்ள அப்பு முதலான நான்கையும் விளங்கிக்கொள்ள வேண்டும்.)

சிவயோக பூர்வமாகத் தூல தேகத்தைத் தூய்மைப் படுத்தும்போது தூலதேகத்தில் பிருதிவிபூதத் தொடர் பாக உள்ள மலினங்களை, பிருதிவி என்பதற்குப் பகை நிலையில் உள்ள வாயுவால் போக்கிக்கொள்ள வேண்டும்.

பிறகு ஐம்பெரும் பூதங்களுள், நீர் என்பதன் தொடர்பாக உள்ள மலினங்களை, நீருக்குப் பகைநிலையில் உள்ள அக்னியால் போக்கிக் கொள்ள வேண்டும்; அக்னி பூதத் தொடர்பாக உள்ள மலினங்களை, அக்னிக்கு நேர்மாறான நீரினால் போக்கிக் கொள்ள வேண்டும்; வாயு பூதத் தொடர்பாக

உள்ள மலினங்களை, வாயு பூதத்துக்குப் பகைநிலையில் உள்ள பிருதிவியால் போக்கிக்கொள்ள வேண்டும். ஆகாச பூதம் அனைத்துக்கும் பொதுவானதாலும் அதற்கு விரோத நிலையில் எதுவும் இல்லை என்பதாலும் பூத ஆகாசத் தொடர்பானவை மஹா ஆகாசத்தால் போக்கப்பட்டவையாகக் கருதவேண்டும்.

இங்கே ஐம்பெரும் பூதங்களுக்குள்ளே எப்படிப் பட்ட தொடர்பு அல்லது உறவு நிலைபெற்றிருக்கிறது என்பதை விளங்கிக் கொள்வதும் அவசியமாகிறது.

நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் என்னும் பூதங்களுள்

1. நிலத்துக்கும் காற்றுக்கும் இடையே

நீருக்கும் நெருப்புக்கும் இடையே

விரோத பாவம் (பகை நிலை)

2. நிலத்துக்கும் நீருக்கும் இடையே

நெருப்புக்கும் காற்றுக்கும் இடையே

நட்பு நிலை

3. நீருக்கும் காற்றுக்கும் இடையே

நெருப்புக்கும் நிலத்துக்கும் இடையே

நட்போ, பகையோ இல்லாத நடுநிலை

ஆகாசம் அனைத்திற்கும் இடம் கொடுப்பதாகையில் அது ஏனைய பூதங்களுடன் நட்பு நிலையிலேயே உள்ளது.

*4. நிலம், நீர், தீ காற்று என்பனவற்றுக்கும் ஆகாசத்துக்கும் இடையே*

*நட்புநிலை*

இதுவரை பூதங்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ள கோட்பாடுகள் அனைத்தும் மிருகேந்திர ஆகமத்தில் இடம் பெற்றுள்ளன.

*"கம் ஸமஸ்தேஷு பூதேஷு வாரீ வாயூ சிகி க்ஷிதீ |*
*வார்யக்னீ பூமிபவனௌ வாரிக்ஷ்மே அனலானிலௌ ||*
*மத்யஸ்தாராதி மித்ராணீ...*

– மிருகேந்திரம்: யோகபாதம்

*(மத்யஸ்தாராதி மித்ராணி = நடுநிலை, பகைநிலை, நட்புநிலைகள், கம் = ஆகாயம்; வாரி - நீர். சிகி - நெருப்பு; க்ஷிதி - பூமி. அனிலம் - காற்று; பவனம் - காற்று.)*

சிவ வழிபாட்டின்போதும் சிவதீக்ஷையின் போதும் மேற்கூறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில்தான் ஒரு பூதத்தால் விரோதமான மற்றொரு பூதத்தை அழித்தல், என்ற நியாயப்படி தூலதேகத் தூய்மை நிலைநிறுத்தப்படுகிறது.

பிரம்மபுரத்துக்குரிய பன்னிரண்டு பெயர்களுள் பிரம்மபுரம், வேணுபுரம், புகலி எனும் மூன்றும் நிவிருத்தி கலையைச் சார்ந்தவை. வெங்குரு, தோணிபுரம், பூந்தராய் எனும் மூன்றும் பிரதிட்டா கலையைச் சார்ந்தவை; சிரபுரம், புறவம், சண்பை எனும் மூன்றும் வித்யா கலையைச் சார்ந்தவை. காழி, கொச்சைவயம், கழுமலம் எனும் மூன்றும் சாந்தி

கலையைச் சார்ந்தவை. பன்னிரண்டையும் அங்கமாகக் கொண்டுள்ள பிரம்மபுரம் எனும் பிரம்மத்தானம் சாந்தியதீத கலையைச் சார்ந்தது. நிவிருத்தி முதலான கலைகளின் வடிவாக விளங்கும் பிருதிவி முதலான ஐந்து மண்டலங்களிலும் பிரம்மபுரம் முதலான பன்னிரண்டு பெயர்கள் பொருந்தி உள்ளனவாக உணர வேண்டும். பிரம்மபுரம், வேணுபுரம், புகலி எனும் மூன்றும் பிருதிவியில்; வெங்குரு, தோணிபுரம், பூந்தராய் எனும் மூன்றும் நீரில், சிரபுரம், புறவம், சண்பை எனும் மூன்றும் நெருப்பில்; காழி, கொச்சை வயம், கழுமலம் எனும் மூன்றும் வாயுவில்; பன்னிரண்டு பெயர்களை அங்கமாக உடைய பிரம்மபுரம் ஆகாசத்தில். பிருதிவி முதலான ஐந்தனுக்கும இடையே உள்ள பகைநிலை, நட்புநிலை, நடுநிலை எனும் மூன்றையும் கருத்தில் கொண்டு, தூலதேகத் தூய்மை, சூக்கும தேகத் தூய்மை ஆகிய இரண்டையும் பன்னிரண்டு பெயர்களை மாற்றி மாற்றிக் கூறுவதன் மூலம் செய்தருள்கின்றார் திருஞான சம்பந்தர்.

திருக்கோயில் பிராகாரங்களிலும் வெளிப் பிரகாராமாகிய மஹாமர்யாதா நிவ்ருத்தி கலை, பிருதிவி மண்டலம் என்பனவற்றையும் அடுத்து உள்ளே உள்ள மர்யாதா (நான்காவது பிரகாரம்) பிரதிஷ்டா கலை, அப்பு மண்டலம் என்பனவற்றையும், அடுத்து உள்ள மத்யஹாரம் (மூன்றாவது பிரகாரம்) வித்யா கலை, அக்னிமண்டலம் என்பனவற்றையும், அடுத்த தான அந்தர்ஹாரம், (இரண்டாவது பிரகாரம்) சாந்தி கலை, வாயுமண்டலம் என்பனவற்றையும் மையப்

பிரகாரமான அந்தர்மண்டலம் (முதற்சுற்று) சாந்தியதீத கலை, ஆகாச மண்டலம் என்பனவற்றையும் புலப் படுத்தும்.

முன்னே கூறப்பட்டவைகளையெல்லாம் தொகுத்துக் கீழே கூறப்படுகின்றது.

| | பிரம்மபுரப் பெயர்கள் | கோயிற் பிரகாரம் | பஞ்ச கலைகள் | பஞ்ச மண்டலம் |
|---|---|---|---|---|
| 1. | பிரம்மபுரம், வேணுபுரம், புகலி | ஐந்தாவது பிரகாரம் மஹாமர்யாதா | நிவிருத்தி | பூமி |
| 2. | வெங்குரு, தோணிபுரம், பூந்தராய் | நான்காவது பிரகாரம் மர்யாதா | பிரதிஷ்டா | நீர் |
| 3. | சிரபுரம், புறவம், சண்பை | மூன்றாவது பிரகாரம் மத்யஹாரம் | வித்யா | நெருப்பு |
| 4. | காழி, கொச்சைவயம், கழுமலம் | இரண்டாவது பிரகாரம் அந்தர்ஹாரம் | சாந்தி | காற்று |
| 5. | பிரம்மபுர மூலத்தலம் | முதற்பிரகாரம் அந்தர்மண்டலம் | சாந்திய தீதை | ஆகாசம் |

பிரம்மபுரப் பெயர்களை மாற்றி மாற்றி ஓதிப் பாண்டியனுக்கு வேண்டிய தூய்மைநிலைகளை அருளிய திருஞான சம்பந்தர், அடுத்தநிலையில்

திருநீற்றுப் பதிகம் ஓதி, அமிழ்தப் பிரஸாதம் (திருநீறு) தம் திருக்கரத்தாலேயே தந்து முழுமையான சிவ நிலைக்கு உயர்த்திவிடுகின்றார். அந்த முழுமை நிலையில்தான் தத்துவ உபதேசமும் திருப்பாசுர உபதேசமும் பாண்டிய மன்னன் பெறுகிறான்.

# 6

# சிவயோகப் பின்னணியில் பிரம்மபுரம்

மூலத்தலமான பிரம்மபுரத்துக்குப் பன்னிரண்டு பெயர்கள் ஏற்பட்டுள்ளமையைப் பட்டினத்து அடிகள் தெளிவுபடுத்துகின்றார்.

*"வசையில் காட்சி இசைநனி விளங்க*
*முன்னாள் நிகழ்ந்த பன்னீ ருகத்து*
*வேறு வேறு பெயரின் ஊறின்றியன்ற*
*மையறு சிறப்பின் தெய்வத்தன்மை"*

–திருக்கழுமல மும்மணிக்கோவை: 10

முன்னாள் நிகழ்ந்த பன்னிரண்டு யுகங்களில் ஏற்பட்ட பன்னிரண்டு பெயர்கள் எனில் அடுத்து அடுத்து நிகழ்ந்த யுக இறுதிகளில் வேறு பெயர் ஏதும் ஏற்படவில்லையா எனக் கேட்கலாம். பன்னிரண்டு பெயர்கள் பொருந்திய பிறகும் பல்வேறு யுகங்கள் கழிந்துள்ளன. எனினும் பிற்பட்ட யுக காலங்களில் வேறு பெயர் எதுவும் ஏற்படாமைக்குக் காரணம், அந்தப் பன்னிரண்டு பெயர்களே அடுத்தடுத்தும் மாறி

மாறிப் பொருந்திக் கொண்டிருப்பதுதான். அந்தப் பன்னிரண்டு பெயர்களின் சுழற்சியிலே ஒரு முழுமை ஏற்படுகிறது. பொதுவாக, எண்ணிக்கையில் பெரியது கோடி (நூறு லட்சம்) என்கிறோம். ஆனால் கோடியினும் பன்மடங்கு மேம்பட்ட பேரெண் ஒன்று உளது. அந்த எண்ணுக்குப் பரார்தம் (paradha) என்று பெயர். பரார்தம் என்ற எண்ணால் குறிக்கப்படும் கால எல்லை கழிந்த பிறகு மீண்டும் மிகச் சிறிய எண்ணால் குறிக்கப்படும் கால நிலை தொடக்கமுறுதல் போன்று கழுமலம் என்ற பெயருக்குரிய யுகம் முடிந்து அடுத்த யுகம் தொடங்கும்போது பிரம்மபுரம் என்ற பெயர் பொருந்துகிறது. அடுத்த யுகத்தில் வேணுபுரம் என முன்னர்ப் பொருந்திய அதே வரிசை நடைமுறைக்கு வருகிறது. இவ்வாறு நிலையாகப் பொருந்திவிட்ட பிரம்மபுரம் முதலான திருப்பெயர்களின் நுட்பத்தை இப்பொழுது சிவயோகப் பின்னணியில் காணப் போகிறோம்.

பன்னிரண்டு பெயர்களும் எவ்வாறு ஏற்பட்டன என்பதை ஒவ்வொரு காலகட்டத்தில் நிகழ்ந்த அருட்செயல் வாயிலாக முன்னர் அறிந்தோம். பிரம்மன் வழிபட்டுப் பேறுபெற்றதால் பிரம்மபுரம் என்ற பெயர் ஏற்பட்டது என்று கூறப்படுகிறது. இவ்வாறே ஒவ்வொரு பெயர்க்கும் ஒவ்வொரு காரணம் கூறப்படுகிறது. ஆனால் இவ்வாறு காரணமாகக் கூறப்படுகின்ற நிகழ்ச்சி அளவில் நாம் நின்று விடக் கூடாது. உலகியல் வழக்கில் சாதாரணமாக வழங்கும் சொல், யோக வழக்கில் ஆழ்ந்த பொருளுடையதாக

மேம்பட்டு விடும். உதாரணமாக **பாரதம்** என்னும் சொல்லை எடுத்துக் கொள்வோம். பாரதம் எனில் பாரத நாடு. பரதனின் பெயரால் அமைந்துள்ள பெருநிலப்பரப்பு எனக் கொள்வது உலகியல் வழக்கு. ஆனால் சிவயோக வழக்கிலும் பாரதம் எனும் சொல் அடிக்கடி வருகிறது. ஆனால் அங்கே பாரதம் என்பதற்கு பாரத நாடு எனும் பொருள் பொருந்தாது. பா = பேரொளி; சுயம்புவாக, தானாகத் தோன்றும் பேரொளி; ரதம் = ஆனந்திக்கும் நிலை; களிப்புடன் கூத்தாடும் நிலை. மிகமிக உன்னதமான சிவயோக நிலையை எட்டிப்பிடித்தவர்கள் இருக்கும் ஆனந்த நிலைக்கு பாரதம் என்று பெயர். இவ்வாறு தான் பிரம்மபுரம் முதலான பெயர்களுக்கு, ஒவ்வொரு அருள்நிகழ்ச்சி காரணமாகப் புலனாகும் அர்த்தத்தைக் காட்டிலும் மேலானதாக விளங்கும் அர்த்தம் உண்டு. சிவயோக ரீதியாகக் கொள்ளப்பட வேண்டிய பொருள் அது. இப்பொருளை இனி நிரலே காண்போம்.

## 1. பிரம்மபுரம்

மனித உடலுக்கே புரம் என்றுதான் பெயர். "சரீரம் புரம் உச்யதே" என்று பராக்யை எனும் ஆகமம் கூறுகிறது. (சரீரமே புரம் எனக் கூறப்படுகிறது. பொருள்) பெரிய பொருளாகிய சிவம், பிரம்மம் எனப்படும். பெரிய பொருளாகிய சிவம் வெளிப்பட்டு விளங்கும் நிலையில் உள்ள சரீரம் பிரம்மபுரம் எனப்படுகிறது. சிவயோக நுட்பத்தை உணர்ந்தவர்கள் சரீரத்தை இகழமாட்டார்கள். சரீரத்தின் பௌதிகத் தன்மை,

நிலையற்ற தன்மை, அழுக்கு நிலை முதலான அனைத்துக் குறைபாடுகளையும் நன்கு உணர்ந்த நிலையிலும் சிவயோகியர் சரீரத் தொடர்பைப் புறக் கணிக்க மாட்டார்கள்; இகழ மாட்டார்கள். உத்தம மான யோக சாதனைகளைச் சாதிப்பதற்கு சரீரம் இருந்தால்தான் முடியும்.

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினி னுள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"

(திருமந்திரம் 725)

என்று பாடுகிறார் திருமூலர். சிவயோகியர், 'யோக சாதனைக்காக இறைவன் அளித்துள்ள கருவி இது' என்ற அளவில் உடல்மீது கவனம் செலுத்துவர். அவ்வளவே. உடல் இழுக்கும் இழுப்புக்கு அவர்கள் இணங்க மாட்டார்கள். உடலைத் தமது வசத்துள் வைத்திருக்க வல்லோர் அவர்கள்.

பூதமயமாக விளங்கும் சரீரத்தை பிரம்மபுரமாக மாற்றுவதற்கு வேண்டிய உபாயங்களைத்தான் சிவாகம யோக பாதங்கள் கூறுகின்றன. கிரியா பாதத்தில் சிவபூஜா விதியின் கீழ் சிவாகமங்கள் கூறும் தேக சுத்தி, ஆன்மசுத்தி, ஆறத்துவா நியாசம், அக்ஷர நியாசம், முப்பத்தெட்டு கலா நியாசம் முதலான அனைத்தும் கூட சரீரத்தை பிரம்மபுரமாக மாற்றிக் கொள்வதற் குரிய பயிற்சி முறைகள்தாம்.

## 2. வேணுபுரம்

வேணு என்பதற்கு மூங்கில் என்று பொருள். சரீரத்தை பிரம்ம புரமாக மாற்றிக் கொள்வதற்கு இறைவன் நமது உடலுக்குள் பொருந்தி இருக்கின்ற முக்கியமான கருவி முதுகுத் தண்டு. இதற்கும் வேணு என்றுதான் பெயர். வேணுவைச் சரீரத்துள் கொண்டிருப்பது வேணுபுரம். சிவயோக சாதனைக்கு முதற் படியாக இந்த வேணுவின் அமைப்பு, வேணுவுக்கும் நாடிகளுக்கும் உள்ள தொடர்பு, வேணுவுக்கும் ஆதார சக்கரங்களுக்கும், உள்ள தொடர்பு வேணுவுக்கும் அக்ஷர நாதங்களுக்கும் (எழுத்தொலிகள்) உள்ள தொடர்பு, வேணுவுக்கும் ஐந்து வகைப்பட்ட ஆகாசங்களுக்கும் உள்ள தொடர்பு, வேணுவுக்கும் பிருதிவி முதலான தத்துவங்களுக்கும் உள்ள தொடர்பு, அகத்தே உள்ள வேணுவுக்கும் புறத்தே உள்ள மேரு மலைக்கும் உள்ள இணக்கம் - இவை முதலான நுட்பங்களை உள்ளடக்கியது சிவயோக நெறியின் முதற்படி. முதற்படிக்கே இவ்வளவு எனில், இதன் முடிநிலையை என்னென்று சொல்வது!

பிரபஞ்ச விஞ்ஞானத்தில் இடம்பெறும் 'காலத் தூண்' எனும் வழக்கு சரீரத்திலுள்ள வேணுவையும் குறிக்கும். யோக நெறிக்குப் பிரத்தியேகமாக இந்தச் சரீரத்தைப் பயன்படுத்தும் போது, இது வேணுபுரம் எனும் பெயர் பெறுகிறது.

## 3. புகலி

புகலாக (அடைக்கலமாக) அடைவது புகலி. சிவம் எனும் செம்பொருள் ஒன்றையே பற்றுக்

கோடாகக் கொள்ளும் ஆன்மாவுக்குப் புகலி என்று பெயர். சிவம் எனும் செம்பொருள், நமது உடலுள் இருக்கும் சுழுமுனைத் தூணாகிய மூலத் தூணில் வெளிப்பட்டு விளங்கும் தானங்கள் தோறும் சிவத்தைச் சரண் அடைந்து, படிப்படியாக யோக பூமிகளில் மேலேறிச் சென்று, மேலைப் பெருவெளி எனப்படும் சிதாகாசத்தில் லயிப்பது எதுவோ அதுவே புகலி.

புகலி என்பதற்குப் புகல்வோன், கூறுவோன் என்றும் பொருள். சிவயோக நெறியில் முதிர்ந்த அனுபவம் பெற்றோர், உலகியல் தொடர்பான செயல்களில் ஈடுபட்டிருக்கும்போதும் பரை மயமான வாக்கினால் சிவமந்திரத்தை இடையறாது ஓதிக் கொண்டிருப்பர். பரை மயமான அதிசூக்கும வாக்கினால் மகாமந்திரத்தை ஓதும் யோகான்மாவுக்குப் புகலி என்று பெயர். பரை மயமான வாக்கினால் பேசும் சக்தி பெற்ற சிவயோகியர் விடும் மூச்சுக்காற்றும் பேசும் திறன் வாய்ந்ததாக விளங்கும். இத்தகையோர் பூரகம் (உள் செல்லும் மூச்சு), ரேசகம் (வெளி வரும் மூச்சு) ஆகிய இரண்டாலும் மந்திரத்தை ஜபிப்பர்; பக்குவம் வாய்ந்த பிறருடன் இந்த இரண்டாலும் உரையாடுவர்; உண்மையை உணர்த்துவர். இத்தகையோர் வாய்திறந்து பேசவேண்டும் எனும் அவசியம் இல்லை; பேசினாலும் இழுக்கு இல்லை. பூரகம், ரேசகம் ஆகிய இரண்டின் இயக்கத்தையும் மூலமந்திர ஜபத்தோடு இணைக்கப் படுத்தும் கலையே, சிவயோக நெறியில் வற்புறுத்திக் கூறப்படுவது. இந்த இணக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளாமல் கோடிக்கணக்கில் ஒருவர் மந்திரம்

ஜபித்தாலும், உரிய யோகப் பயனைப் பெற முடியாது. மூச்சு, வாக்கு - ஆகிய இரண்டின் இணக்கம் கண்டு மந்திரம் ஓதும் ஆன்மா எதுவோ அதுவே புகலி..

## 4. வெங்குரு

ஆகம வாஸ்து விஞ்ஞானப்படி குரு என்பதற்குக் கனசதுரம் (cubic) எனப் பொருள். குரு - கனத்து இருப்பது; சதுர வடிவில் இருப்பது; பருத்து இருப்பது. பிரபஞ்சப் படைப்பு முறையில் இறைவனின் முதல் வெளிப்பாடு சதுரம் என்பது. முதன் முதலில் அவன் தன்னைச் சதுரமாகவே வெளிப்படுத்திக்கொள்கிறான். பரமாணுவாக இருக்கும் போதும் அவனது வடிவம் சதுர வடிவம்; அனைத்தையும் உள்ளடக்கிய பேரண்ட மாக இருக்கும்போதும் அவனது வடிவம் சதுர வடிவம்தான்.

எல்லா உயிர்களின் இதயத்திலும் அவன் சிற்றவையாக - சிற்றம்பலமாக- தஹராகாசமாக விளங்குகிறான். அதே சமயத்தில் தனக்குப் புறம்பே எதுவும் இல்லை எனும் வகையில் அனைத்தையும் உள்ளடக்கியுள்ள பரமாகாசமாகவும், சிதாகாசமாகவும் விளங்குகிறான். ஒருபுறம் அணுவுக்கும் அணுவான சிற்றெல்லை; மறுபுறம் அண்டபகிரண்டங்கள் அனைத்தையும் தன் கருவுக்குள் அடக்கி இருக்கும் பேரெல்லை.. இந்த இரண்டின் மயமாகவும் இருப்பதற் குக் குரு என்று பெயர்.

சிற்றெல்லையாக இருப்பது ஒரு திருவடி; பேரெல்லையாக இருப்பது மற்றொரு திருவடி. ஆகையால்தான் திருநாவுக்கரசர்,

"உருவிரண்டும் ஒன்றோடொன்று ஒவ்வா அடி"

என்று திருத்தாண்டகத்தில் பாடுகிறார். திருவடியைச் சரணம் என்று கூறுகிறோம். சரணம் என்பதற்கு சிவயோக விஞ்ஞானப்படி "எல்லா இடங்களையும் வியாபித்திருப்பது" என்றுதான் பொருள்.

"சரத்யனேன சரணம் ஸம்வ்யாப்னோத் யண்டகோடய:" என்று கூறுகிறது சந்திரஞானம் எனும் சிவாகமம். இதன் பொருள்: "எங்கும் சென்று அடைவதால் சரணம் எனப்படுகிறது. அண்ட கோடிகளை நன்கு வியாபித்திருப்பதால் சரணம் எனப்படுகிறது." மிகச்சிறிய இதயாகாசத்தை வியாபித்திருப்பதும் சரணம்தான்; மிக மிகப்பெரிய சிதாகாசத்தை வியாபித்திருப்பதும் சரணம்தான். சிற்றம்பலம் (தஹராகாசம்) பேரம்பலம் (பரமாகாசம்) ஆகிய இரண்டின் இணக்கத்தை (identical existence) உணர்வதற்கு இடமாக இருப்பது வெங்குரு.

## 5. தோணிபுரம்

ஒவ்வோர் ஆன்மாவுக்கும் மூன்று வகைப்பட்ட சரீரங்கள் உண்டு. தூல சரீரம், சூக்கும சரீரம், லிங்க சரீரம் என மூன்று சரீரங்கள். தூல சரீரம் பூத அல்லது புவன சம்பந்தமானது. பௌவன சரீரம் என ஆகமம் கூறும். சூக்கும சரீரம் என்பது முப்பது தத்துவ மயமான

நுண்ணுடல். புரியட்டகம் என்பது இதுதான். இந்த இரண்டும் ஆன்மாவுக்கு நிலையானவை அல்ல. ஆனால் லிங்க சரீரம் அல்லது மஹா காரண சரீரம் என்பது ஆன்மாவை விட்டு என்றும் பிரியாது. முக்தி பெற்ற ஆன்மாவின் இருப்புக்கும் லிங்கசரீரம் அவசியம் ஆகிறது. இந்த லிங்க சரீரத்தைக் குறிப்பதே தோணிபுரம் என்பது. பிரம்மபுரம் தூல சரீரம்; வேணுபுரம் = யோக சரீரம். தோணிபுரம் = லிங்க சரீரம்.

வெள்ளம் பொங்கிப் பொங்கி எழும்போது மேன்மேல் தோணி போல் உயர்ந்து அழியாமல் இருப்பதால் தோணிபுரம் எனக் கூறப்படுகிறது. யுக இறுதி வரும் போதெல்லாம் அழிந்து விடாமல் தோணி போல் மிதக்கும் சரீரம் லிங்க சரீரம். எண்ணிலி கோடி ஆண்டுகள் அழியாமல் இருக்கும் சித்த மஹா புருஷர்களுக்கு வாய்த்திருப்பது லிங்க சரீரம். **லிங்க சரீரி** எனும் நிலையை அடைந்தவர்கள் சாவதும் இல்லை; பிறப்பதும் இல்லை; மூப்பதும் இல்லை.

*"அடியுகம் முடியினும் வடிவுடன் எழுமவு*
*னத்திற் பற்றுறு நித்தச் சுத்தர்கள் தம்பிரானே"*

என அருணகிரிப் பெருமான் லிங்கசரீரத்தோடு உலவும் சித்தப்பிரபுக்களைக் குறிப்பிடுகின்றார்.

"சாவாதவர் பிறவாதவர் தவமேமிக வுடையார்
மூவாதபன் முனிவர்தொழு முதுகுன்றடை வோமே"

எனத் திருஞானசம்பந்தப் பெருமான் இத்தகைய சித்தப் பெருமக்களைப் புகழ்கின்றார்.

மஹா குண்டலினியின் பல்வேறு கிரியைகளுக்கும் முத்திரைகளுக்கும், நடனங்களுக்கும் உரிய யோக மேடையாகத் தமது உடலை ஆக்கிக் கொண்டு விட்ட சித்தயோகியரை, நீலவாஹனம் அல்லது நீலயானம் எனப்படும் சின்னஞ்சிறிய முத்துவிமானம் பல்வேறு உலகங்களுக்கும் ஒருநொடியில் கொண்டு சென்று காட்டிவிட்டு மீண்டுவிடும்.

இத்தகைய நீல வாஹனம் அல்லது நீலயானம் தான், சிவயோக முதல்வனாகவும் சிவகுரு நாதனாகவும் விளங்கும் செவ்வேள் பரமனுக்குரிய மயில்வாகனமாகக் காட்சி அளிக்கிறது.

மிக உயர்ந்த சிவயோக சாதனையின்போது சிவயோகியரைப் பல அண்டங்களுக்கும் கொண்டு செல்வதாகிய நீலயானத்தைக் குறிப்பது தோணிபுரம்.

**6. பூந்தராய்**

பூவும் தாருமாக விளங்குவது என்ற நிலையில் பூ என்பது மூலாதாரம் முதலான ஆதார சக்கிரங்களையும், தார் என்பது ஆதார சக்கிரங்களைக் கோர்த்துக் கொண்டு விளங்கும் சுழுமுனை நாடியையும் குறிக்கும். முதுகுத் தண்டாகிய வேணு மூலத்தூண் எனப்படுவது போன்று சுழுமுனை நாடியும் மூலத்தூண் என்றும் காலத்தூண் என்றும் வழங்கப்படும். உண்மையில் சுழுமுனை நாடி என்பது நமது சரீரத்தின் இரண்டு பாதங்களின் பெருவிரல்களிலிருந்து ஆரம்பித்து மூலா தாரத் தானம் வரை இரண்டு கால்களாக, இரண்டு தூண்களாக உயர்ந்து மூலாதாரம் முதல் பிரம்மாந்திரம்

வரை ஒரே தூணாக உயர்ந்து எழுந்து இருப்பதுதான். ஆனால் ஆதாசக்கிரங்களுடன் சுழுமுனை இணைந்திருப்பது மூலாதாரம் தொடங்கியே. யோகசக்தி மூன்றரை வட்டமாகக் குண்டலித்து உறங்குவதும் மூலாதாரத்தில்தான். மூலாதாரம் எனும் நான்கிதழ்க் கமலம், சுவாதிட்டானம் எனும் ஆறிதழ்க் கமலம், மணிபூரகம் எனும் பத்து இதழ்க் கமலம், அனாகதம் எனும் பன்னிரண்டு இதழ்க் கமலம், விசுத்தி எனப்படும் பதினாறு இதழ்க்கமலம், ஆக்ஞை எனப்படும் இரண்டிதழ்க் கமலம், ஸஹஸ்ராரம் எனப்படும் ஆயிரம் இதழ்க்கமலம் எனப்படும் பூக்களைக் கோர்த்துக் கொண்டு மேலுயர்ந்துள்ள சுழுமுனை நாடியை, சிவாகமம் குலமார்க்கம் என்றும் குலபதம் என்றும் கூறுகிறது. மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை உள்ள எழு கமலங்கள் மட்டுமல்லாமல் சுழுமுனை நாடி மார்க்கத்தில் மேலும் பல நுண்ணிய சக்கிரங்களும் உண்டு. மிக மிகத் தீவிரமான சிவயோக சாதனையில் நிலைத்து இருந்தால் சுழுமுனையிலுள்ள முப்பத்தாறு கமலங்களைக் காணலாம் என சிவாகம யோகபாதம் விவரிக்கிறது. ஆதார சக்கரங்களாகிய முப்பத்தாறு பூக்கள், பூக்களைக் கோர்த்துக் கொண்டிருக்கும் சுழு முனை ஆகிய தார் - இவை தூலதேகத் தொடர்புடையவை அல்ல. சூக்கும தேகத் தொடர்புடையவை. தோணிபுரம் என்பது லிங்க சரீரத்தைக் குறிப்பது போன்று பூந்தராய் என்பது, ஆதாரப்பூ, சுழுமுனைத்தார் என்பனவற்றைக் கொண்டுள்ள சூக்கம தேகத்தைக் குறிக்கும்.

பூ - தாராய் = பூமியைத் தரித்துக்கொண்டு மேலெழுந்த விஷ்ணு எனும் அடிப்படையில் பார்த்தால் பூந்தராய் என்பது பல்வேறு யோகபூமி களைத் தாங்கிக் கொண்டிருக்கும் சுழுமுனைத் தூண் என சிவயோக ரீதியாகப் பொருள்படும். சுழுமுனை நாடியோடு நாம் ஒன்றும் அளவுக்கு, மேன்மேல் உயர்ந்துள்ள பல்வேறு யோக பூமிகளையும், மூன்று காலங்களையும் உணரலாம்.

**7. சிரபுரம்**

சிரத்தொடர்புடைய புரம் சிரபுரம். புரம் என்பதற்குச் சக்கிரம் என்றும் பொருள். சிரத்தின் உச்சியிலுள்ள சக்கிரமாகிய பிரம்மரந்திரம் சிரபுரம் எனப்படுகிறது. அண்ட நிலையில் கைலை மலையும் பிண்ட நிலையில் சிரபுரமாகிய பிரம்மரந்திரமும் ஒன்று பட்டுவிடும். (குறிப்பு: கயிலை என எழுதுவது பிழை: கைலை என எழுதுவதே முறை. கைலாஸம் என்றும் கூறலாம். கைலை என்பது பிரம்மரந்திரத்தில் பொருந்தி இருப்பது எனப் பொருள்படும்). சிரபுரத்தானமாகிய பிரம்மரந்திரத்தில் அப்பிராகிருதமான, அதாவது பிரகிருதியின் தொடர்பற்ற கைலைமலையைத் தரிசனம் செய்து, மீண்டு இதயத்தானத்தையும் மூலாதாரத்தையும் அடைதல் என்பது சிவயோக சாதனைகளுள் ஒன்று.

"சிரத்தா னத்திற் பணியாதே
செகத்தோர் பற்றைக் குறியாதே
வருத்தா மற்றொப் பிலதான
மலர்த்தாள் வைத்தேத் தனையாள்வாய்

*நிருத்தா கர்த்தத் துவநேசா*
*நினைத்தார் சித்தத் துறைவோனே*
*திருத்தாள் முத்தர்க் கருள்வோனே*
*திருக்கா ளத்திப் பெருமாளே"*

என்று பாடுகிறார் சிவயோகானுபூதிச் செல்வராகிய அருணகிரிப் பெருமான். "சிரத்தானமாகிய பிரம்ம ரந்திர பூமியில் அப்பிராகிருத கைலைமலையையும் சிவபரம் பொருளையும் தவிர வேறொன்றைப் பணியாமலும்" என்பது முதலடியின் பொருள். திருக்காளத்தி என்பது வாயுத்தலம். கீழிருந்து காணும்போது மூலாதாரம் பூமி எனக் கொண்டு இதயத்தானம் வாயு எனக் கருதப்படுவதால், கைலை மலை தரிசனம் செய்து இதயத்தானத்துக்கு வருதல் எனும் யோகப் பயிற்சியை அருணகிரிநாதர் இப்பாடலில் உபதேசம் செய்கிறார். சிரத்தானம் - கைலை; திருக்காளத்தி - வாயு பூதத் தானமாகிய இதயத்தானம்.

இவ்வித யோக தரிசனம் பின்னரும் விளக்கப்படுகிறது.

**8. புறவம்**

புறா என்பது யோக நோக்கில் ஹம்ஸப் பறவையைக் குறிக்கிறது. சிவயோக விஞ்ஞானத்தில் ஹம்ஸம் என்பது மிக முக்கியமாக மேற்கொள்ளப்படும் உபாசனை முறை. ஆத்மிகமான காலக்கணக்கில் 'ஹம்' என்பது வெளிவரும் மூச்சையும் 'ஸ:' என்பது

உட்செல்லும் மூச்சையும் குறிக்கும். வெளிவரும் மூச்சாகிய ரேசகத்தாலும் உட்செல்லும் மூச்சாகிய பூரகத்தாலும் ஹம்ஸ மந்திர ஜபத்தை ஆழ்ந்த தியான பாவனையுடனும் பேதம் காணாத அகண்ட உணர்வுடனும் இடைவிடாது ஜபித்துக் கொண்டிருப்ப வர்கள் 'பரமஹம்ஸர்கள்' எனக் கூறப்படுகின்றனர்.

"ஹகாரேண பஹிர்யாதி ஸகாரேண விசேத்புன: |
ஹம்ஸ ஹம்ஸேத்யமும் மந்த்ரம் ஜீவோ ஜபதி ஸர்வதா ||

என்று நிசுவாச காரிகை எனும் ஆகமம் கூறுகிறது. 'ஹம்' என வெளிச்சென்று 'ஸம்' என மீண்டும் உள்ளே புகுகிறது. ஜீவனானவன் எப்பொழுதும் இந்த 'ஹம்ஸ ஹம்ஸ' எனும் மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருக் கிறான்.

மூலாதாரம் **லயபூமி** என்றும் பிரம்மரந்திரம் **பிரத்யாவிருத்தி பூமி** என்றும் ஆகமத்தில் கூறப்படும். சென்று, இன்புற்று, மீண்டும் திரும்புதற்குரிய இடம் பிரத்யாவிருத்தி பூமி. சிரபுரமாகிய பிரம்மரந்திரத்தில் கைலையைத் தரிசித்து இன்புற்று மீண்டும் இதயத் தானத்திற்கு வரும்போது யோகசாதகன் அங்கே சிவமும் சக்தியுமாக விளங்கும் இரண்டு அன்னப் பறவைகள் ஆனந்த பரவசமாகிப் பேசிக் கொண்டி ருக்கும் யோகக் காட்சியைக் காண்கிறான். வேதம் முதலான பதினெட்டு வித்யைகளுக்கும் அந்த யோகப் பேச்சே மூலகாரணமாகிறது. **அந்த யோகப் பேச்சின் சாரமாக வெளிப்பட்ட திருப்பதிகங்களும் மூல இலக்கியங் களாகின்றன.**

யோகானுபவமாகக் கைலைக் காட்சி கண்டு திரும்பும் யோகசாதகன் அன்னப்பறவைகளின் ஆனந்த மயமான சேர்க்கையைக் காணும் அனுபவத்தைத் திருநாவுக்கரசரின் வரலாறும் புலப்படுத்துகிறது. "இப்பொய்கை முழுகி, நம்மை நீ கைலையில் இருந்த அம்முறைமை, பழுதில் சீர்த் திருவையாற்றில் காண்" என இறைவன் ஆணையிட்டதும், திருநாவுக்கரசர் அந்தப் பொய்கையில் முழுகித் திருவையாற்றுப் பொய்கையிலிருந்து வெளிவந்தார். வந்ததும் அவர் கண்ட காட்சி, பறவைகளின் சேர்க்கைக் காட்சியாகவே இருந்தது.

*"யாதும் சுவடுபடாமல் ஐயா றடைகின்ற போது*
*காதன் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன்"*

*"ஆழி வலவன்நின் றேத்தும் ஐயா றடைகின்ற போது*
*கோழி பேடையொடும் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்"*

*"அருங்கலம் பொன்மணி யுந்தும் ஐயா றடைகின்ற போது*
*கருங்கலை பேடையோடாடிக் கலந்து வருவன கண்டேன்"*

–நான்காம் திருமுறை: திருவையாறு

சிவயோகப் பின்னணியில் இந்த வரலாற்றை உணரும்போது உள்ளம் சிலிர்த்துக் குளிர்கிறது. இதய கமலத்தில் ஆணும் பெண்ணுமாக உள்ள இரட்டை அன்னங்களைக் காணும் யோகானுபவத்தை உணர்த்துவது புறவம் என்பது.

தண்ணீரிலிருந்து பாலைப் பிரித்துப் பயன் கொள்ளும் அன்னத்தைப் போன்று, தத்துவப் பிணிப்பு களிலிருந்து, பாசப் பிணைப்புகளிலிருந்து தன்னை

வேறுபடுத்தித் தன்னையே தானாகக் **காண்பவனாகவும்,** தன்னைத் தவிர இரண்டாவதான ஒன்றைக் **காணாத வனாகவும்** திகழும் யோக சாதகன் ஹம்ஸம் எனும் உயர்நிலைக்கு உயர்கிறான். இத்தகைய இரண்டற்ற காட்சியை அனுபவித்தற்குரிய யோகநிலைக்கு இடமாக இருப்பது புறவம்.

**9. சண்பை**

உலக வழக்கில் சம்பங்கோரை எனும் பொருளைத் தரும் சண்பை எனும் சொல் யோக வழக்கில் மின்னல் எனும் பொருளைத் தரும். இயற்கையில் காணப்படும் மின்னல், தோன்றியதும் நொடி நேரத்திலேயே மறைந்து விடுவது. ஆனால், யோகசாதகன் ஆயிரம் இதழ்க் கமலத்தில் காணும் மின்னல், நிலையாகவும் குளிர்ச்சியுடனும் திகழ்வது. நிலையாகத் திகழ்வதால் குண்டலி சக்திக்கு அங்கே ஸ்திர ஸௌதாமினீ என்று பெயர். (ஸௌதாமினீ - மின்னல்). அனைத்து விதமான பேதங்களையும் கழற்றியும் உதறியும் எறிந்து விட்டு, அனைத்து விதமான கட்டுகளிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டு, அனைத்தையும் சிவ-சக்தி மயமாகக் காணும் உத்தம யோகியர்க்கே இத்தகைய 'நிலையான மின்னற்காட்சி' அனுபவம் வாய்க்கும்.

துருவாச முனி எனும் பெயர்மாறி சண்பை முனி எனும் புதுப்பெயர் பொருந்தியது போன்று 'ஜீவான்மா' என்றும் 'பசு' என்றும் அழைக்கப்பட்டு வந்த ஆன்மா,

இவ்வகை யோகானுபவம் பெற்ற பிறகு 'சிவான்மா' என்றும் 'மஹான்மா' என்றும் புதுப்பெயர் பெறுகிறது.

## 10. காழி

கால வடிவாக இருந்து செயற்படும் சிவசக்தியே காலி - காளி என அழைக்கப்படுகிறாள். பாம்பும் கால வடிவாக இருப்பதே. காளிதன், காளி ஆகியோர் தொடர்பால் ஏற்பட்ட பெயர் காழி எனக் கூறப்படுகிறது. காலி-காளி-காழி. ல காரம் ள காரமாக வும் ழ காரமாகவும் மாறும் முறையில் இப்பெயர் பொருந்தியது எனக் கொள்ளலாம். எனினும் காழி எனும் பெயர் காழ் என்பதன் அடிப்படையாகத் தோன்றியது என யோகரீதியாகப் பொருள் கொள்வதில் தவறில்லை.

காழ் - வைரம், வைரம் போன்று பிளவுபடா உறுதி பெற்றிருக்கும் தன்மையைக் 'காழ் கொண்டி ருத்தல்' எனத் தமிழ் இலக்கியம் கூறும்.

யோகியர்க்கு வாய்க்கும் வைரமயமான தூண் போன்ற சரீரம் 'காழ்' எனக் குறிக்கப்படுகிறது. "மழபாடி வயிரமணித் தூணே" என்று துதிக்கிறார் திருநாவுக்கரசர். உலகினர்க்கு வாய்த்துள்ள தேகம், பாழ்த்த தேகம். ஆனால் சிவயோகியர்க்கு வாய்த்துள்ள தேகமோ, காழ்த்த தேகம்; காழி என்பது காழ்த்த - வயிரம் பாய்ந்த, பொன்னிற மேனியைப் பெற்றுள்ள சிவயோகியைக் குறிக்கும் சொல். காழ் என்பதை உடையவன் காழி. அதி தீவிரமான சிவயோகப் பயிற்சிகளால் இத்தகைய தேகத்தை யோகசாதகன்

பெறமுடியும். இத்தகைய வஜ்ரமயமான பொன்னிற தேகநிலையை வேண்டி, அருணகிரிப் பெருமான் சந்தத் தமிழ் பாடுவதை நோக்குக:

*"கட்டி முண்டகர பாலி அங்கிதனை*
*முட்டி யண்டமொடு தாவி விந்துவொலி*
*கத்த மந்திரவ தான வெண்புரவி மிசையேறிக்*
*கற்ப கந்தெருவில் வீதி கொண்டுசுடர்*
*பட்டி மண்டபமு டாடி இந்துவொடு*
*கட்டி விந்துபிச காமல் வெண்பொடிகொ டசையாமல்*
*சுட்டு வெம்புர நிறாக விஞ்சைகொடு*
*தத்து வங்கள்விழ சாடி எண்குணவர்*
*சொர்க்கம் வந்துகையு ளாக எந்தைபதம் உறமேவித்*
*துக்கம் வெந்துவிழ ஞானமுண்டு குடில்*
*வச்சிரங்கள் என மேனி தங்கமுற*
*சுத்த கம்புகுத வேத விஞ்சைகொடு புகழ்வேனோ"*

காழ்பாய்ந்த தங்கநிறத் தேகநிலையைப் பெறுவதற்கான யோக நெறி முறையைக் குறிப்பது 'காழி' எனும் பெயர்.

### 11. கொச்சை வயம்

இறை நிலைக்குரிய குணங்கள் அனைத்தையும் பெற்று இறைவனைப் போன்றே பெரிதுபட்டுப் பெருமைப்பட வியாபித்திருக்கும் சிவநிலை ஒவ்வோர் ஆன்மாவுக்கு உரிய இயல்பான நிலைதான். ஆனால் அப்படி இல்லாமல், அது ஆணவம், கன்மம், மாயை எனும் மூன்றாலும் மறைக்கப்பட்டும் கட்டப்பட்டும் சிறுமைப்படுத்தப்பட்டுள்ள நிலையில் உள்ளது. இவ்வாறு ஆன்மா சிறுமைக்கு உள்ளாகி இருக்கும்

நிலை 'கொச்சை' எனப்படும். இந்தக் கொச்சை நிலையை வயம் கொள்ளுதற்குரிய, வெற்றி கொண்டு மேம்படுதற்குரிய சிறப்பான சிவயோக நெறி கொச்சை வயம் எனப்படுகிறது. சிறுமை நிலையை வெற்றி கொள்வது கொச்சை வயம். கொச்சை நிலை துர்நாற்றத்தின் மேலும், வயநிலை நறுமணத்தின் மேலும் தலவரலாற்றில் வைத்துப் பேசப்படுகிறது. 'பரிமள சுகந்த வீத மயம்' என, நறுமண யோகநிலையைக் குறிப்பார் அருணகிரிநாதர்.

"இருவினை புனைந்து ஞான விழிமுனை திறந்து நோயின்
இருவினை இடைந்து போக மலமூடு அவ்
இருளற விளங்கி ஆறு முகமொடு கலந்து பேதம்
இலையென இரண்டு பேரும் அழகான
பரிமள சுகந்த வீத மயமென மகிழ்ந்து தேவர்
பணியவிண் மடந்தை பாத மலர்தூவப்
பரிவுகொ டனந்த கோடி முனிவர்கள் புகழ்ந்து பாட
பருமயி லுடன் குலாவி வரவேணும்"

–சுவாமிமலைத் திருப்புகழ்

## 12. கழுமலம்

மறைத்தும் கட்டுப்படுத்தியும் ஆன்மாவைச் சிறுமைப்படுத்தும் ஆணவம் முதலான மலங்கள் முழுவதுமாக நீக்கப்பட்டிருக்கும் நிலை கழுமலம் எனப்படும். பாசக் கூறுகள் அனைத்தும் நீக்கப்பட்டி ருக்கும் நிலை, மிகமிகத் தூய்மையான நிலை. சுத்த மாயா புவன போகங்களுக்கும் மேற்பட்ட விந்துத்தான லயநிலையே கழுமலநிலை. "பிந்து தாரணா யோகம்" எனப்படும் யோகசாதனை புரியும் உத்தம சீலர்களால்

மட்டுமே இந்த லயத்தானத்தை, சிதாகாசம் தவிர வேறொன்றும் இல்லாத சிதேக ரஸ சம்பூர்ண நிலையைத் திடமாகப் பெறமுடியும். இந்த உயரிய தாரணா யோகத்தைத் திடீரென எட்டிப்பிடிக்க முடியாது; படிப்படியாகத்தான் பெறமுடியும். "எனது யானும் வேறாகி, எவரும் யாதும் யானாகும்" பெருத்த சிவ-வியாபக நிலை, கழுமலநிலை. இது இதய பாவனைக்கும் அப்பாற்பட்டது ஆகையால், பயிற்சி செய்வதற்கு எளிதில் இயலாத ஒன்று.

*"அமல வாயு வோடாத கமல நாபி மேல் மூல*
*அமுத பான மேமூல அனல்மூள*
*அசைவு றாது பேராத விதமும் மேவி யோவாது*
*அரிசதான சோபானம் அதனாலே*
*எமனை மோதி ஆகாச கமன மாம னோபாவம்*
*எளிது சால மேலாக உரையாடும்*
*எனது யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்*
*இதய பாவ னாதீதம் அருள்வாயே"*

என வரும் திருப்புகழில் கழுமலநிலைக்குரிய உயர்ந்த யோகநிலை கூறப்படுகிறது.

பிரம்மபுரத்துக்குரிய பன்னிரண்டு பெயர்களும் சிவயோக நுட்பங்களை உணர்த்தும் உயர் மனுக்களாக (மனு = மந்திரம்) விளங்கும் பான்மை இதுகாறும் சிறிது விளக்கப்பட்டது. இப் பன்னிரண்டு பெயர்களையும் உறுப்புகளாகக் கொண்டு அங்கியாக விளங்கும் பிரம்மபுரம் எனும் மூலத்தலம், பராசக்தியினின்று பிரியாததாகவும், பரம ஆகாச மயமாகவும் விளங்குவது. இது பராசக்தி மயமாகவும், பரம ஆகாச மயமாகவும்

பொலிந்து சிவபரம்பொருளுக்குரிய திருமேனியாக விளங்கும் பெருமை உடையது. புரம் = திருமேனி; பிரமம் = நிட்கள சிவம்; நிட்கள சிவத் திருமேனியே பிரம்மபுரம்.

ஆகம-வாஸ்து விஞ்ஞானப்படி நிட்கள சிவத்துக்கும் சூக்கும உருவம் உண்டு; இது வெளிப்படா வடிவம். இத்த கைய வெளிப்படா வடிவ ஆதாரமாக விளங்குவது பிரம்மபுர மூலத்தலம் என அதிசூக்கும நிலையில் வைத்து உணரவேண்டும்.

*"பிரம புரத்துறை பெம்மான் எம்மான்"*

என வரும் திரு ஏகபாதப் பதிகம் இந்நுட்பத்தை வெளிப்படுத்துவதே. திரு ஏகபாதப் பதிகத் திருப் பாடல்கள் அத்தனையும், வியப்புக்குரிய யோக நுட்பங் களை உள்ளடக்கித் திகழ்கின்றன. இந்நுட்பங்கள் தனியே வேறொரு நூலில் விளக்கப்படும்.

7

# பிரம்மபுரமும் மூலாதாரமும்

பிரம்மபுரம் மூலத்தலமாக மட்டும் அல்லாமல் மூலாதாரத் தலமாகவும் விளங்குகிறது என்பதைத்தான் திருஞானசம்பந்தர் தமது பதிகங்கள் வாயிலாகப் புலப்படுத்துகின்றார். சிவயோக நெறியில் ஈடுபடுவோர்க்குத் தூல உடல், சூக்கும உடல், காரண உடல் முதலானவற்றின் நுட்பங்கள் நன்கு தெரிந்திருக்க வேண்டும். இந்த நுட்பங்களைப் பற்றிய தெளிவான உணர்வு இல்லாமல் சிவயோக நெறியை நன்கு அனுட்டிக்க முடியாது.

மூலாதாரம் முதலான ஆதார கமலங்களை அல்லது ஆதார சக்கிரங்களை யோகநூல்கள் அனைத்தும் கூறுகின்றன. மஹாயான பௌத்த ஆகமங்களும் இவற்றைப் பற்றிய விளக்கங்களையும் நுணுக்கங்களையும் தருகின்றன. எனினும் இவற்றைப் பற்றிய அமைப்பு முறை, தியான முறை, இவை செயல்படும் முறை, இவற்றால் பெறப்படும் பயன்கள்,

அண்ட பிண்ட இணக்கத்தில் இவற்றின் பங்கு - இவை முதலான விளக்கங்களைத் தகுந்த ஆசான் வாய்வழி நேரிடையாகக் கேட்டுத் தெளிவு பெறுதலே மிகவும் சிறந்தது. ஏனெனில், மேற்கண்ட நூல்கள் வெளிப் படுத்தும் கருத்துக்களிலே பல முரண்பாடுகள் காணப் படும். முரண்பாடுகளைக் கொண்டிருப்பது எப்படி விஞ்ஞானமாகும்? யோகம் என்பது மிக உயர்ந்த, முழுமையான விஞ்ஞானமன்றோ? இந்த விஞ்ஞானத் தில் பேதங்களோ முரண்பாடுகளோ ஏற்பட வழி இல்லை. வெளியிடப்பட்ட கருத்துக்களில் முரண்பாடு உள்ளது போல் தோன்றும். தேர்ந்த சிவயோக அனுபூதிச் செல்வரிடம் நேரிடையாகக் கேட்கும்போது முரண்பாடுகள் அனைத்தும் நீங்கிவிடும்.

மூலாதாரம் முதலானவை தூல உடல் தொடர்புடையவை அல்ல, அவை சூக்கும உடலைப் பற்றியவை என முன்னர்க் கூறப்பட்டது. பிண்ட மேரு என்றும் வீணாதண்டம் என்றும் கூறப்படும் முதுகுத் தண்டு தூல உடலைச் சார்ந்தது. நாடிகளுள் மிகப் பல தூல உடலைச் சார்ந்தவை. முக்கியமான நாடிகள் சூக்கும உடலைச் சார்ந்தவை. மூலாதாரம் முதலான சக்கர அமைப்புகளைத் தூலநிலையில் காணமுடியாது. சூக்கும நிலையில் உள்ள அவற்றை ஏன் ஆதாரம் என்கிறோம்?

தூலத்துக்கு ஆதாரமாக இருப்பது சூக்குமம் என்பது பிரபஞ்ச விஞ்ஞான விந்தைகளுள் ஒன்று. கோள்களையும் விண்மீன்களையும் பூலோகம் முதலானவற்றையும் அதனதன் நிலையில் தாங்கிக்

கொண்டிருப்பது சிம்சுமாரம் எனப்படும் காற்று மண்டலம் என சிவாகம யோகபாதம் தெரிவிக்கிறது. கோள்கள் முதலானவை தூலம்; சிம்சுமார சக்கரம் சூக்குமம்.

நமது தூல உடல் கீழே விழுந்து விடா வண்ணமும் மேலே பறந்து விடாவண்ணமும் எல்லா நிலைகளிலும் தாங்கிக் கொண்டிருக்கின்ற காரணத் தால் மூலம், சுவாதிட்டானம், மணிபூரகம் முதலானவை ஆதாரங்கள் எனக் கூறப்படுகின்றன.

"ஆஸமந்தாத் சரீரம்வை ஸம்யக்த்ரியத்வாத் ஆதாரம்" என்று, சருவக்ஞானோத்தர யோகபாதம் கூறுகிறது. ஆ - அனைத்தையும்; த்ரியதே - தாங்குவது. "உடலை எல்லா நிலைகளிலும் எல்லாப் பக்கங்களிலும் நன்றாகத் தாங்கி நிற்பதால், ஆதாரம்" என்பது ஆகம வாக்கியத்தின் பொருள்.

ஆதாரங்களுள் முதுகுத் தண்டின் கீழ், தண்டின் உட்புறத்தில் அமைந்துள்ள நான்கிதழ்த் தாமரைக்கு மூலாதாரம் என்று பெயர். இதனது முக்கியத்துவத்தை ருத்ர ரஹஸ்யம் எனும் ஆகமம் நன்கு தெளிவு படுத்துகிறது.

*"ஸர்வாதாரா மஹீ யஸ்மான் மூலாதாரதயாஸ்திதா: |*
*தத்பாவே து தேஹஸ்ய பாத:ஸ்யாத் உத்கமோபி வா ||"*

"அனைத்துக்கும் ஆதாரமான பூமியானது உடலில் மூலாதார வடிவத்தில் நிலைபெற்றுள்ளது. பூமி மயமான மூலாதாரம் இல்லை எனில், தேகமானது கீழே விழுந்து விடும்; இல்லையெனில், மேலே எழுந்து

அந்தரத்தில் நிற்கும்". நமது தேகத்தின் சீரான இயக்கத் துக்காக இறைவனின் கருணைச் சக்தி தேகத்தில் அமைத்துள்ள விந்தைகள் மிகப்பல. உணவு முதலான வற்றால் உடலைப் பாதுகாக்கிறோம் என நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். இதில் இருபது விழுக்காடுதான் உண்மை. நாம் அறியாமலேயே நமது உடலைப் பாதுகாத்துக் கொண்டிருப்பவை மூலாதாரம் முதலான நுண்ணிய அமைப்புகள்தாம். நமது உடற் பாதுகாப்பில் இவற்றின் பங்குதான் மிக மிக அதிகம்.

மூலாதாரம் பூமி மயமாக இருப்பது. பிருதிவி என்னும் தத்துவத்தை உள்ளடக்கி இருப்பது. பூமி மயமாக உள்ளது என்பதாலேயே பூமியிலுள்ள நதிகள், மலைகள், கடல்கள் முதலான அனைத்தும், மிகமிகச் சூக்கும நிலையில், மூலாதாரத்தில் இடம் பெற்றுள்ளன என உணர்ந்துகொள்ள வேண்டும்.

மூலாதாரம் என்பதற்கு ஏற்ப, இந்த ஆதார சக்கிரம் பற்பல வெளிப்பாடுகளுக்கு மூலகாரணமாகத் திகழ்கிறது. இது முதுகுத் தண்டின் கீழ்ப்புறம், குதப்பகுதிக்கு மேலே இருப்பது. இது ஒரு மூலக் கிழங்காக இருந்துகொண்டு மிக முக்கிய இருபத்தெட்டு நாடிகளுக்குத் தோற்றுவாய்த் தானமாகச் செயற் படுகிறது. இருபத்தெட்டு நாடிகளுள் சுழுமுனை என்பது மட்டும்தான் முதுகுத் தண்டின் உட்புறம் செல்வது. மூலாதாரத்திலிருந்து முளைக்கும் போது இடை என்னும் நாடி சசி என்று அழைக்கப்படும்; பிங்கலை எனும் நாடி மிஹிரன் என்று அழைக்கப்படும். இரண்டரை அங்குலம் (துடி நேரம்) மேலே எழுந்த

நிலையில்தான் இந்த இரண்டு நாடிகளும் இடை என்றும் பிங்கலை என்றும் பெயர் பெறுகின்றன. இடை நாடி முதுகுத் தண்டின் வெளியே இடப்புறமாகவும், பிங்கலை நாடி முதுகுத் தண்டின் வெளியே வலப்புறமாகவும் செல்லும். ஆதார சக்கிரங்கள் உள்ள இடத்தில் இவை வலம் இடமாக மாறி மாறி மேலெழும்.

நாடிகள் தோன்றுதற்கு இடமாக உள்ள மூலா தாரம் செந்நிற இதழ்கள் நான்கு கொண்டுள்ள ஒரு கமலம். செவ்விதழ் நான்கிலும் பொன்னிற எழுத்துக்கள்; கமலத்தின் கர்ணிகைப் பரப்பில் பூமியைக் குறிக்கும் நாற்கோண மண்டலம். மண்டலத் தின் நடுவண் கீழ்ப்புறமாக பூமியையும் இந்திரனையும் குறிக்கும் லம் என்னும் எழுத்தும் அதன் அதிதெய்வ வடிவும்; எழுத்தின் மேலுள்ள சுழிக்குள் செந்நிற நான்முகன். கர்ணிகையின் நடுவே மலர்ந்துள்ள செந்தாமரையில் அஸ்தி எனும் தாதுவுக்கு அதி தேவதையான டாகினி எனும் சக்தி; இந்தச் செந்தாமரை நடுவே மின்னல்நிற முக்கோணம். அங்கே நீலமேக வண்ணத்தில் சுயம்புலிங்கம். இதனை மூன்றரை வட்டத்தில் சுற்றிக்கொண்டு லிங்கத்தின் பிரம்மத்துவாரத்தை வாயால் பற்றிக்கொண்டு தேனுண்ட களிப்பில் ரீங்காரம் இடும் வண்டுக் கூட்டத்தைப்போல் நாத ரீங்காரங்களை எழுப்பிக் கொண்டிருப்பவள் குண்டலி சக்தி. குண்டலி சக்தியே இடை என்னும் நாடி வாயிலாகவும் பிங்கலை என்னும் நாடி வாயிலாகவும் முறையே அபானன் எனும்

உள்மூச்சையும் பிராணன் எனும் வெளி மூச்சையும் இயக்கிக் கொண்டிருக்கிறாள். இந்த இயக்கம் தேகம் எடுத்துள்ள எல்லா ஜீவராசிகளிடமும் இருக்கும். பிராணன் மேல் நோக்கி வெளியே சென்று விடாமல் இழுத்துப் பிடிப்பது அபானன். அவ்வாறே கீழ் நோக்கி வெளியேறி விடாமல் அபானனை இழுத்துப் பிடிப்பது பிராணன். பிராணன் - அபானன் எனும் இரண்டிற்கும் இடையே இத்தகைய எதிரிடையான சக்தி (கீழ் நோக்கி இழுப்பது, மேல்நோக்கி இழுப்பது) இருக்கும் வரை தேகத்தில் உயிர் நிலைக்கும். எப்பொழுது இந்த இரண்டிற்கும் இடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டு ஒரே மாதிரியான சக்தி தோன்றிவிடுகிறதோ அப்பொழுது தேகத்தை விட்டு உயிர் நீங்கும்.

மூலத் தாமரை எனப்படும் மூலாதாரத்தின் குகைக்குள் இருந்துகொண்டு குண்டலிசக்தி எழுப்பும் ரீங்காரமே தமிழ், சம்ஸ்க்ருதம் முதலான மொழிகளாக உலகில் பரிணமிக்கிறது. மூலப் பரைவாக்கு அல்லது பரைநாதம் என இந்த ரீங்காரம் குறிக்கப்படும்.

மொழிகள் மட்டுமல்லாமல் மூல மந்திரமும், இந்த நான்கிதழ்க் கமல ஆதாரத்திலிருந்து தோன்றுவதுதான்.

“சிவசக்தி மயம் மந்த்ரம் மூலாதார ஸமுத்திதம்” என யோகசிகை எனும் உபநிடதம் கூறுகிறது. “சிவ மயமாகவும் சக்தி மயமாகவும் உள்ள மூல மந்திரம் மூலாதாரத்திலிருந்து எழுவது.”

மூலாதாரத் தொடர்பான விளக்கங்கள், நுட்பங்கள் மிகப்பல எனினும் தேவைக்கேற்ப ஒரு சில நுட்பங்களே இதுவரை கூறப்பட்டன. கூறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில் இனி மூலத்தலமான பிரம்மபுரத்தை நோக்குவோம்.

பூமி மயமாக மூலாதாரம் விளங்குவது போன்று, பூமி மயமாகவே பிரம்மபுரமும் விளங்குகிறது. உலகின் முதலாகிய ஓர் ஊர் என்பதால் பிரம்மபுரம் மூலத்தலம் மட்டுமன்று; மூலாதாரத் தலமும் ஆகும். பிரம்மனும் இந்திரனும் மூலாதாரத்தில் விளங்குவது போன்று, பிரம்மனும் இந்திரனும் பிரம்மபுர வாசிகளாக விளங்கி இருந்தனர். மூலாதாரத்திலிருந்து மேற்செல்லத் தொடங்கும் நிலையில் சுழுமுனை கால மயமாக விளங்குவது போன்று, பிரம்மபுரமும் காலசக்கிரமாக விளங்குகிறது. மூலாதாரம் மூலமந்திரம் தோன்றும் இடம்; பிரம்மபுரம் மூல இலக்கியங்கள் தோன்றும் இடம். சிவ-சக்தியின் இணக்கம் மூலாதாரத்திலும் உண்டு; பிரம்மபுரத்திலும் உண்டு; மற்றைய ஆதாரங்கள் ஒடுங்கினாலும் மூலாதாரம் ஒடுங்காது; மற்றைய இடங்கள் ஊழிக்காலத்தில் அழிந்தாலும் பிரம்மபுரம் அழியாது. அனைத்தும் ஒடுங்கிய நிலையில் இறைவனுக்கும் இறைவிக்கும் இருக்கையாக விளங்குவது பிரம்ம புரம்.

மூலாதார பூமியில் சிவனும் சக்தியும் முறையே மஹாநடேசுவர வடிவமும் மஹாநடேசுவரி வடிவமும் ஏற்றுக்கொண்டு ஒன்பது வகைப்பட்ட நடனங்களை ஆடி, ஒடுங்கிய பிரபஞ்சங்களை மீளத் தோற்றுவிக்

கின்றனர் என்று சிவயோக நூல் கூறுகிறது. பிரபஞ்ச உருவாக்க நிமித்தம், பிரபஞ்ச பரிபாலன நிமித்தம் இறைவன் பல்வேறு வடிவங்களை ஏற்றுக் கொள்வதைத்தான் சிவாகமம் 'நடனம்' எனும் கலைச் சொல்லால் குறிப்பிடுகிறது.

கருமை பெற்ற கடல் கொள்ள மிதந்து உலகங்களுக்கெல்லாம் வித்துப் போல், காலத்துக்கு அப்பாற்பட்டு அழியாமல் இருக்கும் மூலாதாரத் தலமாகிய பிரம்மபுரத்தில் விளங்கும் சிவபெருமானும் நவவித நடனங்களைச் செய்தருளி மீண்டும் பிரபஞ்சங் களைத் தோற்றுவிக்கின்றான். சிவதாண்டவம், சக்தி தாண்டவம், பிந்து தாண்டவம், நாத தாண்டவம், ஸதாசிவ தாண்டவம், ஈசுவர தாண்டவம், ருத்திர தாண்டவம், விஷ்ணு தாண்டவம், பிரம்ம தாண்டவம் எனப்படும் ஒன்பது தாண்டவங்களாலும் தத்துவங் களையும் புவனங்களையும் இறைவன் தோற்றுவிக் கின்றான். அவ்வாறு அவன் தோற்றுவிப்பதற்குரிய தாண்டவங்களை ஆடுதற்குக் களமாக, மூலாதாரமாக விளங்குவது பிரம்மபுரம்.

அப்பிராகிருத நிலையில் பிரம்மபுரத்தை இவ்வாறு மூலாதாரமாகத் தியானித்துத் திருப்பதிகங் களை ஓதுவது சிறந்த யோகசக்தியை அளிக்கும்.

8

# பிரம்மபுரமும் இதயத்தானமும்

மந்திர நூல்களிலும், பக்தி நெறிப்பட்ட நூல்களிலும், யோக நூல்களிலும் 'இதயத்தில் இன்ன வடிவத்தைத் தியானிக்க வேண்டும்' என்று கூறப்படும் போது பலரும் இதயம் என்பது இடது மார்பினுள் துடித்துக் கொண்டிருக்கும் தூல இதயத்தையே கருதிக் கொள்கின்றனர். சில யோக நூல்களில் சுழுமுனை நாடி இடதுபக்கமாகத் திரும்பி, இடது மார்பின் இதயத்தை ஊடுருவி மீண்டும் திரும்பிக் கழுத்துப் பக்கம் சேர்வதாகப் படமும் போட்டுக் காட்டியுள்ளனர். இது மிகமிகத் தவறான விளக்கம் ஆகும். யோகநூல், தோத்திர நூல் முதலானவற்றில் 'இதயம்' எனக் குறிப்பிடப்படுவது மார்பினுள் நடுப்பகுதியே. இதயம் என்பதற்கு நடு இடம், மையத்தானம் என்று பொருள்.

பொதுவாக இதயம் என்பது மார்பினுள் நடுப் பகுதியைக் குறித்தாலும், சிவயோக நோக்கில் இதயம் என்பது ஒவ்வோர் ஆதார சக்கரத்தின்

மையப்புள்ளியையும் குறிக்கும்; துவாத சாந்த நிலைக்கும் இதயம் என்றுதான் பெயர் (சிவயோகச் சிறப்பு நூல்களில்)

இதயத் தானம் என இங்கே நாம் காண இருப்பது, மார்பினுள் நடுப்பகுதியில் முதுகுத் தண்டின் உட்புறமாகச் சூக்கும நிலையில் வெளிப்பட்டிருக்கும் அனாகதம் என்னும் ஆதார சக்கிரமே. அனாகதம் எனப்படும் ஆதார கமலம் செம்பருத்திப் பூப்போன்று சிவந்த நிறம் உடையதாய், பன்னிரண்டு இதழ்கள் கொண்டதாய் விளங்கும். சிந்துர வண்ணத்துடன் ஒவ்வோர் இதழிலும் அதற்குரிய எழுத்து விளங்கும். (சம்ஸ்க்ருத எழுத்து வரிசையில் 'க' முதல் இரண்டாவது 'ட' வரை). இதன் கர்ணிகைப் பரப்பில் அறுகோண வடிவத்தில் வாயுமண்டலம் வியாபித்திருக்கும். வாயு மண்டலம் புகைநிறம் உடையதாக விளங்கும். அறுகோணத்தின் நடுவில், திரண்ட புகை போன்ற நிறத்தில் வாயுபீஜம் எனப்படும் 'யம்' எனும் எழுத்து தனக்குரிய அதிதேவதையுடன் விளங்கும். கிருஷ்ண மிருகம் எனப்படும் ஒருவகை மான் இதற்குரிய வாகனமாகத் திகழும். எழுத்தின் நடுவண் 'ஈசன்' எனும் பெயர் உடையவராய்ச் சிவபெருமான் கோடி சூரியப் பிரகாசத்துடன் திகழ்வர்.

கர்ணிகைப் பரப்பின் நடுவில் புதுமின்னல் போன்று மஞ்சள் நிறத்துடன் காகினி எனும் யோகசக்தி **ரத்தம்** எனும் தாதுவுக்கு அதிதேவதையாக விளங்கிக் கொண்டிருப்பாள். சிவசக்தி, வாயுபீஜத்தின் கீழ்

முக்கோண வடிவில் விளங்க, இதன் நடுவண் பாணலிங்கம் காட்சி அளிக்கும்.

கர்ணிகை நடுவண் விளங்கும் செந்நிறக் கமலம் எட்டு இதழ்களுடையது. ஒவ்வோர் இதழும் குறிப்பிட்ட தனி நிறத்துடன் விளங்கும். இந்த எட்டிதழ்க் கமலத்தின் நாளம் கீழே உள்ள நாபிக்கமலத்திலிருந்து தோன்றுவது. நாபிக்கமலத்தின் பரப்பிலுள்ள கிழங்கு முதல் நாளத்தின் உச்சி வரை உள்ள தண்டுப் பகுதியில் பிருதிவி முதல் மாயை வரை உள்ள முப்பது தத்துவங் களிலும் உள்ள புவனங்கள் சிறுசிறு முட்களாகப் பொருந்தி இருக்கும்.

இந்த ஆதார கமல நடுப்பகுதியிலிருந்து ஸௌம்யம், விக்ஞேயம் முதலான பத்து நாடிகள் புறப்படுகின்றன.

பன்னிரண்டு இதழ்க் கமலத்தின் நடுவே, செந்நிற எட்டிதழ்க் கமலம் விளங்கும் என முன்னர்க் கூறப்பட்டதன்றோ? இந்த எட்டிதழ்க் கமல தியானம் சிவயோக நெறியில் மிகமிக முக்கியப் பங்கு வகிக்கிறது.

எட்டிதழ்க் கமலத்தின் மேற்பரப்பில் முக்கியமான நாடி சக்கரம் ஒன்று சுழன்று கொண்டிருக்கிறது. இந்த நாடி சக்கிரம் பத்து ஆரங்கள் உடையதாய் விளங்கும். புரியட்டகம் எனும் சரீரத்துடன் கூடியிருக்கும் ஜீவன், பல்வேறு போகங்களில் இச்சை உடையதாய் நாடி சக்கரத்தின் பத்து ஆரங்களிலும் போக்குவரவு செய்து கொண்டிருக்கும்.

எட்டிதழ்க் கமலம் இதயாகாசத்துடன் தொடர்புடையது. இக்கமலத்தின் கர்ணிகையில், பிருதிவி தத்வ மயமான நிவிருத்தி சக்தி, ஜல தத்துவ மயமான பிரதிஷ்டா சக்தி, அக்னி தத்துவ மயமான வித்யா சக்தி, **வாயு தத்துவ மயமான சாந்தி சக்தி** என நான்கு சக்திகள் பேரொளி கொண்டு விளங்கும். ஒவ்வோர் ஜீவனுக்கும் தனித்தனியே இந்த நான்கு சக்திகள் விளங்கும். சிவமயமான – சிதாகாச மயமான – சாந்தியதீத சக்தி, எட்டிதழ்க் கமல நடுவண் கோடி சூரியப் பிரகாசத்துடன் விளங்கும். இந்தச் சக்தி பரை வாக்கு மயமாக, மூலநாத மயமாக விளங்கும். இங்கே முக்கியமாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு.

நிவிருத்தி முதலான நான்கு சக்திகள் ஒவ்வொரு ஜீவனுக்கும் தனித்தனியே இருக்கும். ஆனால் சிவமயமானதும், சிதாகாசமயமானதுமான சாந்தியதீத சக்தி எல்லா உயிர்களுக்கும் உரியதாய் ஒன்றாகவே விளங்கும். அதாவது ஒன்றாகவே இருக்கும் சாந்தியதீத சக்தி எல்லா உயிர்களின் இதயகாசத்திலும் இழை போல் ஊடுருவி உள்ளது. இந்தச் சக்தியோடு யோக சாதகன் ஐக்கியப்படுத்தும்போது அனைத்துயிர்களின் உண்மைநிலைகளை அறிபவன் ஆகிறான். நிவிருத்தி முதலான நான்கு சக்திகளால் புரியட்டக தேகத்தில் இருக்கும் ஜீவன், ஒவ்வோர் இதழிலும் தள்ளப்படு கிறான். அந்த அந்த இதழில் ஜீவன் உலவும்போது, அது அதற்குரிய சக்திக்கு ஆட்பட்டு ஞானவேட்கை, ஆசை, கோபம், பொறாமை முதலான குணங்களுக்கு ஆட்பட்டு விடுகிறான்.

மனிதன் இறைநிலை அடைதல் என்பது அவன் தனது இதய சக்கரத்தின் செயற்பாட்டை அறிந்து தன்னை நெறிப்படுத்திக் கொள்வதைப் பொறுத்து உள்ளது.

மெய்கண்ட தேவர் முதலான ஞானப் பெரியோர் இதய கமல பாவனையைப் பெரிதும் உணர்த்தியும், உரிய நெறியில் வழிகாட்டியும் சீரிய முறையில் நெறிப் படுத்தியுள்ளனர். உரிய ஆகமப் பின்னணி இல்லாத காரணத்தால் அவர்தம் உபதேச வெண்பாவில் அடங்கியுள்ள மெய்ப்பொருட் கருத்தை நடைமுறைப் படுத்திச் சிவானுபவம் பெறவேண்டும் என்று உளப் பூர்வமாக விரும்புவதில்லை. பேத உணர்வு இருக்கும் வரை யோக உணர்வு பூக்காது.

*"மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம்*
*எண்ணிய ஈசர் சதாசிவமும் – நண்ணில்*
*கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணாம்*
*நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்"*

–சிவஞான போதம்: 9:3ஆம் அதிகரணம்

என வரும் மெய்கண்ட வெண்பா சிவபூஜை செய்வோர் தமக்குள் இதயத்தில் பாவித்துக் கொள்ளும் சிவாசனத்தைப் பற்றிய **தமிழ் ஓவியமாக** விளங்குவதை ஓர்க. இதய ஆகாசத்தில் மலர்ந்துள்ள எட்டிதழ்க் கமலமே இவ்வெண்பாவில் விளக்கப்படுகிறது.

பன்னிரண்டு பெயர்களை அங்கமாகக் கொண்டு, அங்கி என விளங்கும் பிரம்மபுரத்தை இதயநடுவண் எட்டிதழ்க் கமலமாகவும் பிரம்மபுரம், வேணுபுரம்

முதலான பன்னிரண்டு பெயர்களை அனாகத சக்கரத்தின் பன்னிரண்டு இதழ்களாகவும் பாவனை செய்து கொண்டு, எட்டிதழ்த் தாமரையின் நடுவில், சிவ பரம்பொருள் எழுந்தருளி இருப்பதாகத் தியானித்தல் சிறந்த யோகப் பயிற்சியாக விளங்கும்.

வேறொன்றின் துணை இல்லாமல், தானாக எழும் நாதத்துக்கு அனாகதம் என்று பெயர். அத்தகைய நாதம் தோன்றுதற்கு இடமாதலின் இதயத் தானம் அனாகத ஆதாரம் எனப்படுகிறது.

இதயத்தானம் என்பது பற்றியும் ஹம்ஸப் பறவைகளின் சேர்க்கையைப் பற்றியும் முன்னரே கூறப்பட்டது. சிவமும் சக்தியும் ஹம்ஸ வடிவங்களில் இந்த ஆதார பீடத்தில் காட்சியளிப்பதை யோகநெறி யால் உணரவேண்டும்.

*"கடல்முயங்கு கழிசூழ் குளிர்கானல்அம் பொன்னஞ்*
*சிறகன்னம்*
*பெடைமுயங்கு பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே"*

*"உடையவன் ஊனமில்லி உடனாயுமை நங்கையென்னும்*
*பெடையொடும் பேணுமிடம் பிரமாபுரம் பேணுமினே"*

*"அன்னம்சேர் பிரமபுரத்து ஆரமுதை எப்போதும்*
*பன்னுஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே"*

*"வாசக் கமலத்து அனம் வன்திரைகள்*
*வீசத் துயிலும் வேணு புரமே"*

என, இவ்வாறெல்லாம் தமது திருப்பதிகங்களில் இதயக் கமலத் தொடர்பான சிவயோகானுபவத்தை உள்ளுறை குறிப்பாகப் புலப்படுத்துகின்றார், திருஞானசம்பந்தர்.

ஞானமுத்திரை வடிவத்தில் விளங்குவதும் ஹம்ஸமே என உறுதி செய்கிறது மகுடாகம யோக பாதம்.

ஹம்ஸ உபாசனை, பூமி முதல் குடிலை வரை உள்ள 36 தத்துவ மயமான சிவாஸனம், பன்னிரண்டு இதழ்க் கமலம், எட்டிதழ்க் கமலம், சிவ-சக்தி ஹம்ஸங்கள், இதய ஆகாச நடுவண் விளங்கும் நிருத்த ஜோதி இவை முதலான நுட்ப நெறிகளை விளக்குவனவாகவே பிரம்மபுரத் திருப்பதிகங்கள் விளங்குகின்றன.

மூலத்தலமான பிரம்மபுரத்தை இவ்வாறு இதயத் தானத்திலும் வைத்து ஒருமுகப்பட்ட சிந்தனையில் ஈடுபடுதல், உறுதி வாய்ந்த யோகசாதனையே ஆகும்.

ஞானமுத்திரை வடிவத்தில் விளங்குவதும் ஹம்ஸமே என உறுதி செய்கிறது மகுடாகம யோக பாதம்.

ஹம்ஸ உபாசனை, பூமி முதல் குடிலை வரை உள்ள 36 தத்துவ மயமான சிவாஸனம், பன்னிரண்டு இதழ்க் கமலம், எட்டிதழ்க் கமலம், சிவ-சக்தி ஹம்ஸங்கள், இதய ஆகாச நடுவண் விளங்கும் நிருத்த ஜோதி இவை முதலான நுட்ப நெறிகளை விளக்குவனவாகவே பிரம்மபுரத் திருப்பதிகங்கள் விளங்குகின்றன.

மூலத்தலமான பிரம்மபுரத்தை இவ்வாறு இதயத் தானத்திலும் வைத்து ஒருமுகப்பட்ட சிந்தனையில் ஈடுபடுதல், உறுதி வாய்ந்த யோகசாதனையே ஆகும்.

**9**

# பிரம்மபுரமும் பிரம்மரந்திரமும்

கபாடம் எனப்படும் தலை உச்சியில் புறக்கண்ணுக்குப் புலப்படாத நிலையில் நுண்ணிய துளை ஒன்றுண்டு. யோக விஞ்ஞானம் இந்தத் துளையை பிரம்மரந்திரம் எனக்கூறும். ரந்திரம் - துளை. சுழுமுனை நாடி இந்தத் துளை வரை உயர்ந்தோங்கி வரும். உயரே மேலெழுந்து செல்வதால் சுழுமுனை நாடியை 'ஊர்த்துவ வாஹினி' என்றும் கூறுவர். உண்மையில் சுழுமுனை நாடி இந்தத் துளை அளவில் நின்று விடுவதில்லை. பிரம்மரந்திரத் தானத்துக்கும் மேல் பன்னிரண்டு விரற்கிடை அளவு உயர்ந்து நிற்கும். உச்சிக்கு மேல் பன்னிரண்டு விரற்கிடை உயரத்தில் இருக்கும் தானம் துவாதசாந்தம் எனப்படும். இங்கும் ஆதார சக்கிரம் உண்டு. யோக நோக்கில் உயர்ந்த தானமாகிய துவாதசாந்தம் எனப்படுவது உடலைச் சுற்றி முழுவதுமாகப் பன்னிரண்டு விரற்கிடை அளவுக்கு, உச்சம் தலை உள்ளங்கால் வரை, ஒரு

துடிப்புச் சக்தியாக வீக்ஷணியமாக இருந்து கொண்டே இருக்கும். தீவிரதரமான சிவயோகியர்க்கு இவ்வகை துவாதசாந்த நிலை நன்கு அனுபவமாகும்.

பிரம்மரந்திரத் தானம் நுண்ணிய துளை எனினும் அங்கே ஆயிரம் இதழ்களை உடைய தாமரை, ஒளி கொண்டு விளங்கும். வெண்மை நிறமுடைய இத்தாமரையின் இதழ்களில் அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலான ஐம்பது எழுத்துக்களும் இருபது சுழற்சிகளில் பொருந்தி இருக்கும்! இதன் கேஸரங்கள் செந்நிறமானவை. இதன் கர்ணிகைப் பகுதியில் ஹம்ஸம் விளங்கும். இதன்மேல் ஆதிகுருவாக, முதல் குருவாகச் சிவபெருமான் எழுந்தருளி இருப்பார். மூல குருவுக்கு மேலாக சூரிய மண்டலமும் சந்திர மண்டலமும் விளங்கும். இவற்றுக்கும் மேலே இருப்பது மகாவாயு மண்டலம். இந்த மண்டலத்தின் மேல் பிரம்மரந்திரமும் மஹாசங்கினி எனும் நாடியும் விளங்கும். அவ்யக்த நாதம் எனப்படும் **நிபோதிகா நாதம்** ஒலிக்கும் இடம் இது. இந்த நாத நிலைக்கு மேல் இருப்பது பரபிந்து. இங்கே மயிர்நுனியின் கோடியில் ஒரு கூறு எனும் நுண்ணிய அளவில் ஹம்ஸ வடிவில் ஜீவன் விளங்கும்.

ஆயிரம் இதழ்க் கமலத்தின் கர்ணிகைப் பரப்பில் 12 இதழ்களை உடைய தாமரை ஒன்று உள்ளது. தாமரையின் மையத்தில் அ - க - த எனும் மூன்று எழுத்துக்களை மூன்று முனைகளில் கொண்டிருக்கும் முக்கோணம் உண்டு. முக்கோணத்திற்கு உள்ளே இருப்பவை ஹகார-ஸகார மயமான குருபாதுகை.

தாமரையின் பன்னிரண்டு இதழ்களில் குரு மந்திரத்தின் பன்னிரண்டு எழுத்துக்கள் பொருந்தி இருக்கும். குருபாதுகை, அமிழ்தத்தின் ஊற்றாக விளங்கி அமிழ்தப் பிரவாகத்தைக் கீழே உள்ள 72,000 நாடி களுக்கும் செலுத்திக் கொண்டிருக்கும். மந்திர தீக்ஷை பெற்றோர் தம் குருவைத் தியானித்து வணங்க வேண்டிய இடம் இதுதான். ஆயிரம் இதழ்க் கமலத்தின் நடுவே உள்ள மண்டலத்தில் விளங்கும் சக்திக்கு யாகினி என்று பெயர். சுக்லம் எனும் தாதுவுக்கு அதிதேவதையாக இச்சக்தி விளங்கும்.

ஸஹஸ்ரார கமலம் எனப்படும் பிரம்மரந்திரத் தானத்தில் பிரம்மபுர பாவனை செய்வதும் உயரிய சிவயோகப் பயிற்சிதான். ஆயிரம் இதழ்த் தாமரை நடுவண் உள்ள குருகமலம் எனப்படும் பன்னிரண்டு இதழ்த் தாமரையின் நடுவில் மூலத்தலமான பிரம்ம புரத்தையும், மூலகுரு வடிவத்தில் திருஞான சம்பந்தரையும் தியானம் செய்து கொள்ள வேண்டும்.

குரு கமலத்தின் பன்னிரண்டு இதழ்களிலும், பிரதக்ஷிணமாக, பன்னிரண்டு பெயர்கள், குரு மந்திரத் தின் பன்னிரண்டு எழுத்துக்களோடும் ஒன்றியுள்ளன வாக உறுதி பாவனை செய்து கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வது உயரிய **யோக தாரணை** முறையாகும்.

*“சூலமென ஓடுசர்ப்ப வாயுவை விடாதடக்கி*
*தூயவொளி காண முத்தி விதமாகச்*
*சூழுமிருள் பாவகத்தை வீழ அழலூடெரித்து*
*சோதிமணி பீட மிட்ட மடமேவி*

மேலைவெளி யாயிரத்து நாலிரு பராபரத்தின்
மேவியரு ணாசலத்தின் உடன்மூழ்கி
வேலுமயில் வாகனப்ர காசமதி லேதரித்து
வீடுமது வேசிறக்க அருள்தாராய்"

என வரும் திருப்புகழ், மேற்கூறப்பட்ட பிரம்மரந்திர ஆதாரத் தொடர்பான வழிபாட்டுக்கு உரியது. இப்பாடலில் மணிபீடம் இட்ட மடம் என்பது பன்னிரண்டிதழ் உடைய குரு கமலத்தையும் **'அருணாசலம்'** என்பது துவாதசாந்தத் தானத்தையும் குறிக்கும். அருணகிரிப்பெருமான், வேறொரு திருப்புகழிலும் துவாதசாந்தத் தானத்தை **'அருண விற்பதி'** என்று கூறுகிறார்.

"ஆசை நாலுசது ரக்கமல முற்றினொளி
வீசி யோடியிரு பக்கமொடு றச்செல்வளி
ஆவல் கூரமண்மு தற்சலச பொற்சபையும் இந்துவாகை
ஆர மூணுபதி யிற்கொளநி றுத்திவெளி
யாரு சோதிநறு பத்தினுடன் எட்டுஇதழ்
ஆகி யேழுமள விட்டருண விற்பதியின் விந்துநாத
ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக
மோடு கூடியொரு மித்தமுத சித்தியொடும்
ஓது வேதசர சத்தியடி யுற்றதிரு நந்தியூடே
ஊமை யேனையொளிர் வித்துனது முத்திபெற
மூல வாசல்வெளி விட்டுனது ரத்திலொளிர்
யோக பேதவகை எட்டுமிதில் ஒட்டும்வகை இன்றுதாரா

– பழமுதிர்சோலைத் திருப்புகழ்

இவ்வாறு வேண்டும் அவர், பிரம்மரந்திரத் தானத்தை மூலவாசல் என்றும், துவாதசாந்தத்

தானத்தை **அருணவிற்பதி** என்றும் குறிப்பிடுவதைக் காண்க. ஐம்பெரும் பூதங்களுள் தீ என்பதற்குரியதாக அருணாசலம் உணரப்படும் நிலை வேறு. துவாத சாந்தப் பெருவெளியில் ஸுதாஸிந்து எனப்படும் அமிழ்தக் கடலாக அருணாசலம் உணரப்படும் நிலை வேறு.

*"மானி டம்முடை யார்வளர் செஞ்சடைத்*
*தேனி டம்கொளும் கொன்றையந் தாரினார்*
*கானி டம்கொளும் தண்வயற் காழியார்*
*ஊனி டம்கொண்டென் உச்சியில் நிற்பரே"*

எனத் திருஞானசம்பந்தர், பிரம்மரந்திர - துவாத சாந்த யோகானுபவ நிலையை உணர்த்துவதைக் காண்க.

பிரம்மரந்திரத் தானத்திலும் துவாத சாந்தத் தானத்திலும் பிரம்மபுர பாவனையைச் செய்வோர் அத்தகைய உயர்நிலைகளுக்கு உயர்த்தப்பட்டு சிவானு பவச் செல்வர்களாக விளங்கும் பேறு பெறுவார்கள் என்பதை நம்பியாண்டார் நம்பிகளும் விதந்து ஓதுகின்றார்.

*"நிலத்துக்கு மேல்ஆறு நீடுலகத் துச்சித்*
*தலத்துக்கு மேலேதான் என்பர் – சொலத்தக்க*
*சுத்தர்கள் சேர்காழிச் சுரன்ஞான சம்பந்தன்*
*பத்தர்கள்போய் வாழும் பதி"*

–ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை: 5

*(நிலம் - மூலாதாரம்; உச்சித்தலம் - பிரம்ம ரந்திரம்; மேலே - துவாதசாந்தத்தானம்)*

பிரம்மபுரத்தை யோகநெறியோடு தொடர்பு படுத்திப் பயன்பெறலாம் என்பதை உணர்த்தவே, மூலாதாரம், இதயத்தானம், உச்சித்தானம், துவாத சாந்தத் தானம் என்பவைகளை இணைத்து பிரம்மபுர மூலத்தலம் ஒருவாறு விளக்கப்பட்டது. பிரம்மபுரத்தை மணிபூரகம் முதலான ஏனைய ஆதார கமலங்களோடும் பொருத்திக் காண இவ்விளக்கம் உதவும்.

# 10

## பிரம்மபுரமும் சதாசிவரூபமும்

பரம வியோமம் என்றும் பராகாசம் என்றும் கூறப்படும் பிந்துவினின்று வெளிப்படும் தத்துவங்களுள் மூன்றாவது தத்துவம் சாதாக்கிய தத்துவம் எனப்படும். திருக்கோவில்களில் கருவறையில் காணப்படும் சிவ லிங்கம் இந்தத் தத்துவ நிலைக்கு உரியது. வழிபடும் பொழுது 'இது லிங்கம்' என்ற பாவனையை விலக்கி விட்டு தேஜோமயமான ஒரு வடிவத்தைத் தியானித்துக் கொள்ள வேண்டும் என்பது ஆகமவிதி. இவ்வாறு தியானிக்கப்படும் வடிவமே சதாசிவ வடிவம் என்றும் தத்துவாதீத நடராஜவடிவம் என்றும் மகுடாகமம் கூறுகிறது.

வெளிப்படா வடிவத்துடன் மிகவும் நுண்ணிய நிலையில் இருந்த சிவபரம்பொருள், மூல வடிவமாக, மூல பிம்பமாக, நடராஜ வடிவமாகவும், சதாசிவ வடிவமாகவும் வெளிப்படுகிறது. வெளிப்பட்ட வடிவத்தைத்தான் 'பஞ்சமந்திர தனு' என்று ஆகமம்

கூறும். இந்த வடிவம் சக்தி மயமான ஐந்து மந்திரங்களால் கோலப் பெற்றுள்ளது. சக்திமயமான ஆறு மந்திரங்களால் இந்த வடிவத்தின் இதயம், கண்கள், சிரசு முதலான அங்கங்கள் அமைந்துள்ளன. எனவே சதாசிவ ரூபம் அல்லது நடராஜ வடிவம் என்பது சக்தி மயமான பதினொரு மந்திரங்களால் கோலம் கொண்டு அமைவது என விளங்கிக் கொள்ள வேண்டும்.

முக்கிய வடிவமாக உருப்பெற்றிருக்கும் சக்தி மயமான ஐந்து மந்திரங்களும் பஞ்சப்பிரம்ம மந்திரங்கள் எனப்படும்; இதயம், நேத்திரம் முதலான அங்கங்களாக உருப்பெற்றிருக்கும் சக்தி மயமான ஆறு மந்திரங்களும் ஷடங்க மந்திரங்கள் எனப்படும்.

ஈசான மூர்த்னம், தத்புருஷ வக்திரம், அகோர ஹிருதயம், வாமதேவ குஹ்யம், சத்யோஜாத மூர்த்தம் – இவ்வைந்தும் பஞ்ச பிரம்ம மந்திரங்களாகும்.

ஹிருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அத்திரம் இந்த ஆறும் அங்க மந்திரங்களாகும்.

சதாசிவப் பெருமானுக்கு –

ஈசான மூர்த்னம் என்பது சிரோ பாகமாக (சிரஸாக) விளங்கும்; ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் எனும் ஐந்து சிரங்களாக வெளிப்பட்டிருக்கும்.

தத்புருஷ வக்திரம் என்பது ஐந்து முகங்களாக வெளிப்பட்டிருக்கும்.

அகோர ஹிருதயம் என்பது இதயம், கழுத்து, தோள்கள், நாபி, வயிறு, பின்புறப்பகுதி, மார்பு என வடிவு பெற்றிருக்கும்.

வாமதேவ குஹ்யம் என்பது குய்யம், குறி, தொடைகள், முழங்கால்கள், கணுக்கால்கள், வலது குதம், இடது குதம், இடுப்பு, வலப்பக்கம், இடப்பக்கம் என வடிவு பெற்றிருக்கும்.

சத்யோஜாத மூர்த்தம் என்பது பாதங்கள், உள்ளங்கைகள், மூக்கு, சிரசு, வலக்கை, இடக்கை என வடிவு பெற்றிருக்கும்.

அங்க மந்திரங்களுள் ஹிருதய மந்திரம் ஹிருதயம் என்னும் உள் அங்கமாகவும் சிரோமந்திரம் சிரசு என்பதன் கரண சக்தியாகவும் சிகை மந்திரம் உச்சித் தானத்தின் கரண சக்தியாகவும் கவச மந்திரம் கழுத்து, தோள் ஆகியவற்றைச் சூழ்ந்துள்ள கரண சக்தியாகவும், நேத்திர மந்திரம் திருக்கண்களாகவும், அஸ்திர மந்திரம் வடிவத்தைச் சுற்றிலும் உள்ள துவாதசாந்த வெளியாக வும் விளங்கும்.

உண்மையில், சதாசிவம் வடிவம் என்பது ஆற்றல் மயமான வடிவம். இந்த வடிவத்தை தலை, முகம், மார்பு என வெவ்வேறு அங்கங்களாகக் காண்பது ஒருவகை. எந்த ஆற்றல் அல்லது எந்தக் குணம் தலை என வடிவு கொண்டுள்ளது? எந்த ஆற்றல் அல்லது எந்தக் குணம் முகமாகப் பொருந்தியுள்ளது? என இவ்வாறு ஆற்றல் மயமாக, குண மயமாகக் காண்பது மற்றொரு வகை.

ஆற்றல் மயமாகவும் குணமயமாகவும் வடிவத்தை உணர்வதுதான் சிவயோக விஞ்ஞானத்தின் உயரிய படிமுறையாகும். சதாசிவ வடிவத்தை அல்லது நடராஜ வடிவத்தை இவ்வாறு ஆற்றல் மயமாகவும் குண மயமாகவும் உணரும் முறை இனி விளக்கப்படுகிறது.

அனைத்திற்கும் அருள்புரியும் சக்தி, அனைத்து நெறிகளுக்கும் மேலாக விளங்கும் உயர்ச்சி, ஓர் உடலுக்குத் தலை போன்று உயர்நிலையில் விளங்கும் இயல்பு, வெளிப்படும் அத்தனைக்கும் பரம எல்லை யாக விளங்கும் ஆற்றல் - இவற்றைப் புலப்படுத்துவது ஈசான மந்திரம். எனவே இது சிரோபாகமாக விளங்குகிறது.

தேவ சரீரம், மானுட சரீரம் என அந்த அந்த உடல்தோறும் நிலைகொண்டு (அதிஷ்டாதாவாக) விளங்குதல், ஞான உணர்வைத் தோற்றுவித்து, துன்பம், அச்சம் முதலானவற்றிலிருந்து விடுவித்துக் காக்கும் ஆற்றல், அனைத்து உலகங்களிலும் நாத மயமாக நிறைந்து வியாபித்திருத்தல் - இவற்றைப் புலப் படுத்துவது தத்புருஷ வக்திரம் எனும் மந்திரம். இந்த இயல்புகளை வெளிப்படுத்தும் முக மண்டலங்களாக, தத்புருஷ வக்திரம் வெளிப்பட்டுள்ளது.

ஞான மயமாகவும், சாந்த வடிவாகவும் விளங்குவது இதயம். ஆணவம் முதலான பாசங்கள் கோர மயமானவை. கோரமாக உள்ள அனைத்திற்கும் எதிரிடையாக இருந்து அவற்றை விலக்குதல் எதுவோ அது அகோரம். இணக்க நெறிக்கு (harmonious state)

மாறுபாடாக உள்ள அனைத்தையும் விலக்குவது அகோரம். எனவே இணக்கத்தை, இசைவை ஏற்படுத்து வதாக உள்ள சிவஞானம் (போதம்) இதயமாக வெளிப்பட்டுள்ளது. அகோர ஹ்ருதயம் என்னும் மந்திரத்தில் அகோரம், இணக்கத்தையும் இசைவையும் ஏற்படுத்துவது என்றும் ஹிருதயம் ஞானம் என்றும் பொருள்படும்.

வெளிப்படாமல் மறைந்து நுட்பநிலையில் இருப்பது குஹ்யம் எனப்படும். தன்னை மறைத்துக் கொண்டு, குஹ்யமாக நிறுத்திக் கொண்டு ஆன்மாக் களைக் கன்மநிலைக்கு ஏற்றபடி அறம், பொருள், இன்பம் ஆகியவற்றை அனுபவிக்குமாறு செய்யும் இறை ஆற்றல் வாமதேவ குஹ்யம் எனப்படும்.

வாமம் - வினைப்பயனாக வரும் அறம், பொருள், இன்பம்

தேவம் - தேஜோமயம், ஒளிமயம்

குஹ்யம் - வெளிப்பட்டு விளங்காமல் நுட்பநிலையில் விளங்குவது.

ஞானமயமாகவும் செயல்மயமாகவும், ரகசியமாகவும், சூக்குமமாகவும் இருந்து கொண்டு பிரபஞ்சம் முதலானவற்றுக்குத் தோற்றுவாய்த் தானமாக விளங்கும் இயல்பே வாமதேவ குஹ்யம் என்பது.

"இப்படி ஆகவேண்டும்" எனும் எண்ணம் (ஸங்கல்பம்) ஒன்றாலேயே அந்த அந்த ஆன்மாவுக்

கேற்ற உடலை உடனே தோற்றுவிக்கும் ஆற்றல், யோகியர்க்கு வேண்டிய மந்திர வடிவங்களை நினைத்த உடனேயே படைத்தளிக்கும் ஆற்றல், இந்தச் செயல்களில் உள்ள வேகம் - இவற்றைப் புலப்படுத்துவ தாக உள்ளது ஸத்யோஜாத மூர்த்தம் எனும் மந்திரம். (sadya = உடனேயே).

இதுவரை பஞ்ச பிரம்ம மந்திரங்களின் குணமயம் ஆற்றல் மயம் ஆகிய இரண்டும் விளக்கப்பட்டன. இனி ஆறு அங்க மந்திரங்களைப் பற்றிய விளக்கம்:

நிலையாக, என்றும் அழியாததாக விளங்கும் ஆற்றலும், உள்பொருள்கள் அனைத்தையும் ஊடுருவி அவற்றின் மயமாக விளங்கும் ஆற்றலும் 'ஸத்பாவம்' எனப்படும். இத்தகைய ஸத்பாவம் என்பதே சதாசிவ வடிவத்தின் ஹிருதயமாகச் செயல்படுகிறது.

அனைத்திற்கும், அனைத்து விதங்களாலும் மேலானதாக, உன்னதமாக விளங்கும் தன்மை என்பது 'சிரசு' எனும் 'மந்திர வடிவம்' தாங்கிச் செயல்படுகிறது.

மற்றவற்றால் அல்லது பிறிதொன்றால் அடக்கப் படாதிருக்கும் ஆற்றல் (அபராதீனம்), அனைத்தையும் தனது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் ஆற்றல் ஆகிய ஆற்றல் வடிவாக சிகை என்னும் மந்திரம் விளங்கிச் செயல்படுகிறது.

தன்னைத் தானே பரிபாலித்துக் கொள்வதாகவும், தோன்றிய அனைத்தையும் நன்கு பரிபாலிப்பதில் ஆற்றல் உடையதாகவும் உள்ள பேரொளியானது

கவசம் என்னும் மந்திர வடிவம் தாங்கிச் செயல் படுகிறது.

அனைத்தையும் **ஏககாலத்தில்** அறியும் ஆற்றலே முற்றறிவு எனப்படும் ஸர்வக்ஞத்துவம் என்பது. ஸர்வக்ஞத்துவத்துக்கு மூல காரணமாக விளங்கும் ஆற்றல் எதுவோ அது நேத்திரம் (கண்) எனும் மந்திர வடிவம் தாங்கிச் செயல்படுகிறது.

யாவராலும் எந்தக் காலத்திலும் தகைக்கப் படாமலும் வெற்றி கொள்ளப்படாமலும் உள்ள பிரதாபம் எனப்படும் வீரிய ஆற்றல் அத்திரம் எனும் மந்திர வடிவம் ஏற்றுச் செயல்படுகிறது.

இப்பொழுது மந்திரங்கள் என்பதை ஒரு கணம் மறந்து 'அனைத்திற்கும் அருள்புரியும் சக்தி' என ஈசான மந்திரத்துக்குக் கூறப்பட்ட'' ஆற்றல் தொடங்கி, பிரதாபம் என அத்திர மந்திரத்துக்குக் கூறப்பட்ட ஆற்றல் வரை உரை அனைத்து ஆற்றல்களையும் குணங்களையும் ஒரு சேர ஒரே வடிவமாகத் தியானித்துப் பாருங்கள். இவ்வாறு ஆற்றல் மயமாக விளங்கும் திருமேனிக்கு ஞானத் திருமேனி என்று பெயர்.

"ஞானத் திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார்மேல்
ஊனத்திரளை நீக்கும் அதுவும் உண்மைப் பொருள் போலும்"

என வரும் திருஞானசம்பந்தர் வாக்கு, மேற்கூறப்பட்ட ஞானத்திருமேனியின் சொரூபத்தைப் புலப்படுத்து வதே.

"அறிவும் அறியாமையும் கடந்த அறிவுதிருமேனி"

என அருணகிரிநாதரும் குறிப்பார்.

"சகல வேதனா தீத சகல வாசகா தீத
சகல மாக்ரியா தீத சிவரூப
சகல சாதகா தீத சகல வாசனா தீத
தனுவை நாடி மாபூசை புரிவேனோ"

என்று வேறொரு திருப்புகழிலும் அருணகிரிப் பெருமான், ஆற்றலும் குணமும் இணைந்த ஞான மயமான வடிவத்தை விளக்குகின்றார்.

பஞ்ச பிரம்ம மந்திரங்கள், ஷடங்க மந்திரங்கள் ஆகிய மந்திரங்களைப் பற்றி இதுவரை கூறப்பட்ட நுட்ப விளக்கங்கள், பௌஷ்கராகமப் பதிபடலம், மிருகேந்திராகம பதிலக்ஷணப்படலம், நிசுவாச காரிகை, காமிக ஆகம அர்ச்சனாவிதிபடலம் முதலானவற்றில் கூறப்பட்டுள்ள கருத்துக்களின் சுருக்கமாக அமைபவை.

நிசுவாச காரிகையில் ஷடங்க மந்திரங்களைப் பற்றி மேலும் ஒரு நுட்பக்கருத்து கூறப்பட்டுள்ளது: "ஸர்வக்ஞத்துவம், பரித்ருப்தம், அநாதிபோதம், ஸ்வதந்திரம், அலுப்த சக்தி, அனந்த சக்தி இவை ஆறும் சிவ பரம்பொருளுக்குரிய ஆறு குணங்கள். இந்த ஆறு குணங்களே ஹிருதயம் முதலான ஆறு மந்திர மயமாக விளங்குகின்றன." இந்த ஆறு குணங்களோடும் நிரா மயத்துவ விசுத்த தேகம் என மேலும் இரண்டு குணங்களைச் சேர்த்து இறைவனுக்குரிய குணங்கள் எட்டு என்று ஸர்வக்ஞானோத்தர ஆகம வித்யாபாதம் கூறும். நிராமயத்துவம் என்பது அனாதி போதம்

என்பதிலும் விசுத்த தேகம் என்பது அலுப்த சக்தி என்பதிலும் அடங்கும். எனவே அறுகுணன் என்றும் எண்குணன் என்றும் கூறுவதில் முரண்பாடு ஏதும் கிடையாது.

தர்மங்களை உடையது தருமி; அங்கங்களை உடையது அங்கி என்பது போன்று மேற்கூறப்பட்ட பதினோரு மந்திரங்களையும், பன்னிரண்டாவதாகத் திருவைந்தெழுத்தையும் அங்கங்களாக, திருமேனியாகக் கொண்டிருக்கின்ற மூல வடிவம் என அங்கியாகத் திகழும் வடிவம் சதாசிவ வடிவம் அல்லது நடராஜ வடிவம். “நகரமிகு பாதமாகி” எனத் தொடங்கும் திருப்புகழ் நடராஜ வடிவத்தில் திருவைந்தெழுத்து எவ்வாறு பொருந்தியுள்ளது என்பதை விளக்கும்.

பஞ்ச பிரம்ம மந்திரங்கள் (5) ஷடங்க மந்திரங்கள் (6), திருவைந்தெழுத்து (1) ஆகப் பன்னிரண்டும் பிரம்மபுரம் முதலான பன்னிரண்டு திருப்பெயர்களாக விளங்குகின்றன. மந்திர மயமான வடிவம் தாங்கும் நடராஜ வடிவத்தில் அல்லது சதாசிவ வடிவத்தில் மூலத்தலமான பிரம்மபுரம் விளங்குகிறது.

மந்திரம் ஜபிப்பது போன்று பன்னிரண்டு பெயர் களையும் மாற்றி மாற்றித் திருஞானசம்பந்தர் பாடுவதன் நோக்கம், சதாசிவ வடிவ விளக்கத்தால் புலனாகும். சதாசிவ ரூபம், தீக்ஷை ஆகிய இரண்டின் பின்னணியில் வழிமொழித் திருவிராகம், சக்கரமாற்று முதலான திருப்பதிகங்களைப் பயின்றும் சிந்தித்தும் பயன் பெறலாம்.

11

# பிரம்மபுரமும் திருக்கைலையும்

திருஞானசம்பந்தப் பெருமான் பிரம்மபுரத் தலத்தில் தங்கியிருந்த பொழுது சக்கிரமாற்று, மாலைமாற்று, இயமகம், ஏகபாதம் முதலான சித்திர-விசித்திரப் பதிகங்களைப் பாடியருளினார் ஏன்றும் அவை மூல இலக்கியங்கள் என்றும் சேக்கிழார் பெருமான் கூறுகிறார். இறைவன் திருவருள் உள்ளிருந்து உணர்த்திய வண்ணம் சேக்கிழார் பெருமான் 'மூல இலக்கியங்கள்' எனச் சிறப்பித்துக் கூறினமையை நினைக்கும்போது உள்ளம் பெரிதும் வியக்கின்றது. மூல இலக்கியம் என்னும் உயர்சிறப்புப் பெயரின் கீழ் அடங்கியுள்ள ஒவ்வொரு சித்திரக் கவித் திருப்பதிகத்தி லும் சைவாகம யோகபாத-ஞானபாதக் கருத்துக்களும் சிற்பத் தொடர்பான பிரபஞ்ச விஞ்ஞானக் கருத்துக்களும் இரத்தினக் கற்களின் குவியல்களாகக் காட்சியளிக்கின்றன. மூல இலக்கியத் திருப்பதிகங்

களுள் திருவெழு கூற்றிருக்கை என்பதன் உட்கிடக்கை மட்டும் இப்பகுதியில் ஒரு சிறிது விளக்கப்படுகிறது.

பிரம்மபுரம் பிரம்மரந்திரத் தலமாகக் கருதப்படும் நிலையில் பிரம்மபுரத்துக்கும் திருக்கைலைக்கும் தொடர்பு ஏற்படுகிறது. திருக்கைலைச் சிகரமொன்றை இறைவன் பிரம்மபுரத்தில் தோற்றுவித்து அங்கே தானும் அம்மையுமாகக் காட்சி அளித்தான் எனத் தலபுராணம் கூறுகிறது. பிரம்மபுரத் திருக்கோயிலின் விமானமும் திருக்கைலை வடிவத்தில் சிற்பநெறிப்படி அமைக்கப்பட்டுள்ளதாக கூறப்படுகிறது. தல நிகழ்ச்சி, விமான அமைப்பு ஆகிய இரண்டின் அடிப்படையிலும் கூட பிரம்மபுரத்-திருக்கைலை இணைப்பை உணர்ந்து கொள்ளலாம்.

ஒவ்வொரு தலத்தையும் பூமியோடு தொடர்புடைய நிலையில் பிராகிருத மயமாகவும் (உலகத் தொடர்புடையதாகவும்), பூமித் தொடர்பில்லாத அப்பிராகிருதமயமாகவும் (உலகத் தொடர்பு நீங்கியதாகவும்), யோக சாதகர் உணர வேண்டும் என முன்னர்க் கூறப்பட்டது. பிராகிருத மயமாக உணர்வது தூலநிலை. அப்பிராகிருத மயமாக உணர்வது சூக்கும நிலை. பிராகிருத நிலை கால எல்லைக்கு உட்பட்டது. அப்பிராகிருத நிலை கால எல்லைக்கு அப்பாற்பட்டது; காலாதீதம்.

அப்பிராகிருத நிலையில் பிரம்மபுரம், திருக் கைலை ஆகிய இரண்டுமே நன்கு விளக்கப்பட்டுள்ளன; உணரப்பட்டுள்ளன.

முதலில் ஞானமயமான அப்பிராகிருத நிலையில் உள்ள திருக்கைலை எப்படிக் காட்சி அளிக்கிறது எனக் காண்போம்.

சுத்த கைலாஸம் என்றும் ஞான கைலாஸம் என்றும் ஆகமங்களில் கூறப்பட்டுள்ள மஹாகைலாஸம் எட்டு அடுக்குகளை உடையது. மஹா கைலாஸத்தில் உச்சிநிலையில் நவரத்தின மயமான சிகரம் ஒன்று உள்ளது. சிவபெருமான் அம்பிகையுடன் திருவோலக்கம் கொண்டுள்ள இடம் இந்தச் சிகரம். பெருமானைச் சேவித்த வண்ணம் சாரூப நிலையிலும் இதற்கு மேற்பட்ட நிலையிலும் உள்ள முனிவர்கள், தேவர்கள், சித்தர்கள் இங்கே திரண்டிருப்பார்கள். கீழே அடுத்த நிலையில் சூரிய காந்த மயமாக விளங்கும் பதினோரு சிகரங்கள் உண்டு. இங்கே பஞ்சப் பிரம்ம மந்திரங்கள் ஷடங்க மந்திரங்கள் ஆகிய பதினொன்றும் தத்தமக்குரிய வடிவம் கொண்டு விளங்கிக் கொண்டிருக்கும். கீழே, அடுத்த நிலையில் சந்திர காந்தக் கல் மயமான 101 சிகரங்கள் இருக்கும். அஷ்ட வித்யேசுவரர், அஷ்டமூர்த்திகள், நவசக்திகள், இருபத்தைந்து மஹேச மூர்த்தங்கள், மாத்ருகா மூர்த்தங்கள் – இச்சிகரங்களில் இடம் பெற்றிருப்பர்.

இந்த நிலைக்குக் கீழே அக்னிகாந்தக் கல் மயமான 1001 சிகரங்கள் உண்டு. இவை 108 வடிவங்கள், ஏழு கோடி மந்திரங்கள் முதலானவற்றிற்கு இருப்பிடம். இதற்குக் கீழே ஸ்படிக மயமான 10001 சிகரங்களில் கணபதி, முருகன், நந்திகணங்கள், பிருங்கி, மஹாகாளர்,

ரிஷபேசுவரர், காமதேனு, துர்கை, சண்டேசர், ஐந்து அஸ்திர தேவர்கள் முதலானோர் வாசம் செய்வர். இந்த அடுக்கிற்குக் கீழே ரத்தின காந்தி மயமான இலட்சத்து ஒன்று சிகரங்கள் காட்சி அளிக்கும். இவற்றில், மேற்குத் திக்கில் சிவசாரூபம் வேண்டி விஷ்ணுக்களும், வடக்கில் நான்முகர்களும், கிழக்கில் இந்திரன் முதலான லோக பாலகர்களும் வாசம் செய்வர். தெற்கில், முனிகணங் களுக்கும் ரிஷிகணங்களுக்கும் சிவஞான உபதேசம் செய்து கொண்டு தக்ஷிணாமூர்த்திகள் விளங்குவர். இந்த அடுக்கிற்கும் கீழே பத்து இலட்சத்து ஒன்று சிகரங்கள், தங்க ஒளி மயமாகக் காட்சி அளிக்கும். இச் சிகரங்களில் பூத சேனாபதியர், கருடர்கள், கந்தர் வர்கள், வித்யாதரர்கள், ஸித்தர்கள், சிந்தாமணிகள், கற்பகத் தருக்கள், சங்கநிதி பதுமநிதி முதலான நவநிதிகள், சாமீப்ய முக்தி பெற்றோர் - இவர்கள் வாசம் செய்து கொண்டிருப்பர். அடுத்த கீழ்நிலையில் வெள்ளி மயமான கோடியே ஒன்று (1,00,00,001) சிகரங்கள் காட்சியளிக்கும். இவற்றில் பிரணவ ரூபதாரிகள், வெள்ளை யானைகள், விமானங்கள், ரதங்கள், ஒருமுகம் உடையோர், இருமுகம் உடையோர், எனப் பல்வேறு விகற்பமான வடிவுடையோர், முனி கணங்கள், சாலோக்கியம் எனும் முத்திநிலை பெற்றோர் இவர்கள் வாசம் செய்வர்.

உச்சிச்சிகரம் முதல், கீழே கோடியே ஒரு சிகர நிலை வரை, மஹாகைலாஸத்தில் எட்டு நிலைகள். இத்தகைய மஹாகைலாஸம் ஞான மயமானது; அப்பிராகிருதமானது.

யுக இறுதிகளில் பிரளயம் நேரும் போதெல்லாம் மஹாகைலாஸம் மேன்மேல் உயர்ந்து அழியாமல் நிலைபெற்றிருக்கும். (ஊழிகள் தோன்றும் பொழுதெல் லாம் உயரும் பிரம்மபுரம் போல்.) ஒன்றுக்கொன்று ஜன்மப் பகையாக உள்ள விலங்கினங்களோ ஏனைய உயிரினங்களோ, இந்த மஹா கைலாஸத்தை அணுகிய அளவில் பகைமை நீங்கி அன்பு கொள்ளும். பிறிதொன்றால் தோற்றுவிக்கப்படாமல் தாமாகவே வெளிப்படும் ஒளிக் கூட்டங்களின் திரட்சியை உடையது மஹாகைலாஸம். இவ்வாறு இதன் பெருமை ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது.

எட்டுநிலைகளை உடைய மஹாகைலாஸ அமைப்பைப் புலப்படுத்தும் முறையில்தான் திருக்கோயில்களின் கோபுரங்களும் விமானங்களும் நிர்மாணிக்கப்படு கின்றன.

எட்டு நிலைகளை உடைய திருக்கைலைக் கட்டு மானத்தை உணர்த்தும் வகையில் திருவெழுகூற்றி ருக்கையைப் பாடுகின்றார் திருஞான சம்பந்தர்.

எண்ணலங்கார முறையில் பாடப்படும் திருவெழு கூற்றிருக்கையை ஒன்று; ஒன்று இரண்டு ஒன்று; ஒன்று, இரண்டு, மூன்று இரண்டு ஒன்று என இவ்வாறு எண் இசைவு பொருந்தக் கருத்துக்களை இயல்பாகச் செறித்து அமைக்க வேண்டும். இவ்வாறு அமைக்கும் முறையில்

*1, 2, 3, 4, 5, 6, 7, 6, 5, 4, 3, 2, 1*

என்னும் நிலை வந்ததும் திருவெழுகூற்றிருக்கை நிறைவு செய்யப்படும். ஆனால் திருஞான சம்பந்தப் பெருமான் மேற்குறிப்பிட்ட முறையில் எண் அமைவு வந்ததும், அதோடு நின்று விடாமல், நிறைவு செய்து விடாமல், மீண்டும் ஒரு முறை,

*1, 2, 3, 4, 5, 6, 7, 6, 5, 4, 3, 2, 1*

என்னும் எண் இசைவு அமையுமாறு பாடியருள்கிறார். இவ்வாறு பாடி இருக்காவிட்டால் திருவெழுகூற்றி ருக்கையின் அமைப்பு, ஏழுநிலைகளோடு நின்று போயிருக்கும்.

திருஞானசம்பந்தர் மஹாகைலாஸ பாவனையில் திருவெழுகூற்றிருக்கையைப் பாடுவதால், மஹா கைலாஸத்தின் எட்டாவது கீழ்நிலை பொருந்தும் வண்ணம் மீண்டும் ஒருமுறை ஏழு வரை உயர்த்தி ஒன்று வரை இறக்குகின்றார்.

மேலும் ஒரு விளக்கம்,

ஒருருவாயினை என ஒன்று எனும் எண்ணில் தொடங்கியதும் "மானாங்காரத்து ஈரியல்பாய் ஒரு" என 2, 1 எனும் எண் அமைவு வருகிறது. எனவே மேலோட்டமாகக் காணும்பொழுது, திருஞான சம்பந்தர் பாடும் திருவெழுகூற்றிருக்கை

*1 2 1*

எனும் எண் அமைவில் தொடங்குவதுபோல் தோன்றும்.

உண்மைப் பொருள் அதுவன்று.

ஒருருவாயினை என்பதில் 'ஒன்று' வருகிறது. அடுத்துதான் 'மானாங்காரத்து ஈரியல்பாய் ஒரு' என்பதில் 1, 2, 1 எனும் எண் அமைவு வருகிறது. மான் எனும் சொல், ஒன்று என்பதற்குப் பரியாயப் பெயராக (மாற்று வழக்காக) ஆகமங்களில் ஆளப்பட்டுள்ளது. எனவே 'மானாங்காரம்' என்பது ஒன்றாக இருக்கும் வடிவம் எனும் பொருளைத் தரும். மானாங்காரத்து ஈரியல்பு என்பது உமையொரு பாக வடிவம் எனப்படும் அர்த்த நாரீசுவர வடிவம். எனவே திருவெழு கூற்றிருக்கையில் எண் அமைவானது எட்டு நிலைகளில் அமைந்துள்ளது.

1 – 1

1 2 1 – 2

1 2 3 2 1 – 3

1 2 3 4 3 2 1 – 4

1 2 3 4 5 4 3 2 1 – 5

1 2 3 4 5 6 5 4 3 2 1 – 6

1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1 – 7

1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1 – 8

இத்தகைய அமைப்பு மஹாகைலாஸத்துச் சிகரங்களின் அமைப்பை ஒத்து விளங்குகிறது. ஒன்று என்பதன் பரியாயப் பெயராகப் பரம் என்ற சொல்லையும் திருஞானசம்பந்தர் ஆண்டுள்ளார்.

*எண் நிலைகளை உடைய மஹாகைலாஸ அமைப்பு, திருவெழுகூற்றிருக்கையில் எவ்வாறு எண் அமைவு பெற்றுள்ளது என்பது இனி விளக்கப் படுகிறது.*

| திருவெழுகூற்றிருக்கை | எண் அமைவு | மஹா கைலாஸ அடுக்கு |
|---|---|---|
| ஒருருவாயினை<br>மானாங்காரத்து ஈரியல்பாய் ஒரு<br>விண்முதல் பூதலம் | 1<br>1 2 1 | 1<br>2 |
| ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்<br>படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகள் ஆயினை<br>இருவரோ டொருவன் ஆகிநின்றனை | 1 2 3 2 1 | 3 |
| ஓரால்நீழல் ஒண்கழல்இரண்டும்<br>முப்பொழுதேத்திய நால்வர்க் கொளிநெறி<br>காட்டினை நாட்டம்மூன் றாகக் கோட்டினை<br>இருநதி அரவமோ டொருமதி சூடினை | 1 2 3 4 3 2 1 | 4 |
| ஒருதாள் ஈரயில் மூவிலைச் சூலம்<br>நாற்கால் மான்மறி ஐந்தலை அரவம்<br>ஏந்தினை காய்ந்த நால்வாய் மும்மதத்து<br>இருகோட் டொருகரி ஈடழித் துரித்தனை | 1 2 3 4 5 4 3 2 1 | 5 |
| ஒருதனு இருகால் வளைய வாங்கி<br>முப்புரத் தோடு நானிலம் அஞ்சக்<br>கொன்று தலத்துற அவுணரை அறுத்தனை<br>ஐம்புலன் நாலாம் அந்தக் கரணம்<br>முக்குணம் இருவளி ஒருங்கிய வானோர் | 1 2 3 4 5 6 5 4 3 2 1 | 6 |

| | | |
|---|---|---|
| ஏத்த நின்றனை ஒருங்கிய மனத்தோடு<br>இருபிறப் போர்ந்து முப்பொழுது<br>குறைமுடித்து<br>நான்மறை ஓதி ஐவகை வேள்வி<br>அமைத்து ஆறங்கம் முதலெழுத்தோதி<br>வரன்முறை பயின்றெழு<br>வான்றனை வளர்க்கும்<br>பிரமபுரம் பேணினை<br>அறுபதம் முரலும் வேணுபுரம் விரும்பினை<br>இகலியம் ஐந்துணர் புகலி அமர்ந்தனை<br>பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு<br>விளங்கினை<br>பாணி மூவுலகும் புதையமேல் மிதந்த<br>தோணிபுரத் துறைந்தனை<br>தொலையா இருநிதி<br>வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை<br>பரபுரம் என்றுணர் சிரபுரத் துறைந்தனை | 1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1 | 7 |
| ஒருமலை எடுத்த இருதிறல் அரக்கன்<br>விறல்கெடுத் தருளினை புறவம்<br>புரிந்தனை<br>முந்நீர்த் துயின்றோன் நான்முகன்<br>அறியாப்<br>பண்பொடு நின்றனை சண்பை<br>அமர்ந்தனை<br>ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரரும்<br>ஊழியும் உணராக் காழி அமர்ந்தனை<br>எச்சன் ஏழ்இசையோன்<br>கொச்சையை மெச்சினை<br>ஆறுபதமும் ஐந்தமர் கல்வியும்<br>மறைமுதல் நான்கும்<br>மூன்று காலமும் தோன்ற நின்றனை<br>இருமையின் ஒருமையும்<br>ஒருமையின் பெருமையும்<br>மறுவிலா மறையோர்<br>கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை<br>கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்<br>அனைய தன்மையை ஆதலின் நின்னை<br>நினைய வல்லவர் இல்லைநீள் நிலத்தே | 1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1 | 8 |

*(இத்திருப்பாடலில்* **பரபுரம்** *என்பதில் பரம் எனும் சொல் ஒன்று எனும் எண்ணைக் குறிக்கும்.* **ஆறுபதம்** *– அறுநெறி எனப்படும் ஷடத்துவா:* **ஐந்தமர் கல்வி** *– பிரபஞ்ச விஞ்ஞானம். பஞ்சம் எனில் ஐந்து ஐந்தாக விரிவடைதல் என்று பொருள். பிரம்மம் ஐந்து, கலை ஐந்து, மூல எழுத்து ஐந்து, பூதம் ஐந்து என ஐந்தியல் நெறியில்* (pentadic scheme) *பிரபஞ்சம் தோன்றி, ஐந்தியல் நெறியில்* (pentadic order) *அது இயங்கிக் கொண்டிருக் கிறது. இதனை நுணுக்கமாக விளக்குவன ஆகமமும் வாஸ்து சில்பமுமே.* **இருமையின் ஒருமை** *– அண்ட பிண்ட சமன்பாடு)*

*மஹாகைலாஸத்தின் ஏழாவது நிலையிலும் எட்டாவது நிலையிலும் பன்னிரண்டு திருப்பெயர் களை இணைத்துக்காட்டி, ஒன்று முதல் ஆறு வரை உள்ள அடுக்குகளில் மூலத்தலமாகிய பிரம்மபுரத்தை சூக்கும நிலையில் இயைபுபடுத்தி, இத்திருப்பாடல் மூலம் பிரம்மபுர – ஃகைலை இணக்கத்தையும் சமன் பாட்டையும் உணர்த்துகின்றார் திருஞான சம்பந்தப் பெருமான்.*

*பிரம்மபுர – மஹாகைலாஸ சமன்பாடு வேறொரு நெறியிலும் உறுதி செய்யப்படுகிறது. மூலத்தலமாகிய பிரம்மபுரத்துக்குப் பன்னிரண்டு திருப்பெயர்கள் வாய்த்திருப்பதுபோல் மஹாகைலாஸ மலைக்கும் பன்னிரண்டு திருப்பெயர்கள் வழங்கப்படுகின்றன. சைவாகமச் சார்பான 'ஸர்வாத்ம யோக விமரிசனம்'*

என்னும் நூலில் மஹாகைலாஸத்தின் பன்னிரண்டு பெயர்கள் வரிசைப்படுத்திக் கூறப்படுகின்றன.

*"ப்ரதமோ ராஜாதாத்ரீஸ்து த்விதீயம் பூர்ணநாமகம் |*
*ப்ராஸாதாத்ரீஸ் த்ருதீயம்வை மாஹேந்த்ரம் சதுர்த்தம் ஸ்ம்ருதம் ||*
*தத: கபாடாக்ய பௌரம் நாதஸ்ரோதஸ்து ஷஷ்டமம் |*
*ஸப்தம் ரூபோத்பவம் ஞாதம் மேருச்ருங்ககிரி: பரம் ||*
*ஷாட்குண்யம் நவமம் ப்ரோக்தம் திசாஸங்க்யாது கர்பகம் |*
*ஏகாதசம் பரபிந்துர் த்வாதசம் வ்யோம ஸம்க்ஞகம் ||*
*இத்யேதான் மந்த்ர நாமானி மஹாகைலாஸ ஸித்திதான்" ||*

"முதற் பெயர் ரஜதகிரி: இரண்டாவது பெயர் பூர்ணகிரி; மூன்றாவது பெயர் ப்ராஸாதகிரி; நான்காவது பெயர் மஹேந்திரகிரி; ஐந்தாவது பெயர் கபாடபுரம்; ஆறாவது பெயர் நாதஸ்ரோதம்; ஏழாவது பெயர் ரூபோத்பவ கிரி; எட்டாவது பெயர் மேருசிருங்க கிரி; ஒன்பதாவது பெயர் ஷாட்குண்யகிரி; பத்தாவது பெயர் கர்ப்பகிரி; பதினொன்றாவது பெயர் பரபிந்து கிரி; பன்னிரண்டாவது பெயர் வியோமகிரி. மந்திர மயமான இந்தப் பன்னிரண்டு திருப்பெயர்களும் மஹா கைலாஸ மலைக்கு இயல்பாகவே ஏற்பட்டுள்ளன."

இவ்வாறு மஹாகைலாஸத்தின் பன்னிரண்டு பெயர்களை வரிசைப்படுத்தி இவை குருகமலத்தின் பன்னிரண்டு இதழ்களில் அக்ஷர வடிவில் வியாபித்துள்ள பாங்கையும் நடுவண் மஹாகைலாஸ வடிவத்தில் குரு எழுந்தருளும் வைபவத்தையும்

ஸர்வாத்ம யோக விமரிசனம் எனும் நூல், முறைப்படி விளக்குகிறது.

பிரம்மபுர மஹாஸ்தலத்தில் இருந்தவண்ணம் திருஞான சம்பந்தப் பெருமான் மஹாகைலாஸ பாவனை யோகத்தில் திளைத்திருந்ததால், மஹா கைலாஸ நுட்பங்கள் பொருந்தி ஒளிரும் வண்ணம் திருவெழுகூற்றிருக்கை எனப் பெயரிய ஒளி மயமான ஒலிமாலையை அருளி இருக்கின்றார்.

அருட்கடலான சிவபெருமானிடமிருந்து அருச்சுனன் பாசுபத அஸ்திரத்தை வேண்டிப் பெற்றான்; பயன்படுத்திக் கொண்டான்.

நாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதற் காகவே, நாம் கேட்காமலேயே, அருட்கடல் நாயகன் திருஞான சம்பந்தப் பெருமான் வாயிலாக மந்திர மயமான, யோகசார மயமான தமிழ்ப் பனுவல் மாலைகளை வழங்கி இருக்கிறான். ஆனால் உரிய முறையில் அவற்றைப் பயன்படுத்தத் தவறி விட்டோம்.

இவற்றின் நுட்பங்களையும் மகத்துவத்தையும் ஆகம நூல்கள் வாயிலாகவும் தக்கார் வாயிலாகவும் நன்குணர்ந்து ஆத்ம யோகானுபவத்தை நிறைவுறப் பெற வேண்டியது தமிழ்நெறிக்குரியோரின் தலையாய கடமையாகும்.

# 12

# இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்

சிவயோக நெறிகளுள் மிக முக்கியமானதாகக் கருதப்படும் ஸர்வாத்ம யோகம் என்பது தஹராகாச யோகம், சிதாகாச யோகம், சிதம்பர யோகம் முதலான வேறு பெயர்களாலும் குறிக்கப்படும். "எனதியானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்" அதீத பாவனை இந்த உயரிய யோகத்தின் முதற்படி. ஸர்வாத்ம யோகம் எனப்படும் உத்தம யோகநெறியின் சாரத்தைப் புலப் படுத்துவதே திருவெழுகூற்றிருக்கயில் வரும் 'இருமை யின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்' எனும் ஒளித்தமிழ்த் தொடர்.

இருமைகளின் ஊடே இயக்கம் கொள்வதுதான் பிரபஞ்சம். பருமை – நுண்மை; அருவம் – உருவம்; சலம் – அசலம்; தண்மை – வெப்பம்; ஒளிநிலை – இருள் நிலை; கட்டுப்படாதநிலை – கட்டுப்பட்ட நிலை;

நிறமற்றிருத்தல் – நிறங்களோடு இருத்தல்; அறம் – மறம் என அமைந்துள்ள இருமைகளால்தான் உலக இயக்கம் நடைபெறுகிறது. இருமைநிலை நீங்கி ஒன்றுபடும் போது இயக்கமற்ற, ஆனால் துடிப்பு மய'மான இருப்பு நிலை மட்டுமே ஏற்படுகிறது.

இருமைகள் ஒருவித லய்க்கணக்கில், சீலக் கணக்கில் ஏற்படுவதால் ஒன்றுக்கு ஒன்று ஆதாரமாக, இணக்கமாக இருந்துகொண்டு செயற்படும் ஆற்றல் உருவாகிறது. இருமைகளுள் ஒன்றின் நிலை மற்றொன் றுக்கு ஆதாரமாகவும் அவசியமாகவும் உள்ளது.

நுண்மை – பருமை எனும் இருமையை நோக்குவோம். பிரபஞ்ச அமைப்பில் 'நுண்மை' எனத் தனித்த ஒருநிலையும் 'பருமை' எனத் தனித்த ஒரு நிலையுமாக நாம் எங்கும் எதிலும் காணமுடியாது. நமது உடல் பருமை; உயிர் நுண்மை; உடலமைப்பிலும் வெளிக் கருவிகள் பருமை; மனம் முதலான உட்கரணங்கள் நுண்மை. ஆதார கமலங்களை நோக்க உட்கரணங்கள் பருமை; ஆதார கமலம் நுண்மை.

எப்பொழுதும், தூல பாவனைகளுடனேயே திரிந்து கொண்டிருக்கும் உயிர் பருமை; 'உடலம் வேறு, கரணம் வேறு' என அனைத்தையும் பாவனையாலும் பயிற்சியாலும் உதறி எறிந்து விட்டுத் தனித்துத் தன்னைத்தானே கண்டு கொண்டிருக்கும் உயிர் நுண்மை.

மந்திரங்களில் கூட, தூல பாவனையோடு உச்சரிக்கப்படுகின்ற மந்திரங்கள் தூல மந்திரங்கள்

என்றும் சூக்கும பாவனையோடு உச்சரிக்கப்படுகின்ற மந்திரங்கள் சூக்கும மந்திரங்கள் என்றும் காணப்படும் இருமைநிலை உண்டு.

வியாப்பிய - வியாபக நிலை பற்றி முன்னரேயே கூறப்பட்டுள்ளது. பருமை வியாபகமாக இருந்து கொண்டு நுண்மை வியாப்பியமாக விளங்கும் நிலையும் உலகில் உண்டு. நுண்மை வியாபகமாக இருக்க, பருமை வியாப்பியமாக விளங்கும் நிலையும் உலகில் உண்டு. இந்த இருநிலைகளும் கோடிக்கணக்கான பேதங்களில் செயல்படுவதால்தான் கோடிக்கணக்கான அண்டங்கள் தோன்றுகின்றன; கோடிக் கணக்கான தேக வகைகள் தோன்றுகின்றன.

*"அணுவுள் அவனும் அவனுள் அணுவும்*
*கணுவறை நின்ற கலப்பதுணரார்*
*இணையிலி ஈசன் அவன்எங்கு மாகித்*
*தணிவற நின்றான் சராசரம் தானே"*

எனும் திருமந்திரம் வியாப்பியம் வியாபகமாக இருக்கும் நிலையையும் வியாபகம் வியாப்பியமாக மாறும் நிலையையும் புலப்படுத்துகிறது.

இவ்வாறுதான் சலத்துள் அசலம், அசலத்துள் சலம், அருவத்துள் உருவம், உருவத்துள் அருவம் என இருமைகள் வியாப்பிய-வியாபக நியாயத்தில் பிரபஞ்ச மெங்கும் காணப்படும்.

பருமையைத் தனக்குள் கருவாக அடக்கிக் கொண்டிருக்கும் நுண்மையை வஸ்து என்றும் நுண்மை யைத் தனக்குள் பிந்துவாக அடக்கிக் கொண்டிருக்கிற

பருமையை வாஸ்து என்றும் ஆகம - வாஸ்து நூல்கள் வரையறைப்படுத்திக் கூறும்.

பருமை நுண்மை எனும் இருமையையும், பருமையுள் நுண்மை, நுண்மையுள் பருமை எனும் ஒருமையையும் விளக்கிக் காட்டுவது பிரபஞ்ச விஞ்ஞானம்; விளங்கக் காண்பது யோகவிஞ்ஞானம்.

பரபிந்து எனப்படும் சூக்கும, பர - ஆகாச வெளியில் உள்ள மஹாகைலாஸம் நுண்மை; அதுவே பிரகிருதியின் தொடர்புடையதாக அமையும் போது பருமையாகிறது; பிராகிருத கைலாஸம், அண்ட கைலாஸம் எனும் பெயர் ஏற்கிறது. அதுவே ஒவ்வொருவர் உடலிலும் பிரம்மரந்திரத் தானத்தில் அமையும்போது நுண்மையாகிறது; பிண்ட கைலாஸம், அத்யாத்மிக கைலாஸம் என்னும் பெயர் ஏற்கிறது. அண்ட நிலையில் புறத்தே உள்ள அனைத்தும் பிண்ட நிலையில் அகத்தே உருக்கொண்டுள்ளன.

ஆனால் புறத்தே உள்ள ஒன்று அதே வடிவத்திலேயே அகத்தே உருக் கொண்டுள்ளது எனக் கூற முடியாது. வெளி உலகில் காணப்படும் எட்டுப் பெருமலைகள் - அஷ்ட குலாசலங்கள்- மனித உடலில் எலும்புப் பொருத்தங்களாக, எலும்பு இணைப்புகளாக அமைந்துள்ளன; புற உலகில் காணப்படும் ஆறுகள் மனித உடலில் நாடிகளாக அமைந்துள்ளன. இவ்வாறு அண்ட பிண்ட சமன்பாட்டை முழுமையாக விளக்க முற்பட்டால் அதுவே ஒரு தனி நூலாக ஆகும். விவரிக்க் இது ஏற்ற இடம் இல்லை.

பரபிந்து எனப்படும் பெருவெளிக்குரிய மஹா கைலாஸம் அண்டநிலையில் கைலைமலையாக மட்டு மன்றி, பிண்ட நிலையில் பிரம்மரந்திர மலையாக மட்டு மன்றி வேறொரு வடிவத்திலும் விளங்குகிறது. அந்த வடிவம்தான் திருக்கோயிலின் கோபுரம்; திருக் கோயிலின் விமானம்.

பிரம்மபுரம், திருவீழிமிழலை, மதுரை முதலான தலங்களில் உள்ள விமானங்கள் விண்ணிழி விமானங்கள் என்றும் அவை இந்திரன், திருமால் முதலானவர்களால் விண்ணுலகிலிருந்து கொண்டு வரப்பட்டவை என்றும் திருமுறைக் குறிப்புரை நூல்களில் கூறப்பட்டுள்ளன. 'விண்ணிழி விமானம்' என்பது வரையில் சரி. ஆனால் இந்திரன் முதலா னோரால் கொண்டு வரப்பட்டவை என்ற கருத்தை ஏற்பதற்கு இல்லை. இந்திரன் முதலானோர் வழிபட வந்திருக்கின்றார்களே தவிர, வடிவச் சிறப்புடைய விமானத்தைக் கொண்டு வரவில்லை.

அந்த அந்தக் கோயிலின் விண்ணிழி விமானம் கை தேர்ந்த சிற்பியால் அமைக்கப்பட்டதே அன்றி, வானுலகத் தெய்வத்தால் கொண்டு வரப்பட்டதல்ல. பிரதிமா ஞானம் எனப்படும் மிக உயர்ந்த பிரம்ம ஞானம் கைவரப் பெற்ற சிற்பியின் படைப்புக்கு இவ்வாறு புராணச் சாயல் கொடுப்பது ஆகம-சிற்ப விஞ்ஞானக் கோட்பாடுகளை ஆழப்புதைத்து அறவே மறைப்பதாகும். விஞ்ஞானக் கோட்பாட்டைப் புராணப்பகுதி மறைக்குமேயானால் அப்புராணப் பகுதியை ஒதுக்கித் தள்ளுவதில் ஒரு தவறும் கிடையாது.

விண்ணிழி விமானம் என்பது என்ன என்பதைப் பற்றித் தெரிந்துகொள்ளத் தொல்பொருள் ஆய்வாளர் களோ கல்வெட்டு ஆய்வாளர்களோ ஆர்வம் காட்டுவதும் இல்லை.

மஹாகைலாஸத்தின் பன்னிரண்டு திருப்பெயர் களுள் ஒன்று வியோமகிரி என்பது. வியோமம் - விண்; கிரி - மலை; விமானம். பிரபஞ்ச நுட்பங்களை விளக்கும் வகையில் மஹாகைலாஸ அமைப்பைப் பிரதிபலிக்குமாறு அமைக்கப்படுவது விண்ணிழி விமானம் என்பது சிற்ப விஞ்ஞானம் கூறும் விளக்கம். மஹாகைலாஸத்தின் எட்டு அடுக்குகள். அவற்றில் இருக்கும் கணங்கள்-இவற்றைக் கண்டம், கர்ணக் கூடு கபோதம், கிரீவம், நாஸி முதலான உறுப்புகளால் புலப்படுத்துவது விண்ணிழி விமானம். சிற்பியர்களும் யோகியர்களாக இருந்த காரணத்தால் அவர்களால் பரவெளியின் மஹாகைலாஸ அமைப்பை நன்கு உணர முடிந்தது; உணர்ந்த நுட்பங்களுக்கு உருவங்கள் கொடுத்தார்கள். இவ்வாறு அமைந்ததுதான் விண்ணிழி விமானம். விண்ணில் உணர்ந்ததை இழித்து, அதாவது உருமாற்றி, வியனுலகத்துக்குக் கொண்டு வந்து விமான வடிவத்தில் காட்டியவன் சிற்பியே தவிர இந்திரனோ, சந்திரனோ, பிரம்மனோ, திருமாலோ அல்ல.

விண்ணிழி விமானம் மஹாகைலாஸ நுட்பங் களை வெளிப்படுத்துவது போன்று, மற்றைய விமானங் களும் அந்நுட்பங்களைப் புலப்படுத்துபவையே. வெளிப் படுத்துதற்குரிய அங்கங்கள் அனைத்தையும் பூரணமாகப் பெற்றிருப்பது விண்ணிழி விமானம்;

சிற்சில அங்கங்களில் குறைந்திருப்பவை ஏனைய விமானங்கள். ஆனால் விண்ணிழி விமானங்களாக இருந்தாலும் மற்ற விமானங்களாக இருந்தாலும் அவற்றுக்குப் பொதுவாக ஆகமம் கொடுக்கும் பெயர் தூலலிங்கம் என்பது.

எங்கும் எதிலும் தூலநிலை-சூக்குமநிலை ஆகிய இரண்டின் கலப்பு இருந்தேதான் தீரும். எனவே தூலலிங்கமான விமானத்திலும் தூலநிலையும் உண்டு. சூக்கும நிலையும் உண்டு.

சீகாழித் திருக்கோயிலின் விமானம் தனித்ததொரு சிறப்பான அமைப்பை உடையது. ஆலயக் கருவறையின் மேல் அமைந்துள்ள விமானத்தில், இடை நிலையில் தோணியப்பர் சன்னிதியும், இதற்கும் மேலுள்ள நிலையில் சட்டை நாதர் சன்னிதியும் அமைந்துள்ளன. கருவறையில் உள்ள சிவமூர்த்தம் லிங்கம் என்றும் தோணியப்பர் குரு என்றும் சட்டைநாதர் சங்கமம் என்றும் கூறி, குரு-லிங்க-சங்கம வழிபாடு ஒருசேர நடைபெறும் இடம் இத்திருக்கோயில் என ஒரு விளக்கம் தேவாரப் பதிப்புகளில் இடம் பெற்றுள்ளது. கருவறை மூர்த்தத்தை லிங்கம் என்பது சரி. ஆனால் தோணியப்பரைக் குரு என்னும் நிலையில் வைத்துக் கூறுவதும் சட்டைநாதரை சங்கமம் என்னும் நிலையில் வைத்துக் கூறுவதும் ஏற்புடையது ஆகாது. சிவபரம் பொருளை லிங்க வடிவம், குரு வடிவம், சங்கம வடிவம் என மூன்று வடிவங்களில் வழிபடலாம் என்னும் நெறிமுறையில் குரு என்பது, தனக்கு நேரே தீக்ஷையும் உபதேசமும் அளிக்கும் குருவைக் குறிக்கும்.

சங்கமம் என்பது தன் சம காலத்தில் உடன் வாழ்ந்திருக்கும் அடியார்களைக் குறிக்கும். திருஞான சம்பந்தருக்கு ஞானப்பால் அளித்து ஆட்கொண்ட காரணத்தால் தோணியப்பரைக் குருவாகக் கொள்ள லாம் எனில் ஞானப்பால் அளித்து ஆட் கொண்டமை ஓர் அற்புத அருட்பேற்று நிகழ்ச்சியே; தீக்ஷையும் உபதேசமும் ஆகிய அருட்செயல்களாக - குரு செய் தருளும் செயல்களாக அதனைக் கருத வாய்ப்பில்லை.

இத்திருக்கோயிலில் மூன்று திருச்சன்னிதிகள் ஒன்றன் மேல் ஒன்றாக அமைந்திருப்பதன் நுட்பமும் தத்துவமும் வேறு.

கீழே கருவறையில் காட்சி அளிக்கும் சிவலிங்க வடிவம் சூக்கும வடிவம்; இடைப்பட்ட தளத்தில் காட்சி அளிக்கும் தோணியப்பர் - பெரிய நாயகி, அனுக்கிரக வடிவான தூல வடிவம் (ஸௌம்ய மூர்த்தம், சாந்த மூர்த்தம் என ஆகமம் கூறும்) மேல்நிலையில் காட்சி அளிக்கும் சட்டை நாத மூர்த்தம் நிக்கிரக வடிவான தூல வடிவம்.

திருக்கோயிலில் கருவறையை அடுத்துள்ள அங்கணத்தில் அனுக்கிரக வடிவங்கள் மட்டுமே பிரதிட்டையை செய்யப்பட வேண்டும். மூன்றாவது, நான்காவது பிரகாரங்களில்தான் உக்கிர வடிவங்கள் (பைரவர், அகோர வீரபத்திரர் முதலான வடிவங்கள்) பிரதிட்டை செய்யப்பட வேண்டும்.

பிரம்மத்தான மானத்தைச் சுற்றியுள்ள தைவிகபதம், மானுஷபதம் முதலானவைகளுள்

முன்னுள்ளதைக் காட்டிலும் அடுத்து வருவது தூலம். அதாவது தைவிக பதத்தைக் காட்டிலும் மானுஷ பதம் தூலமானது. மானுஷ பதத்தைக் காட்டிலும் பைசாச பதம் தூலமானது. இதையொத்துப் பிரதிட்டைச் செய்யப்படும் வடிவங்களும் விளங்க வேண்டும்.

கருவறை மூர்த்தத்தைக் காட்டிலும், கருவறையை அடுத்துள்ள திருச்சுற்றில் காணப்படும் வடிவங்கள் தூலமானவை. மானுஷ பதத்தில் காணப்படும் வடிவங்கள், தைவிகபத மூர்த்தங்களைக் காட்டிலும் தூலமானவை; பைசாச பதத்தில் காணப்படும் வடிவங்கள் மானுஷ பத மூர்த்தங்களைக் காட்டிலும் தூலமானவை.

லிங்க வடிவத்தை நோக்க, அனுக்கிரக மயமான சாந்த வடிவம் தூலம்; சாந்த வடிவத்தைக் காட்டிலும் உக்கிர வடிவம் தூலமானது. எனவேதான் அதிகமாகத் தூலப்பட்டிருக்கும் உக்கிர வடிவங்களெல்லாம் வெளிப் பிரகாரங்களில் மட்டுமே பிரதிட்டை செய்யப்படும் நியதி ஏற்பட்டுள்ளது.

பிராகாரத் தொடர்பாக உள்ள இந்த விதிமுறை விமானத்திலும் பின்பற்றப்பட வேண்டும். கருவறையில் உள்ள வடிவத்தை நோக்க. விமானத்தின் கீழ்நிலையில் உள்ள வடிவம் தூலம்; அடுத்த மேல்நிலையில், மேலும் தூலமான வடிவம். சிவலிங்கத் திருமேனியைக் காட்டிலும் தோணியப்பர் தூலம்; தோணியப்பரைக் காட்டிலும் சட்டைநாதர் தூலம். கீழே லிங்க மூர்த்தி; அடுத்த மேல்நிலையில் ஸௌம்யமான, சாந்தமான

தூல மூர்த்தி; அதற்கும் அடுத்த மேல்நிலையில் உக்கிர மான தூல மூர்த்தி. இவ்வாறு தூல வடிவங்களுக்கு இடமாக இருக்கின்ற காரணத்தால் விமானம் தூல லிங்கம் என வழங்கப்படுகிறது.

விமானத்தின் தூலநிலை இதுகாறும் விளக்கப் பட்டது. விமானம் தூலலிங்கம் எனக் கூறினாலும் விமானத்தின் அமைப்பைக் கூர்ந்து நோக்கி அதன் சூக்குமத் தோற்றத்தையும் உணர்ந்து கொள்ள வேண்டும். விமானத்தின் அடித்தளம் அகன்றும், இடை நிலை சற்று குறுகியும், முடிநிலை மேலும் குவிந்தும் காணப்படுகிறது. தூலமாக இருப்பது மேலே செல்லச் செல்ல விரிவடைய வேண்டுமன்றோ? ஏன் குவிந்து அமைகிறது? கீழே அகன்றும் மேலே குவிந்தும் இருப்பது சூக்கும நிலைக்கு உரியதாயிற்றே; எனவே அமைப்பு முறையால் விமானம் சூக்குமம்; இடம் பெறும் வடிவங்களின் திறத்தால் விமானம் தூலம்.

சூக்கும நிலையில் விமானத்தின் அடித்தளம் நிவிருத்தி கலையையும் விமானத்தின் கலசம் சாந்தியதீத கலையையும் குறிக்கும். தூலநிலையில் விமானத்தின் அடித்தள வடிவங்கள் தூலமானவை. மேல்தள வடிவங்கள் அதி தூலமானவை. சூக்குமம் தூலமாக மாறும் போது, கண்ணாடி பிம்பம் போன்று இடம் வலமாகவும், மேலது கீழாகவும் மாறிவிடும். சூக்கும நிலையில் விமானத்தின் உச்சி, நுண்மை; அடித்தளம் பருமை. ஆனால் தூல நிலையில் விமானத்தின் அடித்தளம் நுண்மை; உச்சி, பருமை. நன்குணர்க.

எனவே திருக்கோயில் விமானம் தூலம் சூக்குமம் எனும் இருமை உடையது. தூலமாக வெளிப்பட்டிருப்பதும் சக்திமயமான திருமேனி; சூக்குமமாக உருக்கொண்டிருப்பதும் சக்தி மயமான திருமேனி. எனவே தூலம் சூக்குமம் ஆகிய **இருமையில்** சக்தி மயமான **ஒருமையை** உடையது ஆலய விமானம்.

சக்தி மயமான ஒருமையை மகுடாகமம் மிக அற்புதமாக விளக்குகிறது.

விமானத்தின் பதினாறு அம்சங்களைக் கூறி, ஒவ்வோர் அம்சமும் குறிப்பிட்ட சக்தி மயமாக விளங்கும் பான்மையைப் புலப்படுத்துகிறது மகுடாகமம் (அர்ச்சனாவிதி படலம்: 415-425).

| விமான அம்சம் | விமான சக்தி |
|---|---|
| 1. *அதிஷ்டானம்* | *ஆதாரசக்தி* |
| 2. *உபானம்* | *ஆதிசக்தி* |
| 3. *ஜகதீ* | *கிரியாசக்தி* |
| 4. *பத்மம்* | *ஜோதிசக்தி* |
| 5. *குமுதம்* | *கணசக்தி* |
| 6. *பட்டிகை* | *ஸ்தானசக்தி* |
| 7. *பங்க்தி* | *ரௌத்ரசக்தி* |
| 8. *ஸ்தம்பம்* | *போகசக்தி* |

| | | |
|---|---|---|
| 9. | பாலிகை | அனந்தசக்தி |
| 10. | கம்பம் | மனோன்மனி |
| 11. | கபோதம் | மஹாசக்தி |
| 12. | பூதமாலிகை | காலசக்தி |
| 13 | .கண்டம் | ஞானசக்தி |
| 14. | நாஸிகை | சாம்பவீசக்தி |
| 15. | சிகரம் | கல்யாணிசக்தி |
| 16. | தூபி நுனி | மஹேசுவரீசக்தி |

விமானத் திருமேனியில் அடித்தளம் தொடங்கி மேல்நிலை வரை பற்பல வகைப்பட்ட வடிவங்கள் இடம் பெற்றிருக்கலாம். ஆனால் அவை அனைத்தை யும், வடிவங்களின் தூல சூக்கும நிலைகளுக்கு அப்பாற்பட்டு சக்திமயமாகக் காட்டுகிறது மகுடாகமம். விமானத் திருமேனியில் காணப்படுபவை ஆதார சக்தி முதலான சக்திகளின் வடிவங்கள் அல்ல; அந்த அந்தத் திசைக்கும் அந்த அந்த நிலைக்கும் உரிய வெவ்வேறு இறை வடிவங்களே. எனினும், இந்த வடிவங்களைக் கொண்டிருக்கும் தூலநிலையை உள்ளடக்கிய விமானத் தின் சூக்குமநிலை, ஆதாரசக்தி முதல் மஹேசுவரி சக்தி வரை உள்ள பதினாறு சக்திகளின் மயமாகத் திகழ்வது. சக்தி மயமான சூக்கும விமான நிலையைத்தான் மகுடாகமம் காட்டுகிறது.

சக்தி மயமான ஒருமையே, பரம வியோமமாக, சிதாகாசமாக எங்கும் விரிந்து பரந்து, வெளிப்பட்டவை, வெளிப்பட இருப்பவை ஆகிய அனைத்தையும் தன்னுள் கருப்போல் அடக்கிக் கொண்டிருப்பதால் அந்த **ஒருமையின் பெருமை** அளத்தற்கு அரியது; உணர்தற்கு அரியது. அளத்தற்கும் உணர்தற்கும் அரியதாக இருந்தாலும் அந்த ஒருமையின் பெருமை சதா சர்வ காலமும் அனைத்து வடிவங்கள் வாயிலாகவும் வெளிப்பட்டுக் கொண்டே இருக்கிறது; அனைத்து ஓசைகள் ஒலிகள் வாயிலாகவும், அனைத்து நிகழ்வுகள் மூலமாகவும், தன்னைப் புலப்படுத்திக் கொண்டே இருக்கிறது. இத்தகைய வடிவங்களையும் ஒலியோசைகளையும் நிகழ்வுகளையும் விளக்குவதாகத் திகழ்வது, கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை.

*"இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்*
*கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை"*

திருஞான சம்பந்தப் பெருமானின் அவதாரத் தலமான பிரம்மபுரமும் இருமையின் ஒருமையையும் ஒருமையின் பெருமையையும் புலப்படுத்தும் தலமேயாகும். பிராகிருதத் தன்மை, அப்பிராகிருதத் தன்மை (உலகத் தொடர்புடையதான தூலநிலை, உலகத்தொடர்பு இல்லாததான சூக்குமநிலை) ஆகிய இருநிலைகளை - இருமையைக் கொண்டிருப்பது பிரம்மபுரம். பிராகிருதம், அப்பிராகிருதம் என்னும் இருநிலைகளாகவும் வெளிப்பட்டிருப்பது சிவசக்தி யாகிய ஒருமையே. சிவசக்தியே நிவிருத்தி முதலான **கலைகள் வாயிலாகப்** பிராகிருதமாகவும், **தானே**

அப்பிராகிருதமாகவும் வெளிப்படுகிறது. எனவே சிவ சக்திமயமான ஒருமையின் பெருமையும் பிரம்ம புரத்தால் உணர்த்தப்படுகிறது.

இருமையின் ஒருமை, ஒருமையின் பெருமை ஆகிய அணுகுமுறையை ஏனைய தலங்களுக்கும் கொள்வதில், -அத்தலம் பாடல் பெறாத தலமாக இருந்தாலும் கூட - தவறு ஏதும் இல்லை. ஞானப் பின்னணி, மனப்பக்குவம், மனோபாவம் - இவை வாய்க்கப் பெற்ற யோக சாதகர்க்கு எந்த இடமும் புண்ணியத் தலமே. ஒரு தலத்தை, அதன் தூலநிலையை நோக்காமல் சூக்கும நிலையை உணர்ந்து கொண்டு தன் தூல உடலோடும், சூக்கும உடலோடும் ஆன்மாவுடனும் இணைத்துக் கொண்டு ஆத்மானுபவமாக உணரும் போது அந்தத் தலம் முழுவதுமே ஞானத் திரளான, சிதானந்த மயமான சிவபரம் பொருளாகவே காட்சி அளிக்கும். இவ்வாறு திருஞானசம்பந்தர் சிவானுபவம் பெற்றதால்தான் அவரது திருப்பதிகங்களுள் பெரும்பாலானவை தல நிலையையே போற்றுவனவாகத் திகழ்கின்றன. இவரது திருப்பதிகங்களில் கூட இருமையின் ஒருமையையும் ஒருமையின் பெருமையையும் நன்கு உணர்ந்து அனுபவித்தவர் அருணகிரிப் பெருமான்.

*"என்பந்த வினைத்தொடர் போக்கிவி சயமாகி*
*இன்பந்தனையுற்று மகாப்ரியம் அதுவாகி*
*அன்புந்திய பொற்கிணி பாற்கடல் அமுதான*
*அந்தந்தனில் இச்சைகொளாற்பதம் அருள்வாயே*

*முன்புந்தி நினைத்துருவாற் சிறு வடிவாகி*
*முன் 'திந்தி' எனப் பரதாத்துடன் நடமாடித்*
*தம்பந்தம் அறத்தவ நோற்பவர் குறைதீரச்*
*சம்பந்தன் எனத் தமிழ் தேக்கிய பெருமாளே"*

என்பது திருப்புகழ். சிவ-சக்தி மயமான அருள் தமிழைத் தேக்கி அணை கட்டியவர் திருஞான சம்பந்தர். இந்த அருள்தமிழ் ஒவ்வொரு தலத்தின் பிராகிருத நிலையையும் அப்பிராகிருத நிலையையும் புலப்படுத்துகிறது. இந்த இரண்டு நிலைகளை உண்மை யிலேயே வெளிப்படுத்துவது எது? தோணிபுரப் பெரிய நாயகிப் பிராட்டி, ஞானசம்பந்தப் பெருமானுக்குப் பொற்கிண்ணத்தில் கொடுத்து ஊட்டி அருளிய ஞானத்திரளான திருமுலைப்பால் அன்றோ இவை அனைத்தையும் வெளிப்படுத்துகிறது!

மேலோட்டமாகப் பார்ப்பதற்கு வைகரி வாக்காகவும் ஆழ்ந்து நோக்குமிடத்துப் பரைவாக்காக வும் வைகரி, பரை ஆகிய இருமையில் காட்சி அளிக்கும் திருப்பதிகங்களுள் அனைத்திலும் தேங்கிக் கமழ்ந்திருப்பது சிவசக்தி மயமான திருமுலைப்பாலின் ஒருமை. இந்த ஒருமையின் பெருமையை உணர்த்து கிறார் அருணகிரிநாதப் பெருமான்.

*"கயிலையாளர் ஓர்பாதி கடவுளாளி லோகாயி*
*கனதனா சலாபார அமுதூறல்*
*கமழும் ஆர ணாகீத கவிதை வாண வேல்வீர*
*கருணைமேரு வேதேவர் பெருமாளே"*

('அயிலின்வாளி' – திருப்புகழ்)

*(கனதனாசலாபார அமுதூறல் - திருமுலைப் பால்; இப்பாலின் மணம் கமழும் ஆரண கீத கவிதை - தேவாரம்)*

திருஞானசம்பந்தப் பெருமானின் திருப்பாடல்களில் எதனை முக்கியமாக உணர்ந்து அனுபவிக்க வேண்டும் என அருணகிரிப் பெருமான், சித்தகுருவாக இருந்து வழிகாட்டுகின்றார். அவ்வழி நின்று உணர்ந்ததன் விளைவாகவே இதுகாறும் கூறப்பட்டுள்ள உரைக்கோவைகள் அமைந்துள்ளன. மேன் மேலும் இவையொத்த அருளனுபவங்களைப் பெருமான் அருள வேண்டும். சிவம்.